# வேதாரண்யம்

## ப்பு சத்தியாக்கிரகச் சரித்திரம்



ராஜாஜி

ஜி. ராமசந்திரன்

டி. ஆர். பத்மனாபன்



துர்பா காந்தி குருகுலம்

மகராஜபுரம், வேத

குருகுலம் வெளியீட்டு எண். 1

நூலின் பெயர் : வேதாரண்யம் உப்புச்சத்தியாக்கிரகம்

ஆசிரியர் : ராஜாஜி, ஜி. ராமச்சந்திரன்,
டி. ஆர். பத்மந

பொருள் : இந்திய சுதந்திரப்போராட்டம்

வெளியிட்டோர் : கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம்
வெளியீட்டுப்பகு

அச்சிட்டோர் : குருகுலம் பிரிண்டர்ஸ், வேதாரண்யம்.

பதிப்பு : முதற்பதிப்பு 1950 சுதந்திரதினம்
இரண்டாம்பதிப்பு சர்தார் வேதரத்ன
17-வது நினைவுநாள் 24—8—19

பிரதிகள் : 1000

விலை : ரூ. 10

Gurukulam Publication No. 1

Title : Vedaraniam Uppu Sathyagraham

Author : Rajaji, G. Ramachandran,
T. R. Padman

Subject : Freedom Movement of India

Publishers : Kasthurba Gandhi Kanya
Gurukulam Publication Di

Printers : Gurukulam Printers, Vedarania

Edition : I Edition 1950 Independance d
Edition Sardar Vedaratnam's
17th Anniversary 24—8—

Copies 0

Pri s. Ten

உப்புப் போரில் ஈடுபட்ட தொண்டர் அனைவருக்கும்

இந்நூல் சமர்ப்பணம்.

# அறிமுகம்

'அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டி, குறுகத் தறித்த குறள்' என்று குறளைப்பற்றி நாம் அறிந்திருக் கிறோம். எதுவும் மதிப்பில்லாததை உப்புப்பெறாத விஷயம் என்பார்கள். அத்தகைய மதிப்பற்ற உப்பினுள் பிரம்மாண்ட மான நம் தேசத்தின் சுதந்தரத்தைப் புகுத்தி உலகம் கண்டு கேட்டறியாத ஓர் பேரியக்கமாக்கி, இந்நாட்டின் குழந்தைமுதல் வயோதிகர் ஈறாக, பாமரர் முதல் பண்டிதர் வரை, பரம ஏழை முதல் பெரிய தனவந்தர் உள்பட ஜாதி, மத, வகுப்பு வர்க்க வித்தியாசமின்றி இருபாலரும் ஈடு படச் செய்த முதல் பொதுஜனப் பேரியக்கமாகும், அண்ணல் காந்தி அடிகள் வகுத்த சுதந்தரப் போர்களுள் முதன்மை யான இந்த உப்புப் போர். இதைத்தான் நமது ஆஸ்தானக் கவிஞர் ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளை "கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது" எனச் சிறப்பித்துப் பாடினர்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் பறிபோயிருந்த தர்ம ராஜ்யத்தை மீண்டும் ஸ்தாபிக்க அந்தப்போரில் ஈடுபட்டி ருந்த அர்ஜுனனுக்கு அன்று ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா என்ன உபதேசம் செய்தாரோ அதே உபதேசத்திற்கிணங்க இப்பால் நடந்த சத்தியப்போரில் அனைவரையும் கிரியாம்சை யில் ஈடுபடச் செய்தார் நம் காந்தி மகாத்மா.

உப்புப் போரில் ஈடுபட வந்தவர்களுக்கு, தாங்கள் எத்தகைய பயங்கரமான கஷ்டங்களுக்கு ஆளாக வேண்டு மென்பது முன்னமே நன்றாகத்தெரியும். நவீன யுத்த முறையில் குண்டடிபட்டு ஒரு நொடியில் உயிர் துறப்பதைக் பார்க்கிலும் உயிரும் பிரக்ஞையும் இருக்கையில் சித்திரவதைக்கு ஆளாவ தென்பது எவ்வளவு சிரமம் என்பதைக் கூறத் தேவையில்லை. அத்தொண்டர்கள், இதற்காக மனம் கலங்கினர்களில்லை.

---

"அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டி....'என்றும் பாடம்.

இப்போரில் சேர முன்வந்தவர்கள் சாமான்யமானவர்களல்ல. தங்கள் வாழ்க்கையில் நல்ல சுகபோகங்களை அனுபவித்து வந்த போதிலும், அவ்வின்பத்தில் ஆசையைத் துறந்து இதில் கலந்து கொண்டனர். சத்தியாக்கிரகிகளை அடக்க ஆயுதபாணிகளாய் அணி வகுத்து நின்ற போலீஸ் படையைப் பார்ப்பவர்களே கதி கலங்குவார்கள். அப்போலீஸ் வியூகங்களைத் துளைத்துச் செல்லும் அஞ்சாநெஞ்சும், சிறு எறும்பும் மிதித்தவரைத் திருப்பிக் கடிக்கும் இயற்கை வாய்ந்த இவ்வுலகில் போலீஸாரால் எவ்வளவு ஆத்திர மூட்டப்பெற்ற போதிலும், இம்சிக்கப்பட்ட போதிலும், அச்சமும் சினமும் தவிர்த்த ஸ்திர புத்தியும் உடைய தொண்டர்களைக் கொண்டு சபர்மதி ஆசிரமத்திலிருந்து தண்டி யாத்திரைக்கு மகாத்மா புறப்பட்ட பொழுது அன்னாரின் பாஷ்யக்காரரான ராஜாஜியும், அதேபோன்ற நூறு தொண்டர்களை அழைத்துக் கொண்டு, தாயுமானவர் க்ஷேத்திரமாகிய திருச்சிராப்பள்ளியிலிருந்து 150மைல்களுக்கு அப்பால், தாயுமானவர் தோன்றிய திருமறைக்காடு என்னும் வேதாரண்யத்திற்கு நடந்து சென்றார்.

இருபது ஆண்டுகளுக்கு முன் இது நடந்தபோதிலும் அதில் பங்கு கொண்டார் பலர் இன்றில்லை. இப்போரை முழுதும் பார்த்தறிந்தவர்களும், பிற்கால இளைஞர்களுக்கு எடுத்துரைக்கப் பலர் இல்லை. இந்நிலையில் உலகப் பிரசித்தி பெற்ற இப்போரின் சரித்திரம் சுவடு தெரியாமல் மறைந்து விடுமோ என அஞ்சியிருந்த சமயத்தில் வேதாரண்யம் உப்புச் சத்தியாக்கிரகப் போரைத் தலைமை தாங்கி நடத்திய ராஜாஜியாலேயே 1935-ஆம் வருடம் நிகழ்ந்த காங்கிரஸ் மணி விழாவின்போது 'ஹிந்து' பத்திரிகையில் இதுபற்றி எழுதிய ஆங்கிலக் கட்டுரை ஒன்று கிடைத்தது. இப்புனித சரித்திர விவரத்தை இதன் மூலமாகவாவது நிலைபெறச் செய்ய எண்ணி இதை மொழிபெயர்த்து வெளியிட முன்வந்தோம். ஆகையால் இதுவே இதன் மூலநூலாகும். இதை வெளியிட 'ஹிந்து' பத்திராதிபரும்

மனம் உவந்து அனுமதி தந்தார்கள். எனது பால்ய நண்பரும், பாரத தேவி உதவி ஆசிரியருமான ஸ்ரீ த. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் தமிழில் மொழிபெயர்த்து உதவினார்கள். அத்துடன் இந்நூலை வெளியிட எல்லாப் பொறுப்பையும் எடுத்துக்கொண்டு உதவியவரும் அவரே. மேன்மை தங்கிய கவர்னர் ஜெனரல் ராஜாஜி அப்போது தமக்கிருந்த பெரும் பொறுப்புகளுக்கிடையே தம் கட்டுரையின் மொழி பெயர்ப்பைத் தாமே பார்த்து வெளியிட அனுமதி தந்தார்கள்.

இப்பெரும் சரித்திரத்தைப்பற்றிய இச்சிறு கட்டுரையை மாத்திரம் வெளியிட மனம் இடம் தரவில்லை. எனவே ராஜாஜியின் வலக்கரம் போன்று இருந்து, இப்போரிலும் அவருக்கு அடுத்த தலைவராக அன்றாலேயே நியமனம் பெற்றவரும், இப்போது நம் ரெயில்வே மந்திரியாக இருப்பவருமாகிய கனம் க. சந்தானம் அவர்களை அணுகினோம். அவர் மனம் உவந்து தந்தது இதன் முன்னுரையாகும். இத்துடனும் எங்கள் மனம் திருப்தியடையவில்லை. ஏனெனில் ராஜாஜி சிறை சென்றபின் அடுத்தபடியாக நாலைந்து தினங்களில் சந்தானம் அவர்களும் கைது செய்யப்பட்டார். அன்றே அன்னாருடன் சிறை செல்லும் பேற்றை யானும் பெற்றேன். அதற்குப் பிறகுதான் போராட்டம் முற்றியது. சத்தியாக்கிரகத்தின் நெருக்கடியான கட்டத்தில் நேரில் இருந்தவர்கள் அதன் முழு விவரத்தையும் தந்தால் நலமாக இருக்குமென்று கருதினோம். அகிலபாரத கிராம கைத்தொழில் சங்கக் காரியதரிசி ஸ்ரீ ஜி. ராமசந்திரன் அவர்கள் தான் மேற்படி சத்தியாகிரகத்தின் கடைசி சர்வாதிகாரி. இவர் வேதாரண்யத்தில் போராட்டம் துவக்குமுன்பிருந்து இறுதி வரை எல்லாவற்றையும் நேரில் அறிந்தவராகையால் அவரை நாடினோம். அன்னாரும் மகிழ்ச்சியுடன் தாம் எழுதி வைத்திருந்த குறிப்பே இருப்பதாகவும் அதைக்கொண்டு முழுவிவரங்களும் எழுதித்தருவதாகவும் ஒப்புக்கொண்டார். ஆனால் எங்கள் துரதிர்ஷ்டம் அந்தக் குறிப்பு காணாமல்

போய் விட்டது. மனதில் வைத்திருந்த குறிப்பைக் கொண்டே எழுதியளித்தது இதன் அனுபந்தமாக விளங்கு கிறது.

இவ்வாறெல்லாம் நம் காலத்திலேயே நம் எதிரில் நடந்த ஒரு சம்பவத்தின் சரித்திரத்தினைத் தேடி அலைகையில் புராதன சரித்திரங்களையும், இலக்கியங்களையும் தேடி வெளியிட்டவர்களின் அருமை எங்களுக்குப் புலப்பட லாயிற்று. இந்நிலைமையில் நான்மாடக் கூடல் அன்பர் ஸ்ரீ நா. ம. ரா. சுப்பராமன் அவர்கள் மூலம் மதுரையம் பதியி லுள்ள சத்தியாக்கிரத் தொண்டர் படையுடன் கூடவே யிருந்த ஸ்ரீ. டி. ஆர். பத்மநாபன் அவர்களிடம் இருந்த முழு விவரம் அடங்கிய தினசரிக் குறிப்புக் கிடைத்தது. இதைப் பார்த்ததும் பழைய இலக்கியங்களைத் தேடியலைந்த டாக்டர் மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாத ஐயர் அவர் களுக்குச் சங்க நூல்கள் கிடைத்தபொழுது எவ்வளவு சந் தோஷம் ஏற்பட்டிருக்குமோ அவ்வளவு ஆனந்தம் எங் களுக்குக் கிட்டியது. ஸ்ரீ பத்மநாபன் அவர்கள் விளம்பர அதிகாரியாக இருந்து இக்குறிப்பை எழுதி வைத்திருந்தது எங்களுக்கு முன்னமே தெரிந்த போதிலும், இத்தனை ஆண்டுகளாக இதைப் போற்றி எப்படி வைத்திருக்கப் போகிறார் என்றிருந்தோம். 1939-ஆம் ஆண்டில் இதனைப் பிரசுரிக்க முயன்று, தினமணி பத்திரிகையிலும் சில அத்தி யாயங்கள் வெளி வந்தன. இதனிடையே மகாயுத்தம் தோன்றிவிட்ட காரணமாக வந்த காகிதக் கட்டுப்பாட்டு உத்தரவால் அது மேலும் தொடர்ந்து பிரசுரிக்கப்படாது தடைப்பட்டுவிட்டது. எதற்கும் உரிய காலம் வரவேண்டும் அல்லவா? 'அடுத்து முயன்றாலும் ஆகு நாளன்றி எடுத்த கருமங்கள் ஆகாவன்றே?' எங்கள் இம்முயற்சிக்கு ஸ்ரீ பத்மநாபன் அவர்களுடைய இருபது ஆண்டுகட்கு முந்திய சேவை இன்று எவ்வளவு சிறந்த தொண்டு ஆயிற்று என் பதை எவ்வாறு அளவிட்டுக் கூறமுடியும்? அன்னார் தொண்டர்படையுடன் சென்ற இடத்தில் நடந்தவற்றைப் பற்றிய குறிப்புக்களை எழுதியதுடன் அப்போது அவர்

உள்ளத்தில் தோன்றிய உணர்ச்சிகளையும் வியாக்கியானங்களாக வரைந்துள்ளார். அவை அனைத்தையும் வெளியிடுவதானால் புத்தகம் மிகவும் விரிந்துவிடும். இப்போதுள்ள காகித விலை, பிற பெரும் செலவினங்களை யோசித்து விரிவஞ்சி எங்கள் பொருளாதார நிலைக்கு ஒப்ப, அன்னார் அனுமதி பெற்றே உணர்ச்சிததும்பும் அவ்வியாக்கியானங்களை விடுத்து—இது எங்களுக்கே மகிழ்ச்சி அளிக்கவில்லையாயினும்—சரித்திர சம்பந்தமான குறிப்புக்களை மட்டும் வெளியிடுகிறோம்.

இன்னும் இதை வெளியிட சத்தியாக்கிரகப் படையின் யாத்திராமார்க்கத்தில் எடுத்த புகைப்படங்களை இந்த இருபதாண்டுகள் காப்பாற்றித் தந்துதவிய ஆனந்த விகடன் உதவி ஆசிரியர் ஸ்ரீ கே. அருணாசலம் அவர்களும், திருவையாறு கதர்த் தொண்டர் ஸ்ரீ நடராஜன் அவர்களும், கோவை ஜில்லா மேட்டுப்பாளையம் ஸ்ரீ ராஜா அவர்களும் ஆவார்கள். இதன் அச்சுப்பிழை முதலியவற்றைத் திருத்தித் தந்தவர் கலைமகள் உதவி ஆசிரியர் 'ஆர்வி'. மேலட்டைப் படம் உதவியவர் ஆசிரியர் 'கல்கி' அவர்கள். இவ்வாறு எல்லாம் உதவிய இப்பேரன்பர்களுக்கு நாங்கள் என்ன கைம்மாறு செய்ய இயலும்? எங்கள் உளம் நிறைந்த நன்றியை வணக்கத்துடன் சமர்ப்பிக்கிறோம்.

இந்நூலினுள் புகுந்து பார்க்கும் அன்பர்கள் சிலருக்கு யாத்திரை மார்க்கத்தில் விருந்துபசார விபரம் ஒருகால் அளவுக்கு அதிகமாகத் தோன்றலாம். அதற்குக் காரணம் இப்போரை அடக்க பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் முதற் படையெடுப்பாகத் தொண்டர் கோஷ்டிக்கு உணவு கிடைக்காமல் செய்து, பட்டினி போட்டு, முறியடித்துப் புறமுதுகு காட்டச் செய்யலாமென்று முனைந்ததேயாகும். இம்முயற்சியில் அதிகார வர்க்கம் எவ்வளவுக்கு எவ்வளவு தீவிரமாக இறங்கிற்றோ அவ்வளவுக்கு அவ்வளவு உபசார விருந்துகளும் தீவிரமாயிற்று என்பதேயாம்.

இச்சரித்திர சம்பந்தமான பல சம்பவங்கள் குறிப்பிடப் படவில்லை. ஏனெனில் ஸ்ரீ பத்மநாபன் அவர்களும் ஏனை யோரும் தாங்கள் நேரில் அறிந்தவற்றைமட்டுமே வெளி யிட்டுள்ளார்கள். சத்தியாக்கிரகப் போர் துவங்குமுன் வேதாரண்யம் வந்த பயனீர் படையைச் சேர்ந்த ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மீபதி, ஸ்ரீமான்கள் ஜி. ராமச்சந்திரன், ஹரிஹர சர்மா, கே. எஸ். சுப்பிரமண்யம், அண்ணாமலைப் பிள்ளை, சி. வி. ராஜகோபாலாச்சாரி இவர்கள் செய்த மகத்தான சேவை காரணமாக அங்கு அழகிய முகாம் அமைந்ததுடன் சத்தியாக்கிரகம் துவங்கியபின், வேதா ரண்யத்திலும், சுற்றுப்புறக் கிராமங்களிலும் சத்தியாக்கிரகத் தொண்டர்களைப் பகிஷ்கரிக்கச் சொன்ன அதிகார வர்க்கத்தையே பொதுஜனங்கள் அடியோடு பகிஷ்கரித்து விட்டனர். நாவிதர் முதல் வர்த்தகர்கள், தனவந்தர்கள் ஈருக சகலரும் சகல உதவிகளையும் அவர்களுக்கு மறுத்து விட்டனர். இதனால் அதிகார வர்க்கம் அடைந்த சங்கடங் கள் வர்ணனையில் அடங்கா.

வேதாரண்யத்தைச் சுற்றியுள்ள பல கிராமங்களில் அமைந்திருந்த முகாம்களின் சரித்திரங்களும், சத்தியாக் கிரக முகாமைக் காலி செய்து அதைப் பறிமுதல் செய்து பிரித்தபின் ரெயில் மார்க்கத்தில் வந்த தொண்டர்களை வேதாரண்யத்திற்கு வரவொட்டாது தடுக்கவே, அவர்கள் குறுக்குப் பாதை வழியாய், கிராமங்கள் மார்க்கம் வந்து சத்தியாக்கிரகம் செய்த தொண்டர்களுக்கு உணவு கிடைக் காமல் செய்ய அரசாங்கம் எடுத்துக்கொண்ட முயற்சிகளும் இதில் வரவில்லை. ஆலமரங்களும் தேர்முட்டிகளும் விருந் தளித்ததுபோன்ற பல நகைச்சுவை ததும்பும் காட்சிகளும் இதில் வரவில்லை. சத்தியாக்கிரகிகள் முகாம்களைக் கலைத்து விட்டு ஊர் திரும்புகையில் அரசாங்கத்தார் அவர்கள் உணவு முதலிய வசதிகள் பெறுவதை விரும்பவில்லை. ஊருக்கு ஊர் சென்று சாப்பாடு போடுவதைத் தடை செய்தார்கள். ஆனால் சத்தியாக்கிரக தத்துவமே ஜனங்களின் அன்பை

அஸ்திவாரமாகக் கொண்டது. ஆணிவேரும் சல்லிவேரு மாகப் பூமியில் பதிந்து பெரிய மரமாக ஓங்கி வளரும் தன்மையுடையது. மேலே மரம் எவ்வளவு பெரிதாக இருக் கிறதோ அதேபோலக் கீழே அன்பு வேர் பரந்து பாய்ந் திருக்கிறது. எனவே அரசாங்கத்தின் முயற்சியை வீணுகச் செய்ய அவர்கள் வேறு உபாயத்தைக் கைக்கொண்டார்கள். சாலையில் லோகல்பண்டு மரங்களுக்கு நம்பர் போட்டிருப் பதை நாம் அறிவோம். "42-ஆம் நெம்பர்" என்று தொண்டர்களுக்குத் தெருவோடு போகிற ஒருவர் சொல்லி விட்டுப் போவார். 42-ஆம் நெம்பர் ஆலமரத்தில் சாப்பாடு மூட்டை மூட்டையாகத் தொங்கும். கிராமங்களில், தெருவில் சாப்பாடு போடாமல் தொண்டர்களுக்குச் சாப்பாடு எங் கிருந்து கிடைக்கிறது என்று போலீசாருக்கு ஆச்சரியமாய் இருந்தது. ஜனங்களின் உள்ளன்பையும் ஆதரவையும் கொண்டு நடக்கும் ஒரு சத்தியப் போராட்டத்தில் இன்று படிக்கும்போது நகைச்சுவையை அளிக்கும் சம்பவங்களும் நிகழத்தான் நிகழ்ந்தன. வேதாரண்யம் தேர்முட்டியில் நடந்தது ஒன்றைமட்டும் குறிப்பிட விரும்புகிறேன். படி களில் போலீஸார் காவல் காத்து உட்கார்ந்திருக்க, தொண்டர்களுக்குப் பின்புறத்திலிருந்து ஆகாரம் கயிறு கட்டி ஏற்றப்பட்ட வேடிக்கையை நினைத்தால் போலீஸாரின் ஏமாற்றத்தைக் கண்டு இன்று நமக்குச் சிரிப்புத்தான் வரும். இயக்கத்தை முறியடித்துவிடலாம் என்று போலீஸார் ஏமாந்தார்கள். தொண்டர்களைப் பயமுறுத்தி அடித்து விரட்டி விடலாம் என்று ஏமாந்தார்கள். ஆகாரம் கொடுக் காமல் சத்தியாக்கிரகத்தைத் தடைசெய்துவிடலாம் என்று எண்ணி ஏமாந்தார்கள். அவர்கள் என்ன, தஞ்சை கலெக்டர் முதல் பிரிட்டிஷ் பிரதம மந்திரிவரை ஏமாந்து தானே போனுர்கள்!

இதைச் சிறு நூலாக வெளியிடத் துவங்கி. அச்சுத் தவக்கத்தால் கிடைத்த அவகாசத்தில் கொஞ்சம் கொஞ்ச மாக வளர்ந்து, இது பெரு நூலாகிவிட்டது.

வேதங்கள் பூஜித்து, சமயாசாரியர்கள் பாடி மறைக் கதவினைத் திறந்து, நசிகேதன் போன்ற மகரிஷிகள் தவம் புரிந்து, பரஞ்சோதி, தாயுமானுர் போன்ற பெரியோர்கள் பிறந்து புனிதமாக்கிய இப்புராதன க்ஷேத்திரத்தை நவீன காலத்திலும் இதைச் சத்தியப் போரின் குருக்ஷேத்திரமாக்கி, அதற்குப் புது மெருகு கொடுத்து, அதன் ஒளியை மங்காது என்றும் எங்கும் பிரகாசிக்குமாறு செய்த இத்திருமறைக் காட்டில் நிகழ்ந்த வேதாரண்யம் உப்புச் சத்தியாக்கிரகச் சரித்திரத்தை இங்கு பிரசுரிக்கின்ருேம்.

அ. வேதரத்னம்

# பொருளடக்கம்

# முன்னுரை

காந்தியடிகள் நடத்திய சுதந்திரப்போரில் உப்புசத்தியாக்கிரகமே மிகவும் முக்கிய கட்டம். அதோடு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் உண்மையில் முடிந்துவிட்டது. 1934-35 தேர்தல்களில் வெற்றி, முதல் காங்கிரஸ் மந்திரிசபைகள், 1940-45 இயக்கங்கள் 1947-ல் பூர்ண சுதந்திரம் இவையனைத்தும் உப்பு சத்தியாக்கிரகத்தின் பலன்களேயாவன.

உப்பு சத்தியாக்கிரக இயக்கத்தைப்பற்றித் தர்க்க முறையில் வாதித்தால் அதன் பெருமை புலப்படாது. பிரிட்டிஷ் அரசாங்கத்தால் மனோதைரியத்துடன் இஷ்டப்பட்டவர்கள் தாராளமாக உப்பு எடுத்துக்கொள்ள அனுமதிக்கவாவது, அல்லது உப்பு வரியை ரத்து செய்யவாவது தீர்மானித்திருந்தால் என்ன முடிவு ஏற்பட்டிருக்கும் என்றுகூற முடியாது. உடனே சமாதானமேற்பட்டிருக்கலாம். அல்லது புதியதோர் இயக்கம் தோன்றியிருக்கலாம்.

கோடிக்கணக்கான மக்கள் பலாத்காரத்தை மனப்பூர்வமாக விலக்கி உயர்ந்த லக்ஷ்யத்திற்கு ஒற்றுமையுடன் தியாகம் செய்யமுடியுமென்பதை உப்பு சத்தியாக்கிரகம் நிரூபித்தது. திருச்சியில் புறப்பட்டு வேதாரண்யம் போய்ச் சேரும்வரையில் தமிழ் மக்கள் எங்கும் மனிதக்கடல் பொங்கியதுபோல் கூடித் தொண்டர் குழாத்திற்கு அன்பும் ஆதரவும் அளித்த விமரிசையை வர்ணிக்க முடியாது.

அதே உணர்ச்சியையும், ஒற்றுமையையும் புது யுக நிர்மாணத்தில் நாம் திரும்பவும் உற்பத்தி செய்யவேண்டும். வேதாரண்ய சத்தியாக்கிரகத்தில் தலைமை பூண்ட தலைவர் சுதந்திர இந்தியாவின் தலைவராக இருக்கிறார். காந்தியடிகளின் கொள்கைகளை நாட்டில் நிலை நிறுத்தக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார். முன்போல் தேசபக்தர்கள் அவரைப் பின்பற்றி, நாட்டின் முன்னேற்றத்திற்குத் தடையாகவிருக்கும் தீமைகளைத் தாக்கி வெற்றியடைவார்களாக!

— கு. சந்தானம்

# பதிப்புரை

குருகுலத்தின் முதல் புத்தக வெளியீடாக 1950-ம் ஆண்டு சுதந்திர தினத்தன்று வேதாரண்யத்தில் நடந்த மகத்தான தேசீய விடுதலைப் போராட்ட வேள்வியின் சரித்திரத்தைக் குருகுல ஸ்தாபகர் சர்தார் வேதரத்னம் அவர்கள் வெளியிட்டார்கள்.

இப்புத்தகம் ஒரு முக்கியமான சரித்திர நிகழ்ச்சிகளைக் கொண்ட சிறந்த தொகுப்பாக வந்திருக்கின்றது. இப்புத்தகத்தில் அமரர் ராஜாஜி அவர்களும் உப்பு சத்தியாக்கிரகத்தில் முக்கிய பங்கு பெற்ற திரு. க. சந்தானம் அவர்களும் தற்காலம் தமிழ் நாட்டில் தலைசிறந்த நிர்மாண ஸ்தாபனமாக விளங்கும் மதுரை மாவட்டத்திலுள்ள காந்தி கிராமத்தின் கிராமீயப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராக இருக்கும் திரு G. ராமச்சந்திரன் அவர்களும் தங்களுடைய நினைவுகளை எழுதியிருக்கின்றார்கள். காலங்கள் கடந்த நிலையில் பழைய சரித்திரத்தை நினைவு கூர்வதே ஒரு உணர்ச்சி யூட்டுவதாக இருக்கின்றது.

இவ்வரிய புத்தகத்தினைப் பலரும் கேட்டு வருகின்றார்கள். கைவசம் பிரதிகள் தீர்ந்து விட்டபடியால் அதன் இரண்டாம் பதிப்பை உப்புச் சத்தியாக்கிரகப் போரின் ஆணிவேராக நின்று இயக்கம் முழு வெற்றியுடன் நடந்தேறுவதற்கு வேண்டிய அனைத்தை

யும் செய்த உணவிற்கு உப்பைப் போன்று வெளி உலக ஆரவார அரசியலுக்கு வெளித் தெரியாமல் இயக்கத்திற்கு உயிரூட்டிய காலம் சென்ற சர்தார் அ. வேதரத்னம் அவர்களின் மறைந்த 17-ஆம் நினைவு நாளான இன்று வெளியிடுவதில் நாங்கள் பெரிதும் மன நிறைவை அடைகின்றோம். சர்தார் என்ற பட்டம் காங்கிரஸ் மகாசபையினால் உப்புச் சத்தியாக்கிரக இயக்கத்தைச் சிறப்பாக வெற்றி பெற நடத்தியதற்காக 1931-ஆம் ஆண்டு திருநெல்வேலி மாவட்டத்தில் நடந்த விவசாயிகள் மகாநாட்டில் அவர்களுக்கு அளிக்கப் பெற்றது. காங்கிரஸ் இயக்கத்தில் மிக ஊக்கமுடன் தீவிரமாக ஈடுபட்டு செயல் திறனுடன் இயக்கத்தை நடத்தியமைக்காக தென்னாட்டில் சர்தார் வேதரத்னம் அவர்களுக்கும் பர்தோலி சத்யாக்கிரகத்தை நன்கு நடத்தியதற்காக சர்தார் வல்லபாய்பட்டேல் அவர்களுக்கும் தான் மக்களால் ஏகோபித்து "சர்தார்" என்ற பட்டம் வழங்கப்பெற்று அது இன்றளவும் நிலைத்து நிற்கின்றது.

இப்புத்தகத்தை அனைவரும் நன்கு படித்துக் குறிப்பாக இளம் தலைமுறையினர் நன்கு படித்து விடுதலைப் போராட்டத்திற்காக மக்கள் அன்று ஏற்றுக் கொண்ட பெரும் தொண்டையும், தியாகத்தையும் நாம் போற்றி வணங்குவோமாக.

வே. அப்பாக்குட்டி,
மானேஜிங் டிரஸ்டி.

# காங்கிரஸ் பாலியம்



இந்தியாவின் சுதந்திரப் போராட்டச் சரித்திரத்தை அறிய காங்கிரசின் வரலாற்றை அறிந்தாலே போதும். ஏனெனில் இந்திய தேசிய இயக்கமே காங்கிரஸாகவும், அதன் சரித்திரமே தேசிய இயக்க வரலாருகவும் இருப்பதினுல்தான்.

காங்கிரஸ் ஏற்பட்ட முதல் இருபது வருஷங்களில் அது நிர்வாக, நீதி இலாகா பிரிவினையையும் வேறு சில துரைத்தன சீர்திருத்தங்களையும் கேட்டு வந்தது. ராஜாங்கத்தின் எல்லாத் துறைகளிலும் இந்தியர்களே மேற்பதவிகளில் இருக்கவேண்டுமென்பதே அதற்கு அன்றைய உடனடியான லட்சியம். அப்போது தான் தேசத்திற்குச் சௌரவம் என்றும் அது நினைத்தது. அத்துறையில் அவ்வப்போது கிடைத்துவந்த வெற்றிகளை அது தன் பெரும் சாதனைகளாக அன்று கருதி வந்தது. ஒருவாறு இந்தியா இந்தியருக்கே என்ற கொள்கையை மேலிடத்தாரும் ஏற்றனர். அதுவும் கிளர்ச்சி செய்த பின்புதான். அந்த அங்கீகாரத்தையும் அரை மனதுடன்தான் தந்தனர்.

## பொருளாதார விடுதலை

தன் முப்பதாம் பிராயத்தில் காங்கிரஸ் பொருளாதார விஷயத்தில் கவனம் செலுத்தத் தொடங்கியது தேசம் முன்னேற உத்தியோகங்கள் இந்தியர் மயமானல் போதாது, அதன் வர்த்தகம், தொழில் அபிவிருத்தி பெருக்கத்தில்தான் முன்னேற்றம் இருக்கிறது என்பதை இந்தியா அப்போது அறிந்தது. எனவே 'சுதேசி' நம் தேசிய இயக்கத்தின் பிரதான தாரகமானதுடன் உடனடி லட்சியமுமானது. தேசபக்திக்கு அடையாளமாக அதுவே உரைகல்லானது. சாத்வீக இயக்கத்துக்கு உயிராகவும் இருந்து வந்தது.

சகல மேல் உத்தியோகங்களிலும் இந்தியர்கள் இருந்தாலே தேசத்துக்குக் கௌரவக் குறைவு இல்லாதிருக்கும் என்ற நினைப்புப்போய், நாட்டின் செல்வ விருத்தியில் கவனம் செல்ல ஆரம்பித்ததும், காங்கிரஸின் போக்கே விரிவாயிற்று. தேசத்தின் ஐச்வரிய முன்னேற்றத்துக்கு இந்தியாவின் அரசியல் விடுதலை அத்தியாவசியம் என்பது அப்போது தெளிவாயிற்று. எனவே பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலுள்ள இதர டொமினியன்களைப்போலத் தானும் சுயாட்சி பெற்று சம அந்தஸ்தில் டொமினியனாக வேண்டுமென்ற நோக்கம் காங்கிரசுக்கு உதித்தது. பல போராட்டங்களின் பின்பு சுதேசி இயக்கமும் வெற்றி அடைந்தது.

ராஜத்துவேஷமென்றும், பொருளாதாரப் புரட்டென்றும் ஆரம்பத்தில் ஏசப்பட்ட சுதேசி இயக்கத்தை, இந்தியாவின் உரிமை என மேலிடத்தார் பின்பு மெதுவாகவும், மனக் கஷ்டத்துடனும் ஏற்றனர்.

## காந்திஜீ வந்தார்

அடுத்தாற்போல் வந்தது காந்திஜி யுகம். அப்போதே இந்தியா தன் உண்மை சுயநிலையைப் பூராவாக உணர்ந்தது. தேசத்தின் சீரும் சிறப்பும், படித்த மக்களின் அந்தஸ்திலில்லை; சுதேச வர்த்தகர்களின் ஆஸ்திப்பெருக்கில் இல்லை; கோடானுகோடி பாமர மக்களின் சந்தோஷ சந்துஷ்டியில் தான் இருக்கிறதுஎன்பதைத் தேசம் அப்போதே உணர்ந்தது. ஆகவே தேசபக்தர்களின் கவனம் பாமர மக்களின் க்ஷேமத்தில் நாட்டங்கொண்டது. அம்மக்களின் தரித்திரக் கோரமும், சூழ்நிலை அசிங்கமும் யாவருக்கும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்கலாயிற்று. அதே சமயம் காங்கிரசும் தன் முழு மூலபலமும் அப்பாமர மக்களின் தைரியத்திலிருப்பதை உணர்ந்தது. இப்புது உணர்ச்சிக்கேற்ப தேசியத் தலைவர்கள் மாறினர்கள்; தேசிய இயக்கத்தின் போக்கும், கோஷங்களும், முறைகளும் வேறுபட்டன; ராஜீய லட்சியமும் திருந்தியது; தேசிய இயக்கமே அடியோடு புது உருக் கொண்டதெனலாம்.

அதனால் நம் தேசத்தின் கோடானுகோடி வீடுகளில் ஆனந்தமும், முகவிலாசமும் பொலிய, வெறும் வியாபாரிகள், முதலாளிகள் சுபிட்சத்துடன் நின்றால் மட்டும் போதாது என்பதனை அனைவரும் உணர்ந்தனர். ஜன சமூக அமைப்பையே அடியோடு மாற்றவேண்டுமென்ற உணர்ச்சி பூத்தது. சர்க்கார் ஆட்சிமுறையை அடியிலிருந்து நுனிவரை பூராவாகத் திருத்தி அமைத்தாலொழியப் பாமர மக்களை அவர்தம் துன்பத்திலிருந்து மீட்க முடியாதென்பதும் தெளிவாயிற்று. எனவே தேசியப் போராட்டம் அன்னிய அடிமைச் சங்கிலியை மட்டும் எதிர்ப்பதுடன் நில்லாமல், இங்குள்ள குருட்டுச் சுயநலம், மூடப்பழக்க வழக்கங்கள் முதலியவற்றையும் விரட்டுவதாகவும் ஆரம்பித்தது. ஆகக் காந்திஜி காலத்திலேயே அதாவது 1920-லிருந்து நடத்திய போராட்டங்களெல்லாம், தேச விடுதலைக்கும், பாமர மக்களைப்பல தளைகளிலிருந்து விடுவிக்கவும்நடந்தவையாகும். ஆதலால் முதலில் நாகபுரியிலும், பிற்பாடு லாகூரிலும் அதனையடுத்து கராச்சியிலும் காங்கிரசின் லட்சியத் தீர்மானங்கள் மாறி வந்தன. அது காங்கிரசின் முன்னேற்றப் போக்கை காட்டுவதாகும்.

## ஒத்துழையாமை

1919ல் ஆரம்பமான புதுப் போராட்டத்தின் முன்னணியில் தென்னிந்திய மாகாணங்களும் முன்வரத் தயங்கவில்லை. முஸ்லிம்களின் கிலாபத் இயக்கத்துக்கு அடுத்தபடியாக ஒத்துழையாமைப் போராட்டத்துக்கு ஆக்கமளித்தது தென்னாட்டவர் தந்த ஆதரவே எனலாம். நம்மவர் ஆதரவு இல்லாவிட்டால் போராட்டத்தை நடத்தக் காங்கிரசே முன்வந்திருக்குமா என்பதும் சந்தேகமே.

ஒத்துழையாமை தொடங்கியதும் சென்னை மாகாணம் செய்த தியாகத்தைக் கண்டு நம்மவரே பிரமித்துப் போயினர். தன்னால் அவ்வளவு தூரம் தியாகம் செய்ய முடியுமென்று

அம்மாகாணமே நினைக்கவில்லை; தம் தவப் புதல்வர்கள் அத்தனை மகத்தான தியாகங்களைச் செய்யத் துணிவாய் வருவார்களென்று அது கனவிலும் கருதவில்லை. அத்தியாக வேள்வியின் எழுச்சி ஓங்கலைக் கண்டதும் நமக்கு எதுதான் பிரமாதம் என எவருக்கும் பட்டது.

காந்திஜியின் சத்திய அஹிம்சா முறை அப்போது உலகையே திகைக்க வைத்தது. எதிரியின் இதயத்திலும் மாண்பான குழப்பத்தையே கிளறிவிட்டது. ஆகவே காந்திய இயக்கத்தின் முதல் கட்டம் நம் ஞாபகத்தில் என்றும் இருக்க வேண்டியதாகும். பிற்காலத்தில் நடந்த போராட்டங்களின்போது விளைந்தவைகளைவிட, அப்போது சர்க்காரிடம் ஏற்பட்ட மேலான உள்ளக் கிளர்ச்சி முக்கிய மானதாகும்.

விடுதலைச் சமர் வளர வளர, எதிர்ப்புச் சக்திகளுக் கேற்ப அஹிம்சா முறை போராட்டத்தினால் புதியதாகவும் கடுமையானதாகவுமான தியாகங்களை அனுபவிக்கலாயிற்று ஆரம்பத்தில் பிரமிப்பையும், மனச்சாட்சியையும் தூண்டியது நாளாக, நாளாக அலுக்கச் செய்வதுடன், பலனற்றதாகவும் ஆகி விடுகிறது. வியப்பையும், சுகிர்த உணர்ச்சியையும் ஒரு சமயம் தந்தது, பிற்பாடு அன்றாட சர்வசாதாரண அக்கறையற்ற விஷயமாகி விடுகிறது. ஆகவே அஹிம்சா மார்க்கத்துக்கு மனம் மாறுவதென்பது ரொம்பவும் நுண்மை யானதென்பதாகும். தியாக வேதனை கண்டு இளகுவதை விட்டு மனிதர்கள், அத்தியாக வேள்வியின் கடுமை குறைந்தால் அதில் குற்றம் குறை சொல்லப் புறப்படு கின்றனர். எவரேனும் அஹிம்ஸைப் பாதையிலிருந்து சிறிது நழுவினாலும் அதனை இடித்துக் காட்டுகின்றனர். ஆகையினால் போராட்டம் நீடித்து வரும் வரையில் மனிதர் மனதைத் தொட மென்மேலும் வாதனை தரும் கடுமையான முறைகளை அஹிம்சா வழியில் கையாள வேண்டிவருகிறது.

## உப்பு சத்தியாக்கிரகம்

1930-ஆம் ஏப்ரல் மீ 13வ அதாவது தமிழ் வருஷப் பிறப்பன்று உப்பு சத்தியாக்கிரகப் பட்டாளம் திருச்சியி லிருந்து வேதாரணியத்திற்குக் கிளம்பிற்று. டாக்டர் தி. சே. சௌ. ராஜன் வீட்டிலிருந்து அன்று நான் உப்பளம் நோக்கித் தொண்டர் குழாத்துடன் புறப்பட்டபோது அவர் மகள் மௌனமாகப் பிரார்த்தித்துக் கொண்டு என்நெற்றியில் திலகமிட்டாள்.

இந்தியாவின் விடுதலைக்காக நம் தேசத்தவர் இதற்கு முன்பு என்னென்ன கஷ்டங்களை அனுபவித்திருக்கிறார்களோ, அதை எல்லாம் நாங்கள் அனுபவிக்கத் தயாராக இருந்தோம். எங்களில் பலர் பட்டங்களைத் துறந்தார்கள்; பதவிகளை விட்டார்கள்; கல்லூரிப்படிப்பையும், தொழில்களையும் உதறி எறிந்து வந்தார்கள். அத்துடன் தாமாக வருவித்துக் கொண்ட வறுமைக் கொடுமையையும் மேற்கொண்டார்கள். அவ்வனைத்தையும் விடக் கோரமான சோதனைக்கும் நாங்கள் நிமிர்ந்து நிற்கவும் ஆயத்தமாயிருந்தோம்.

## தாரன் துரை தர்பார்

1930-ல் தஞ்சாவூர் ஜில்லா மாஜிஸ்திரேட்டாக இருந்த எ. ஜே. தாரன் (பிற்பாடு டில்லி மத்திய இலாகாவில் காரியதரிசியாகவும் இருந்தவர்) துரையே அஹிம்சா போராட்டத்தை மடக்கப் புதுப்புது ஆயுதங்களைச் சிருஷ்டித்த சீமான். அவற்றை சர்க்கார் பின்னால் இந்தியா எங்கிலும் கையாண்டது. அவசரச் சட்டங்கள் வருமுன்பே சாதாரண மாக அமலில் இருந்துவரும் குற்றச் சட்டங்களுக்குப் புதுப்புது வியாக்கியானங்களைச் சொந்தமாகச் செய்தார். காங்கிரஸ் சத்தியாகிரகிகளுக்கு இடமோ, உணவோ, கொடுப்போர் யாவரும் அபராதமும், சிறைத் தண்டனையும் பெறக்கூடிய குற்றம் செய்தவர் ஆவர் என ஜில்லாவெங்கும் பறை சாற்றினர். காங்கிரசை எதிர்க்க நம் மக்களையே உபயோ

கித்து முற்றுகை போடச் செய்வதென்ற துணிச்சலான திட்டத்தைக் கண்டுபிடித்தது அம்மகானே. காங்கிரஸ் காரர்கள் யாவரும் சட்டத்துக்கு விலக்கானவர் என்றும், அவருக்கு உணவோ, உறைவிடமோ கொடுப்போர் எவரும் குற்றஞ் செய்ய உடந்தையாக இருந்ததாகக் கருதப்பட்டு தண்டிக்கப்படுவரென்றும் தஞ்சை ஜில்லா எங்கிலும் ஜனங்களிடையே துண்டுப் பிரசுரங்களை வினியோகிக்கச் செய்தார். அதைக் குறித்து அதிகாரிகள், கிராமங்கள் எங்கிலும் தண்டோராவும் போடச் செய்தார்கள். என்றாலும் எங்களைப் பட்டினிப் போடச் செய்வதென்ற அதிகாரிகளின் திட்டம் மகா மோசமாகவே முடிந்தது. யாத்திரை சென்ற வழி எல்லாம் எங்களுக்கு விருந்து; பிரமாதமாக வரவேற்பு. ஜனங்களை கிலி அடிக்கச் செய்யலாமென்று திட்டமிட்ட அதிகாரிகள் மனதில் இந்த ஆடம்பர உபச்சார வரவேற்பு கள் திகைப்பைத் தட்டியது. ஜில்லா மாஜிஸ்திரேட் கண் ணெதிரிலேயே மங்கள வெற்றிகரமாக 15 நாட்கள் பெரும் சீரும் சிறப்புடன் வேதாரணிய சமுத்திர தீரம் வந்து சேர்ந் தோம். யாத்திரையாகத் திருச்சியிலிருந்து வேதாரணியம் நடந்து வந்தபோது முன்னும் பின்னும் அதிகாரிகள் கண்காணிப்புடனே சென்றோம். அப்படியும் ஜனங்கள் குதூகலமாகத் தொண்டர்களுக்கு ஆதரவு தரவே சென்றோம்.

அந்த ஜில்லா மாஜிஸ்திரேட் அத்துடன் நிற்கவில்லை. மற்றோர் அஸ்திரத்தைக் கண்டு பிடித்தார். பிறகு அந்தப் பெரும் ஆயுதத்தை இந்தியா சர்க்கார் தேசம் எங்கும் பிரயோகித்தது. அஹிம்சா போராட்டத்தில் ஈடுபட்டச் சாத்வீகச் சத்தியாக்கிரகிகளைக் கைது செய்யாமல் கடூரமாய் அடித்துக் காயப்படுத்தும்படி போலீஸ்காரர்களை ஏவி விடுவது, சட்ட நியாயத்துக்கும், தர்மத்துக்கும் சரியான தாகத் தாரன் துரையால் வகுக்கப்பட்டதாயிற்று.

## தடியடி தர்பார் தாரன்

*1930*-ல் இந்தியா எங்கிலும் காங்கிரசை அடக்கப் பிரிட்டிஷ் சர்க்கார் கைக்கொண்ட ஆயுதமான கனத்தடியைக்

கண்டுபிடித்தது தாரன் துரையே. சிலர் இந்தக் கௌரவம் தாரன் துரையிடம் வேலை பார்த்த இந்திய அதிகாரி ஒருவருக்கே சேருமென்பர். அதனை நம்ப என்மனம் இடந்தரவில்லை. அது எப்படி இருந்தாலும், அதன் பூராக்கௌரவத்தையும் தாரன் துரைக்கே தர ஆசைப்படுகிறேன்.

தென்னாப்பிரிக்காவில் காந்திஜி சத்தியாகிரகம் நடத்திய போது எதைப் பிரயோகித்துப் பார்க்க மார்ஷல் ஜானஸ்மட்ஸ் மனங்கூசினாரோ, அதனைச் சத்தியாகிரகிகள் மீது பொதுவாகவே எடுத்தாளும்படி இந்தியா சர்க்காருக்கு வழி காட்டியவர் தாரன்தான்.

முதல் ஐரோப்பிய (1914-18) யுத்தத்தையடுத்து மிருகத்தனம் உலகெங்கிலும் வளர்ந்ததுதான், இத்தகைய மனப்போக்கிற்குக் காரணமாகும். இந்த முறையே எளிதானதாகவும், சகஜமானதாகவும் பலருக்குத் தோன்றிவிட்டது.

## சின்னதொரு கதை

இந்தப் பிரபந்தத்தையொட்டிய கதையொன்றை இங்கு சொல்ல விரும்புகிறேன். ஜில்லா மாஜிஸ்திரேட் தாரன் துரையின் தலைமை ஸ்தலம் தஞ்சை நகரம். அது தென்னாட்டவர் பண்பாட்டுக்கே பிரதானமாக விளங்குவதாகும். ஜனங்களுக்குப் பயத்தை ஊட்டிச் சாமார்த்தியமாகச் சாந்தியை ஸ்தாபித்தாகிவிட்டது என்று அதிகாரிகள் நினைத்துவந்த இடம். அத்தஞ்சையின் வழியே வேதாரணிய யாத்திரையின்போது போகவேண்டி வந்தது. தஞ்சை நகருக்கு வெளியே ஓடும் கால்வாயின் கரையிலுள்ள வீடொன்றில் அப்போது சத்தியாக்கிரகப் பட்டாளம் கூடாரமடித்தது. அந்த வீட்டு அம்மாளும், அவர் சகோதரரும் எங்களுக்கு இடந்தந்து அதிதி உபசாரம் செய்தனர். சத்தியாக்கிரகிகள் முகாமிலிருக்க, நான் மாத்திரம் நகரின் நிலைமை எப்படி இருக்கிறது என்று நேரில் கண்டறிந்துவர அன்று மாலை ஊருக்குள் சென்றேன். பொதுக்கூட்டத்துக்குத்

துண்டுப் பிரசுரங்கள் வழங்கப்பட்டது தவிர வேறு எந்த ஏற்பாடும் அப்போது செய்யப்படாதது கண்டு என் மனம் சோர்ந்தது. மேற்கொண்டு தகவல் கொடுப்பவர் கூட எங்கிலும் எவரும் காணேம். கூட்டம் நடத்த ஒரு பெஞ்சு அல்லது நாற்காலியேனும் இரவல் தருவோர் கூட எவரு மில்லை. கடைசியாக ஒரு வக்கீல் நண்பரை அணுகி ஒரு பழைய விரிசல் மேஜை பெற்றேன். அதைத்தரக்கூட அவர் ஆயிரந்தரம் தயங்கினர். ஏதாவது வம்பு வந்தால் அந்த விரிசல் தனது அல்ல என்று பின்னல் சொல்லிவிடலாம் என்றுதானே என்னவோ அதனைக் கடைசியாகத் தரத் தைரியம் கொண்டார். அவர் வீட்டுத் தோட்டக்காரன் உதவியுடன் பொதுக்கூட்டம் நடைபெறுவதாக இருந்த மைதானத்தில் அதனைப் போடச் செய்தேன். அப்போது பொழுது விழும் சமயம். மைதானத்தின் பக்கம் ஓராள் கூட இல்லை. 'சரிதான்; இன்றைய கூட்டம் மோசமாகத் தானிருக்கும்' என்ற நினைப்புடன் எங்கள் பாசறைக்குத் திரும்பினேன். 'என்ன விருந்தாலும் தாரன் துரையின் தலைமைப் பீடமல்லவா? இந்த இடத்திலாவது அவருக்கு ஜெயக்கொடி வேண்டாமா? அப்படித்தான் இருக்கட்டுமே; நாமும் விட்டுக் கொடுப்போம்' என்றெல்லாம் சிந்தித்த வண்ணம் நான் தங்கிய இடத்துக்கு வந்தேன்.

பொதுக் கூட்டத்துக்கு குறிப்பிட்ட நேரத்தில் சத்தியா கிரகிகளுடன் திரும்ப மைதானத்துக்கு வந்தேன். அப்போது நான் கண்ட காட்சி என்ன! அம் மாபெரும் மைதானம் முழுதும் எள் விழ இடமின்றி ஏகப்பட்ட ஜனங்கள் அலை கடல் திரண்டு வந்ததுபோல் குழுமியிருந்தனர். அன்று, நாங்கள் இதுவரையில் கண்டறியாதப் பிரமாத வரவேற்பு. அதுவும் சுபமாகவே ஏற்பட்டது. சுமார் இருபதாயிரம் ஜனங்களாவது அக்கூட்டத்திலிருக்கும். அத்தனை ஜனங் களும் எவ்வித சந்தடியுமின்றி ஒழுங்காக எங்கள் பிரார்த்தனை யிலும் கலந்து கொண்டார்கள். அம் மாபெரும் கூட்டங் கண்டு பொங்கிய மனதுடன் பிறகு நான் பேசினேன். அன்றையக் கூட்டத்தை நான் என்றென்றும் மறக்க முடியாது.

## தாரன் துரை தரிசனம்

வேதாரணியத்தில் என்னைக் கைது செய்து தண்டனை தந்தார்கள். திருச்சி ஜெயிலுக்கு அனுப்ப என்னையொரு ரயில்வண்டியில் இட்டுச் சென்றார்கள். அன்றைய ரயில் பிரயாணத்தின்போது என்னுடன் அவ்வண்டியில் மாஜிஸ்திரேட் தாரனும் வந்து கலந்து கொண்டார். வேதாரணிய சத்தியாகிரக யாத்திரையின்போது அவர்போட்ட முற்றுகையை நாங்கள் அல்லும் பகலும் எதிர்த்து நின்றோமென்றாலும், அன்றுதான் அதாவது 1930ஹூ ஏப்ரல்மீ 30உயே தாரனை நேருக்கு நேரில் சந்தித்தது. எனக்குக் கைலாகு கொடுக்க வண்டிக்குள் நுழைந்தபோதே தம் கையை நீட்டிய வண்ணம்வந்தார். உள்ளே வருவதற்கு என் சம்மதம் பெறப் பெருந்தன்மையுடன் கையை நீட்டினர்.

"நீங்கள் தான் தாரனோ?'' என்று நான் கேட்டுவிட்டு "ரொம்பப் பயங்கரப் பேர்வழி மாதிரி இருக்கும் என்று அல்லவோ நினைத்தேன்" என்றேன். அவரைப் பார்த்த போது எனக்கு அவர் சாதாரண மனிதராகவே தோன்றியது. ஆள் ஆகிருதியும் பிரமாதமல்ல. என்னிடம் பிற்பாடு அவர் நடத்திய சல்லாபத்தின் போது அவர் தாமே தம்மைச் 'சாது, சாந்தப் பேர்வழி' என்று சொல்லிக் கொண்டார். அப்படித்தான் யாவருக்கும் அவரைக் கண்டதும் நினைக்கத் தோன்றும்.

ஆனால் அந்தச் சின்னப் பேர்வழிதான் இந்தியா எங்கிலுமுள்ள போலீசாருக்குத் தடி தண்டாயுதம் கண்டு தந்தவர். அவசரச் சட்டங்களையும் கண்டு பிடித்தவர். அதற்கு முன் நம் அஹிம்சையால் சர்க்காரும் அதில்வசியப்பட்டு நின்றனர். அஹிம்சைக்கு எதிராகப் பலாத்காரத்தை உபயோகிக்கத் தனக்குள்ள சட்டரீதியான உரிமையைக் கையாளும்படிச் சர்க்காரைத் தட்டிக் கிளப்பிய முதற் பெருமை தாரன் துரைக்கே தான் உண்டு.

"இத்தேசத்தாராகிய எங்களை எதிர்த்து எங்கள் ஜனங்களையே முற்றுகைப்போடச் செய்ய முயன்றீர்கள். அது ரொம்பத் துணிச்சலானதுதான். ஆனால் ஒன்று; நாங்கள் எங்கள் தேசத்தில்தான் இருக்கிறோம் என்பதனை ஏனோ மறந்துபோனீர்கள்" என்று அவரை ரயில் பிரயாணத்தின் போது கேட்டேன். தாரன் முறுவலுடன், "வாஸ்தவம்; இரண்டுபேரும்தான் அவரவர்களால் முடிந்தவரையில் பிரயாசைப்பட்டோம். நல்லதையும் கெட்டதையும் செய்து பார்க்கவும் முயன்றோம்" என்று பதில் சொன்னார்.

பிற்பாடு எனக்குக் காப்பியும், இதர சிற்றுண்டிகளையும் கொண்டுவரும்படி தமது சிப்பந்திகளுக்கு ஆக்ஞாபித்தார். அந்த மாதிரி அவர் என்னை உபசரித்தது அண்டையிலிருந்த போலீஸ் ஜவான்களுக்கும், ரயில் சிப்பந்திகளுக்கும் வழியிலுள்ள சின்னஞ்சிறு ஸ்டேஷன்களிலிருந்த பொதுஜனங்களுக்கும் உவகை ஊட்டுவதாக இருந்தது. 'சண்டை போடுவதைக் காட்டிலும், இது எவ்வளவோ தேவலையே' என்று அவர்கள் தம்மனதிற்குள் சொல்லிக்கொள்வதுபோல இருந்தது.

> சாந்தமே இந்தியாவின் சுபாவம். அது சச்சரவுகளையும் கிளர்ச்சிகளையும் வெறுப்பது. ஆனால் என்ன செய்வது? சில சமயம் போராட்டம் நமக்கும் அவசியமாகிவிடுகிறது. ஆகவே நம் சம்பந்தப்பட்ட வரையிலாவது அப் போராட்டத்தை அஹிம்சா முறையிலேனும் நடத்தலாம். அது ஒன்று தான் நாம் செய்ய முடிந்தது.

## தீண்டாமை

காந்திஜி தலைமையில் காங்கிரஸ் கண்ட உத்தம அருமை என்ன? பலாத்காரத்தை எதிர்த்துத் தர்மத்தை நிலை நிறுத்தத் தன்னிகரற்ற சக்தி வாய்ந்த ஓர் ஆயுதத்தைக் கண்டுபிடித்துக் கையாளத் தெரிந்து கொண்டது தான். ஒரு தர்ம நியாயமான காரியத்துக்குக் கஷ்டங்களைத் தானாக ஏற்பது ஆண் மகன் கடமையாகும் என்ற நியதியை எங்கணும்

பரப்பி ஏற்கச் செய்ததுதான். அதைத் தவிர காங்கிரஸ் நிர்மாண காரியங்களையும், சமூக சீர்திருத்தங்களையும் செய்திருக்கிறது.

தீண்டாமையில் அது ஒரு புரட்சியைச் செய்திருக்கிறது. அது குருதி கொட்டாமல் செய்யப்பட்டிருப்பதால் புத்தக ஏடுகளில் பிரமாதமாக இடம் பெறுமற் போனாலும் போகலாம். அமெரிக்காவில் நீக்ரோ அடிமைகள் விடுதலையானது எவ்வளவு மகத்தானதோ அதற்கு எவ்விதத்திலும் இது மட்டமாகாது. தீண்டாமை இன்று முற்றும் போகவில்லை என்பது உண்மையே. படித்த ஜனங்களும், ஜாதி ஹிந்து சீர்திருத்தக்காரர்களும் இன்னும் கொஞ்சநஞ்சம் இருந்துவரும் தீண்டாமையைக் கண்டு துடிதுடிப்பது, காங்கிரஸ் கிளப்பிவிட்டப் புரட்சியின் பலனாகும். அசைக்க முடியாத இமாலயம் போன்றிருந்த தீண்டாமை இன்று ஆட்டங் கொண்டுவிட்டது. தலைமுறை, தலைமுறையாக இருந்துவந்ததொரு ஐசாரப் பழக்கம் இன்று முற்றும் போகாமலிருக்கிறது என்றாலும் அப்படி இருந்துவருவதற்குச் சாக்குப் போக்கு நொண்டிச் சமாதானம் சொல்லவேண்டி வந்திருக்கிறது என்பதே புரட்சியின் விளைவாகும். நாகரீக ஜன சமுதாயத்தின் அறிவாளிகள் ஒரு காரியத்தைத் தப்பென்று எப்போது ஒப்புக்கொண்டுவிட்டார்களோ, அப்போது அதன் புரட்சி அனேகமாக முடிந்துவிட்டது எனலாம். இன்று தீண்டாமை முற்றும் போகாமலிருப்பதைக் கண்டு காணும், மனத்துடிப்பு அப்புரட்சியின் வேகத்தையும் நிஜத்தன்மையையும் நிரூபிப்பதாகும். அடுத்தத் தலைமுறை இந்த இடிந்துபோன குப்பை கூளத்தை அறவே களைந்து எறிந்த பெருமையைக் கட்டிக்கொள்ளலாம். என்றாலும் அப்புரட்சி காந்திஜி காலத்தில்தான் சாத்தியமானது என்பதை வரலாறு வலியுறுத்தும்.

## கதர்

கிராம ஜனங்களின் அற்ப, சொற்ப வருவாயுடன் கூட உதவுவது கதர். எத்தனைப் பேர்தான், ஒவ்வொரு குடும்பமும்கூட, ஈடுபட்டாலும் அதில் இடமிருக்கிறது. அவர்கள்

அனைவரையும் வரவேற்றுத்தானே வியாபித்துக்கொள்ளும் சங்கப்பலகை தன்மையானது. வரவர அதிகமாகக் கிராக்கி ஏற வசதி உள்ளது. அத்தகைய தொழிலைத் திரும்பவும் உயிர்ப்பித்துத் தந்தது, நமது பொருளாதார வாழ்வில் சின்னஞ்சிறு காரியமல்ல.

கதர் இயக்கத்தால் இன்று நம் நாட்டில் சில லட்ச ராட்டினங்களே சுழலுகின்றன. யந்திர சாதனங்களைக் கொண்டு தயாரான அன்னிய நாட்டுச் சரக்குகள் நம் நாட்டில் வந்து குவிந்ததால், வேலையில்லாத் திண்டாட்டமும் தரித்திரமும் தலை எடுத்தன. நான்கு கோடி ஜனங்களின் பிழைப்பு அதோ கதியானது.

அத்தகைய நிலையில் இது கொசுக்கடிக்கு ஒப்பாகுமென்றாலும் எந்தக் காரியத்திலும் அதன் தத்துவானுபவ உண்மை அறிவதே, ஒரு பெரும் சாதனை. நம் பொருளாதாரத்தில் கதர் தன் நியாயமான உரிய இடம் பெறவேண்டும். நம் தேயத்தினருக்கு அதன் ருசிக்காட்டி, அவர்கள் ஆதரவும் பெற்றாகிவிட்டது. ஆகவே தந்திரசாலிகள் யந்திரச் சரக்குகளை இப்புது ருசிக்கேற்பவும், கைச்சரக்குபோலவும் தயாரிக்கிறார்கள். கதருக்குச் சர்க்கார் தரவேண்டிய பாதுகாப்பொன்றே இனி பாக்கி. அதுவும் வரத்தான்போகிறது. தன் மக்கள் மென்மேலும் ஓட்டாண்டிகளாய்ப் போவதை எந்த சர்க்காரும் அலட்சியப்படுத்தாது.

## மதுவிலக்கு

பரிபூரண மதுவிலக்கு சர்வ ஜனங்களாலும் ஏற்கப்பட்டு நிலைத்து விட்டது. காந்திஜி காலத்தில் கைக்கொள்ளப்பட்ட இந்த உருப்படியான சன்மார்க்க சாதனை இந்தியாவின் ஏழை, எளியவருக்கு அல்ப சொல்ப விஷயமல்ல. குடிப் பேயைக் காங்கிரஸ் இப்போது விரட்டி விட்டதென்றே சொல்லவேண்டும். கலால் வருமானத்தைக்கொண்டு, சர்க்கார் கல்வி, சுகாதாரம் முதலிய அடிப்படையான செல

வினங்களுக்கு ஈடுசெய்து வந்தது. ஆகவே அப்பேய், 'என்னைக் கொன்றால், அவ்வினங்களையும் கொல்லத்தான் வேண்டும்' என்று உருட்டி வந்தது. அதன் மாயாவித் தனம் இப்போது அம்பலமாகி விட்டது. சர்க்காருக்கு வருமானம் தருவதுபோலக் காட்டி மயக்கி, மக்களை அவ் வருமானத்துக்குப் பன்மடங்கு, அதிகமாகப் பொருளைக் குடியில் கொட்டச் செய்தது. வேறு பலரை மதுக்கடைகளைப் போட்டி ஏலத்தில் எடுக்கச்செய்து திண்டாடவும் விட்டது. இந்தச் சூதும் வாதும் வெளியாகிவிட்டது. அப்பேயை ஆழ அடியோடு அழுத்திப் புதைக்கும் நன்னாளை மக்கள் எதிர்பார்த்தவண்ணம் இருக்கின்றனர். மதுவிலக்குப் பரீட்சையில் அமெரிக்கா அடைந்தத் தோல்வியைச் சிலர் இங்கு இந்தியாவுக்கு எடுத்துக் கூறுவது பொருத்தமல்ல. இங்கு மதுவைச் சமயமும், சன்மார்க்கமும் பஞ்சமா பாதங்களுள் ஒன்றாகக் கருதுகின்றன. தலைமுறை, தலைமுறையாக நம் பெரியவர்கள் நமக்குப் போதித்ததும் அப்படியேயாகும்.

சில விஷயங்களில் தென்னிந்தியா காந்திஜி சகாப்தத்தில் தலைசிறந்து விளங்கியது என்பதில் நமக்கு ரொம்பத் திருப்தியே. ஆனால் அதில் அதிகம் பெருமை அடிப்பதற்கில்லை. நம் பிரதேசத்திலேயே பிறவிடங்களைக் காட்டிலும் மேலே கூறப்பட்டக் கேடுகள் மோசமாக இருந்திருக்கின்றன. ஆகவேதான் தீண்டாமை, மதுவிலக்கு, கதர்திட்டங்களில் மற்ற மகாணங்களைவிட நாம் பூரணமாகச் செய்திருக்கிறோம்.

நம் முயற்சி நல்ல பலனைக் கொடுத்திருக்கிறது. காங்கிரஸ் நேரடியாகச் செய்ததால் ஏற்பட்ட பலன் மாத்திரம் அல்ல. நம்மை எதிர்த்து நின்றோர்கூட மேற்கண்ட விஷயங்களில் காட்டிய சிரத்தையையும், ஊதியத்தையும் நம் புரட்சியால் வந்த பிறபலன்களையும் கூட நம் முயற்சியால் வந்தவைகளாகவே கருத வேண்டும். இப்படித்தான் எந்த நற்காரியமும் வளரும். முயற்சியால் லட்சியவளர்ச்சியே ஒழிய கட்சி விருத்தியல்ல.

# 14

## சுதந்திரப் போர்

காங்கிரஸ் ஒன்றினால் தான் சுதந்திரப் போரை நடத்த முடியும்; அதுவும் நடத்தும். அதில் தயக்கங்காட்டுவோருக்கு இடமே இல்லை; முன்னணியானாலும் சரி, பின்னணியானாலும் சரிதான். ஆகவே ஒவ்வொருவரும் காங்கிரஸ் கொடியின் கீழ்ச் சேரவரவே நாம் அனைவரும் விரும்புகிறோம். எத்தனையோ பேர் எத்தனையோ விதமாகப் பேசலாம்; வேறு தினுசாகவும் சுயநலத்திலுள்ள மோகத்தால் நிஜமாகவே மாறாகக் கருதலாம். ஆனால் முதலில் சொன்னது தான் உண்மை. அதாவது காங்கிரசால்தான் சுதந்திரம் சாத்தியம் என்பது. இதனை எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரமாக ஒவ்வொருவரும் உணர்கின்றனரோ, அவ்வளவுக் கவ்வளவு நாட்டிற்கு நல்லது. தேசம் சுதந்திரத்திற்கு ரொம்பவும் காத்துக் கிடந்துவிட்டது. எனவே காங்கிரஸ் கொடியின் கீழ் நாமனைவரும் அடங்கிச் செல்வோமாக.

— ராஜாஜி.

# அன்றைய நினைவுகள்



போர் ஆரம்பத்தின் முன்பே நான் வந்துவிட்டேன். அது என் அதிர்ஷ்டம். ஆதி முதல் அந்தம் வரைக்கும் இருக்கும் பேறும் பெற்றேன். அந்த நாளில் ராஜாஜியே ஏகத்தலைவர்; அவர் ஆக்கினையே ஏகக்கட்டளை: அவர் தலைமையே ஒரே வழிகாட்டியாய் இருந்தது. அப்போது நானும் ஒரு தொண்டனாயிருந்தபடியால், அவருடன் மிக நெருங்கிப் பழகும் பாக்கியம் கிடைத்தது.

தமிழ் நாட்டின் மூலை முடுக்குகளிலிருந்து வேதாரணிய சத்தியாக்கிரகம் சிறு சிறு அருவிகளாய் ஊற்றெடுத்துக் கிளம்பியது. நம் மாகாணம் முழுதுமே அந்நதியின் நீர் வரும் பரப்பானது. காந்திஜியிடம் நம்மவர் கொண்டிருந்த அன்பே அதன் மழைநீர், அப்போது மக்களிடை பொங்கி எழுந்த மனக்கிளர்ச்சியை அணை போட்டுத் தடுத்துச் சேர்த்து, அதற்கொரு கலிங்கலைத் திருச்சியில் ராஜாஜி திறந்தும் வைத்தார். அங்கிருந்து கிளம்பிய சத்தியாக்கிரக வெள்ளம் தஞ்சை ஜில்லாவின் வழியே ஓடி திருமறைக்காடெனும் வேதாரணியத்தில் வங்காளக்குடாக் கடலில் கலந்தது. அன்று ராஜாஜி காட்டிய ஆற்றல்தான் என்னே!

அறப்போர் ஆரம்பமாகுமுன் ராஜாஜி தமிழ் நாடெங்கும் திக்விஜயம் செய்தார். என்னையும் தம்முடன் கூட அழைத்துச் சென்றார். அன்று அவர் பேசிய கூட்டங்கள் எத்தனையோ? அவர் பேசும்போதுதான் என்ன தெளிவு: என்ன எளிமை! அப்படிப் பேசும்போதும் மக்கள் மனசில் பதியவும் வைக்கிறார். இவ்வளவிலும் ராஜாஜி ராஜீயச்சண்டைக்கு அடிகோலுவதுமில்லை. பேசிய இடங்களிலெல்லாம், பெரிய பெரிய தார்மீகப் பிரச்சினையையே கிளப்பினார். காற்று, ஜலம் போல் உப்பும் கடவுளால் மனிதனுக்குத் தரப்பட்டதாகும். அதனை எடுத்துக்

கொள்ளும் உரிமை மக்களுக்கு உண்டு. எந்தச் சர்க்கார் இருந்தாலும் சரி, அது என்ன சொன்னாலும் சரி, கடவுள் தந்ததைத் தடுக்க எவரும் அதிகாரம் பெற்றிருக்கவில்லை. இந்தத் தோரணையிலேயே எங்கும் பேசி தமிழ்நாட்டின் நெஞ்சைக் கிளறிவிட்டார்.

திருச்சியிலிருந்து ராஜாஜி அறப்போருக்குக் கிளம்பிய போது ஆயிரக்கணக்கான பேர்கள் நான் முந்தி, நீ முந்தி என்று வந்து விழுந்தார்கள். அவரோ ஒரு நூறு பேரையே பொறுக்கி எடுத்துக்கொண்டார். 1930 ஏப்ரல் 13-ஆம் தேதி திருச்சி தண்டிலிருந்து தொண்டர்படை அவர் தலைமையில் கிளம்பிற்று. அக் காட்சி படையெடுப்பு ராணுவமோ அல்லது யாத்திரை செல்லும் துறவிக் கூட்டமோ என்ற தோற்றம் அளித்தது. அதன் தளபதி ஒடிந்து மெலிந்த யோகிபோல் காட்சி அளித்தார். தவசிகளைப்போலவே தம் கரத்திலும் கைத்தடி ஏந்திக் கிளம்பினார். அதைத் தவிர வேறு ஆயுதம் அவரிடம் இல்லை. அவர் வாயிலிருந்து ஒரு ராணுவ பத்வாவும் பிறக்கவில்லை. "ரகுபதி ராகவ ராஜா ராம்" என்பதே வழிநடை கீதமாயிற்று.

## துறவித் தர்மம்

அந்த நீண்ட யாத்திரை குறித்து நான் அதிகம் சொல்லப்போவதில்லை. தமிழ் நாட்டின் முடிசூடா மன்னனை ராஜாஜிக்கும், அவரது நூறு சீடர்களுக்கும் வழிநெடுகிலும், கிராமத்தார் அளித்த உபசாரம் சொல்லத் தரமன்று. இந்த 'பைராகி' களின் நேம நிஷ்டை ரொம்பவும் கடுமை. புத்தபிரான் தம் தேசாந்திர திக்விஜயத்தின்போது துறவி சிஷ்யர்களுக்கு இப்படித்தான் கடும் விதிமுறைகளை வகுத்தாராம். அதே போலத்தான் இதுவும் இருந்தது. எந்தத் தொண்டரும் தனக்கெனப் பிரத்தியேகமான சலுகையோ, உபசரிப்போ தேடக் கூடாது. அப்படி யாரேனும் அளித்தாலும் பெறவும்



உப்பளத்தில் உப்பு அள்ளிய இடத்திலுள்ள நினைவு ஸ்தூபி

கூடாது. எதுவும் பொதுவாக இருக்க வேண்டும். யாரும் புகை பிடிக்கக்கூடாது, காப்பி, தேத்தண்ணீர் என்று வெளிக்கிளம்பவும் கூடாது. சுகாதார விதிகளையும் கன ஜரூராகக் கவனிக்க வேண்டும். போகுமிடங்களிலுள்ள கிராமங்களைச் சுத்தி செய்வதும் தொண்டர்கள் பொறுப்பு.

அப்போது தாரன் என்ற ஐ. சி. எஸ். பேர்வழி தஞ்சை கலெக்டராய் இருந்தான். யாத்திரை போகும் சத்தியாக்கிரகிகளுக்கு எவரேனும் விருந்தளித்தால் கடுந் தண்டனை என்று பறையடித்தான். கலெக்டர் அச்சுறுத்தலுக் காகவிருந்தோம்பும் நம் பண்டைப்பண்பை மக்கள் கைவிடக் கூடாதென அதற்கு ராஜாஜி பெருந்தன்மையுடன் மறுப்பு விடுத்தார். அப்படியே ஜனங்களும் தொண்டர்கள் போன விடத்திலெல்லாம், அவர்களை ராஜோபசாரத்தில் மூழ்கடித்து விட்டார்கள். அப்படிச் செல்லும் கிராமங்களில் நடைபெறும் கூட்டங்களில் நான் கிண்டலாகப் பேசுவதுண்டு. "நெருஞ்சி யும், * முள்ளும் விடுதலை வெள்ளத்தைத் தடுக்காது. அவற்றால் சாத்தியப்படாது. இதைத் தஞ்சை ஜில்லா வாசிகள் காட்டி விட்டார்கள்" என்று அப்போது நான் பகடியாகப் பேசுவேன்.

அடுத்த கட்டம் வேதாரணிய விஜயமாகும். நான் சில நண்பர்களுடன் முன்னதாகவே அவ்விடம் சென்றிருந்தேன். ராஜாஜிக்கும், மற்ற சத்தியாக்கிரகிகளுக்கும் முன்னேற்பாடு செய்யவே போனேன். வேதாரணியம் வட்டகையிலுள்ள பல்வேறு கிராமங்களுக்குச் சென்று யாத்திரா வீரர்களுக்கு ஏற்ற வரவேற்பு அளிக்கவேண்டுமென்று பிரசாரம் செய்து வந்தேன். அப்போதுதான் திருவண்ணாமலை ஸ்ரீ ந. அண்ணாமலைப்பிள்ளை, ஸ்ரீ சி. வி. ராஜகோபாலாச் சாரியார் ஆகியோரின் ஈடற்ற தமிழ்ப் பிரசங்கத் திறனைக் கேட்டேன். அதுவும் அண்ணாமலைப் பிள்ளை கிராம ஜனங் களைக் கொதித்தெழச் செய்யும் ஆற்றல் கொண்டிருந்ததை உணர்ந்தேன்.

---

* (கலெக்டரின் பெயர் தாரன். அதாவது முள் என்பதன் ஆங்கிலச்சொல்)

ஏப்ரல் 29-ஆம் தேதி என்று ஞாபகம். தொண்டர்கள் நெடுந்தூர நடைப்பிரயாணக் களைப்பால் சோர்வுற்றவர்களாய் வேதாரணியம் வந்து சேர்ந்தார்கள். ராஜாஜியும் சிரமமுற்றவராய்த் தென்பட்டாலும், அவர் முகத்தில் தெளிவும், ஆனந்தமும் கூத்தாடின. அவர்களை வரவேற்கச் சுமார் பதினையாயிரம் பேர் வேதாரணியம் மேல வீதியில் கூடிவிட்டனர். தெருவில் எள்விழ இடமில்லை. அன்றைய பொதுஜன வரவேற்பு மகத்தானது. ராஜாஜியும் களைப்படைந்திருந்தார். ஆகவே மாலை அணிவிப்பையும், உபசாரப் பத்திரப் படிப்பையும் துரிதப்படுத்த அவரே உதவினார். அடுத்தபடி ஏதோ சில நிமிஷங்களே பேசினார். பிரமாதமான சொற்பொழிவு இருக்கும் என்று எதிர்பார்த்த என் போன்றோருக்கு அது பெரும் ஏமாற்றமானது. தாம் ஜனங்களை ஏவ வரவில்லை என்றும், அவர்களைச் சாந்தப்படுத்தவே வந்திருப்பதாயும் சுருங்கக் கூறினர். கோஷம் போட வேண்டாம் என்றும், அதற்குப் பதிலாகச் சத்தியாக்கிரகப் போராட்டம் வளர வளர அதற்கு இடையரு ஆதரவு அளித்து வரவேண்டியது அத்தியாவசியமென்றும் வலியுறுத்தினார். ஜனங்கள் அவரவர் வீடு சென்று மறு நாளைப் பட்டினியிலும், பிரார்த்தனையிலும் செலவழிக்க வேண்டுமென்றும் கூறினார்.

ஆவேசப் பிரசங்கத்தை எதிர்பார்த்தவர்களுக்கு அது மட்டமாகவே தென்பட்டது. ஆனால் அன்றைய சொற்பொழிவே ஆப்ரஹாம் லிங்கனின் கெட்டிஸ்பர்க் பிரசங்கம் போன்று மகத்தான மதிப்புள்ளதெனப் பிற்பாடு தெரிய வந்தது. அப்போது வேண்டியது மக்களின் மனவமைதியாகும். குமுறும் மனதை அடக்கி ஆத்மபலத்தை அவர்களுக்கு அளிக்க வேண்டிய காலமது. அதேபோல ராஜாஜியும் அவர்களை அதியாச்சரியமாய் சாந்தப்படுத்தி, வீடு திரும்பி வருங்காலக் கடும் வேலையில் சிந்தையை ஈடுபடச் செய்தார்.

# 19

## புளியமிளாறு பூசை

வேதாரணியப் போராட்டத்தின் கதையை இங்கு நான் விவரிக்கப்போவதில்லே. ராஜாஜி முதல் நாளே கைதியானுர். அடுத்த தளபதி கனம் க. சந்தானம், அவரும் இரண்டொரு நாட்களில் கைதியானுர். மட்டப்பாறை ஸ்ரீ வெங்கட்ராமய்யர் அவர் ஸ்தானத்திற்கு வந்தார். அவர் புதிய போக்கில் இறங்கி, சகல தடைகளையும் மீறினுர். எனவே அவரையும் போலீசார் உடனே மடக்கிப் போட்டனர். ஸ்ரீ கே. சுப்பிரமணியம் அடுத்த அதிபதி. போராட்டமும் வீறு குறையாது தொடர்ந்து நடந்தது. ஆகவே அவரும் பிடிபட்டார். மே 14-ஆம் தேதி தலைமைப்பதவி என்னிடம் வந்தது. அத்துடன் பல புதிய துன்பங்களும் தோன்றின. அப்போது போலீசார் புளியம் மிளாறினுல் தொண்டர்களை புடைக்க ஆரம்பித்தனர். அதனை முதலில் ருசி பார்த்தது ஸ்ரீ என். எஸ். வரதாச்சாரியும், மதுரை ஸ்ரீ. அ. வைத்திய நாதரும் என்று ஞாபகம். பிற்பாடு அவர்களும் சிறை பட்டனர்.

மத்திய முகாமில் ஒருநாள் உப்பு ரகளை பிரமாதமாய் நடந்தது, அன்று உப்பளத்திலிருந்து தொண்டர்கள் ஏகப்பட்ட உப்பைக் கொண்டுவந்து விட்டார்கள். அதனைப் பறிக்கப் போலீசார் முகாமில் பிரவேசித்தார்கள். தொண்டர்களோ உப்பை நடுவே குவித்து அதனைப் பாதுகாக்கச் சுற்றிலும் வட்டவளையமாக நெருங்கிக் கைகோர்த்து நின்று இரும்பு போன்ற பலமான மனிதச் சுவரை எழுப்பி விட்டார்கள். அப்போதிருந்த டிபுடி போலீஸ் சூப்பிரன்டன்டு ஒரு மூர்க்கன். அவன் ஆக்கினைப்படி போலீஸ் ஜவான்கள் மூர்த்தன்னியமாகத்தொண்டர்களைத் தாக்கவே மனிதச்சுவர் சிறுகச் சிறுக மசிய ஆரம்பித்தது; இறுதியில் சிதறவும் சிதறியது. வீரர்கள் கிருஷ்ணமாச்சாரி, வீராசாமி, ராஜு இடி நெரிசல் தாளாமல் மூர்ச்சையானுர்கள். அப்போது அந்த மனிதச் சுவரில் கல்லோடு ஒரு கல்லாக விளங்கிய நமது மாஜி சுகாதார மந்திரி ஸ்ரீமதி ருக்மணி

லட்சுமிபதியின் கால்களைப் போலீசார் பிடித்துக்கொண்டு பறபறவென்று தரையில் இழுத்துச் சென்று அவரை அப்புறக் கிடத்தினர்கள். முடிவில் போலீசார் உப்பைப் பறித்துக் கொண்டாலும், மக்கள் சத்தியாக்கிரகிகளே வெற்றி அடைந்தார்கள் என்று கருதினர்.

வேறொரு நாள் பீமன் போன்ற ஸ்ரீ ரங்கசாமி ராஜா உட்பட மூவரைப் போலீசார் தடியால் நொறுங்கப் புடைத்து கறகறவென்று இழுத்துச் சென்று கள்ளிப்புதரில் தூக்கி எறிந்தார்கள். அந்தக் கோரத்தைக் கண்டு பொது ஜனங்கள் அனைவரும் போலீசாரைத் திட்டினர்கள். ஸ்த்ரீகள் வேதபுரீஸ்வரர் ஆலயம் சென்று ஆண்டவன் சந்நிதானத்தில் அவர்களைச் சபித்தார்கள். தொண்டர்கள் பட்ட அவதி அவர்களை அவ்வாறு வாட்டியது.

மற்றொரு நாளும் ஒரு மகத்தான சம்பவம் நடந்தது. முகாமைச் சுற்றிலும் ஒரு பலமான வேலியுண்டு. அதற்கு ஒரே தலைவாசலும், புறவாசலுமே. அவற்றின் வழியாகவே சத்தியாக்கிரகிகள் வெளியே செல்வதோ உள்ளே வருவதோ சாத்தியம். அவ்விரு வாசல்களிலும், போலீசார் இரவு பகலாக நின்று சத்தியாக்கிரகிகளை உப்பளத்துக்குச் செல்லவிடாது மடக்கினர். இரண்டே வாயில்களாதலால் இரண்டொரு ஜவான்களைக் கொண்டே தொண்டர்களை சுளுவாக மடக்க முடிந்தது. இந்த முற்றுகையை உடைக்க ஒருநாளிரவு ஒரு யோசனை தோன்றியது. தொண்டர்களை அழைத்து வேலியின் எல்லாக் கம்பங்களையும் ஏககாலத்தில் ஆளுக்கொன்றாய் தூக்கிப் பிடுங்கச் சொன்னேன். அதை முதலில் பார்த்ததும் போலீசார் இதென்னடா என்று பிரமித்தார்கள். வேலி எடுபட்டபிறகு (முன்போல் தனிவாசல் என்பது இல்லாததால்) சத்தியாக்கிரகிகள் வெளிச்செல்லுதலை லேசில் தடுப்பதற்கோ, அன்றி வெளியேறியவர்கள் திரும்பி முகாமில் நுழைவதை மடக்கவோ அவர்களால் முடியவில்லை. ஆகவே அல்லும் பகலும் முகாமைச் சுற்றிலும் நூற்றுக்கு மேலான ஜவான்களைப்

போட வேண்டி வந்தது. இரண்டொரு நாட்களுக்கு அதிகாரிகள் விடாப்பிடியாய் அம்மாதிரியே ஏராளமாக ஜவான்களைப் போட்டும் பார்த்தார்கள். ஆனால் அதில் சீக்கிரம் அலுப்புத் தட்டவே மே 29-ஆம் தேதி முகாமிலிருந்த அத்தனைச் சத்தியாக்கிரகிகளையும் கூண்டோடு கைலாசமாகக் கைதி செய்தனர். அந்த நிலைமைக்குப் போலீசாரைப் போக நிர்ப்பந்தம் செய்தோம். அப்பெரிய சாத்வீகப் போராட்டம் அந்த மகத்தான சம்பவத்துடன் முடிந்தது.

# வேதாரணிய வேள்வி



பிரமோதூத வருஷம் சித்திரைமாதம் ஆதிவாரம் முதல் தேதி. தமிழ் வருஷப் பிறப்புதினம். கிறிஸ்து சகாப்தம் 1930-ஆம் வருஷம் ஏப்ரல் மாதம் 13-ஆம் நாள். காலை ஐந்து மணி. தொண்டர்கள் தேசியக் கொடியைப் பிடித்து ஜெ கோஷத்துடன் முன்னே செல்ல, சங்கநாதம், முரசொலி முழங்கச் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் வேதாரணிய வேள்வி யாத்திரையைத் திருச்சியில் ஆரம்பித்தார். அந்த அதிகாலையில் டாக்டர் தி. சே. செள. ராஜன் பங்களாவிலிருந்து நூறு தொண்டர்கள் 'ரகுபதிராகவ ராஜாராம்' கீதத்துடன் அவரைப் பின் தொடர்ந்தனர். தமிழர்களின் தேசபக்தியே உருவமாக விளங்கிய அது, கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது.

காந்தியடிகள் முந்திய மார்ச் மாதம் 12-ஆம் தேதி சபர்மதியிலிருந்து எழுபத்தொன்பது ஆசிரமத் தொண்டர்களுடன் இருபத்துநான்கு நாட்கள் நடைப் பிரயாணமாய் தண்டிக்குச் சென்ற காட்சிபோல ராஜாஜியின் இந்த வேதாரணிய யாத்திரை இருந்தது. தண்டியில் உப்புச் சட்டத்தை மீறிய பிறகு அண்ணல் காந்திஜி இந்தியாவின் இதர பாகங்களிலும், சத்தியாக்கிரகங்களை நடத்த அனுமதி தந்தார். பாரதத்தாயின் சகல அழைப்புகளுக்கும் என்றுமே தயங்காத தமிழ்மகள் தன் தவப்புதல்வன் ராஜாஜி தலைமையில் வேதாரணியத்தில் உப்புச்சத்தியாக்கிரகப் போராட்டம் நடத்த எல்லா ஜில்லாக்களின்றும் வாலிபர்களை அனுப்பித் தந்தாள்.

தூத்துக்குடியில் நடந்த தமிழ் மாகாண மாநாட்டிற்குத் தலைமை வகித்துவிட்டு ராஜாஜி திருச்சிக்கு ஏப்ரல் 11-ஆம் தேதி வந்தார். அதற்கு முன்னதாகவே டாக்டர் ராஜன் திருச்சியிலிருந்து வேதாரணியம் போகவேண்டிய பாதையை நிர்ணயித்து, தங்க வேண்டிய இடம் முதலியவைகளைக்

குறித்து நிச்சயம் செய்து திட்டம் வகுத்திருந்தார். பிரயாணத்திற்குச் சின்னாட்கள் முன்னதாகவே அப்புனித பாதையிலுள்ள கிராமத்தார்களைக்கண்டு, சத்தியாக்கிரகக் கோஷ்டிக்கு ஆங்காங்கு அவர்கள் செய்யவேண்டிய ஜாகை, சாப்பாடு வசதிகளைப்பற்றி அவர்களுடன் விவாதித்துப் பூர்வாங்க ஏற்பாடுகளைச் செய்திருந்தார்.

ஆனால் இந்தச் சத்தியாக்கிரகக் கோஷ்டியைத் திக்கு முக்காடச் செய்ய, தஞ்சை ஜில்லாக் கலெக்டர் ஜே. எ. தாரன், இ. பி. கோ. 159-ஆம் செஷன் பிரகாரம் தொண்டர்கள் வரும்போது சாப்பாடு முதலிய வசதிகள் செய்து கொடுத்து உபசரிப்பவர்கள் சட்டவிரோத கூட்டத் தாரை ஆதரித்தவர்கள் ஆவார்களென்றும், அதற்காக அவர்கள் பேரில் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுமென் றும், பகிங்கரமாகப் பிரசாரம் செய்திருந்தபடியால் அந்த ஜில்லா வாசிகள் அநேகர் கிலி பிடித்துப் போயிருந்தனர்.

ஏப்ரல் மாதம் 11-ஆம் தேதி அன்று டாக்டர் ராஜன் பிரயாணப் பாட்டையிற் வழி நெடுகப்போய் அந்தந்த ஊர் ஜனங்களைக் கண்டு பேசிவிட்டு, இரவு 11 மணி சுமாருக்குத் திருச்சி திரும்பி வந்தார். அப்பொழுது இவர் ஸ்ரீ ராஜ கோபாலச்சாரியாரிடம் தெரிவித்த சங்கதிகள் கலக்கத்தை உண்டாக்கத்தக்கனவாயிருந்தன.

கோவிலடி என்பது பிரயாணப்பாட்டையில் முதலாவது தங்குமிடம் என்று ஏற்கனவே பிரயாணக்கிரமத்தில் பிரசுரிக்கப்பட்டிருந்தது. ஆனால் அந்த ஊர் ஜனங்களைப் போலீஸ் உத்தியோகஸ்தர்கள் போய்ப் பயமுறுத்தியதி லிருந்து அவர்கள் வரவேற்பு அளிப்பதென எண்ணி யிருந்த எண்ணத்தையே பூராவும் மாற்றிக் கொண்டிருந்தார் களாம். அதிதி பூஜை, விருந்தோம்பல் என்பன இந்தியருக் கேற்பட்ட மதக் கடமை அல்லவா என்ற நியாயத்தை எடுத்துக் காட்டினாலும் அவர்களுடைய பயமானது மட்டுப் படுவதாயில்லை என்று டாக்டர் ராஜன் மிகவும் கவலையோடு

அன்று இரவு ராஜாஜியிடம் சொல்லிக்கொண்டிருந்தார். படிக்காதவர்களைக் காட்டிலும், படித்தவர்களே மிகவும் பயங்காளித் தனமாய்ப் பேசுகிறார்களென்றும் தொண்டர் படை போகையில் அநேகமாய் இந்தப் பயங்காளிகளெல்லாம் ஊரிலேயே இல்லாது போய் விடுவார்களென்றும் அவர் சொல்லிவந்தார்.

இதைக்கேட்ட ராஜாஜியும் இன்னும் அங்கு கூடியிருந்த தொண்டர்களும் எதிர்பாராத விதமாய்ப் பிரயாணம் மிகவும் கஷ்டமாயிருக்கப் போகிறது என்று நினைக்க வேண்டியதாயிற்று. ஊரார் உபசரிப்பார் என்ற எண்ணத்தையே முற்றும் மறந்துவிடவேண்டுமென்றும் கஷ்டங்களையெல்லாம் பொறுமையுடன் ஏற்றுக்கொள்ளத் தொண்டர்கள் தயாராக இருக்கவேண்டுமென்றும் உணவுப்பொருள்களும் அந்த அந்த இடங்களில் கிடைக்காமல் அதிகாரிகளால் தடை செய்யப் படுமென்றும், தண்ணீரும் அகப்படாதபடி செய்யக்கூடுமென்றும் பிரயாணத்தை மேற்கொண்டு நடத்திச் செல்ல முடியாதபடி செய்வதற்கு என்ன என்ன தடைகள் உண்டோ அவைகளையெல்லாம் செய்ய அவர்கள் சிறிதும் அஞ்சமாட்டார்களென்றும், இச்சமயம் நமது சத்தியாக்கிரகப் பெருமையையும் மகாத்மாவையும் மனசில் சதா நினைத்துக்கொண்டு பட்டினி முதலான கஷ்டங்களையும் சகித்துக்கொள்வதற்குத் தயாராயிருக்கவேண்டுமென்றும் தலைவர் தொண்டர்களிடம் பேசிக்கொண்டிருந்துவிட்டுப்பிறகு அன்று இரவு பன்னிரண்டு மணிக்குமேல் நித்திரைக்குப் போயினர்.

## பிரயாண முஸ்தீபு

மறுநாள் ஏப்ரல் மாதம் 12உ அதிகாலையிலிருந்து தொண்டர்கள் வந்தவண்ணமாகவே இருந்தனர். தொண்டர் படைக்கு ஆசி கூறி அனுப்புவதற்காக, சென்னை, மதுரை, கடலூர் முதலிய இடங்களிலிருந்து சில பிரமுகர்களும் அன்றைத் தினம் வந்து சேர்ந்தனர். உள்ளூர் பிரமுகர்களும் வெளியூர் அபிமானிகளும் அன்று காலையிலிருந்து வருவதும்

போவதுமாயிருந்தனர். இடையே ரகசிய போலீஸ் உத்தியோகஸ்தர்கள், அபிமானிகள் கும்பலில் கலந்துகொண்டு உளவு விசாரித்துக்கொண்டிருந்தனர். இவ்வாறு செய்தவர்களில் இரண்டொருவர் டாக்டர் ராஜன் அவர்களால் கண்டிக்கப்படவே, வெட்கித் தலை குனிந்து வெளியேறினர்.

அன்று பகல் போஜனம் முடிந்ததும் தலைவர் ராஜாஜி தலைமையில் பிரயாணத்திற்கான வேலைகளைப் பங்கிடுவதற்காக ஒரு கூட்டம் பந்தலிலேயே கூட்டப்பட்டது. அச்சமயம் கீழ்க்கண்ட அலுவல்களுக்காக ஆட்கள் தொண்டர்களினின்றும் நியமிக்கப்பட்டனர்.

1. பயோனீர் கோஷ்டி:—ஆர். துரைசாமி ஐயர்: என் எஸ். நாராயணராவ்; 2 சுகாதார கோஷ்டி:—டி. சுப்பராவ் வகையரு; 3. சமையல் கோஷ்டி:—ரெங்கசாமி ஐயங்கார்; 4 தபால் போக்குவரத்து:—தாணு ஐயர்; 5 தொண்டர்கள் பொதுத்தலைமை:—சுப்ரமணியம்; 6 விளம்பர இலாகா:—ஓ. பி. ராமசாமி, கே. வி. ராமன், டி. ஆர். பத்மனபன்; 7 ஸ்டோர்:—சீனிவாசன்; 8 சங்கு ஊதல்:—சிவகுருநாதன் 9 டங்கா அறைதல்:—கணபதி; 10 தேசீயக் கொடி பிடித்தல்:—ஆனந்த்; 11 பிரார்த்தனை:—சுப்பையா; 12 ஆஜர் பட்டி, தக்ளிசெய்தல்:— கிருஷ்ணமூர்த்தி; 13 மணியடிப்பவர்:—மணி; 14 பொக்கிஷம்:—பி. கே. ராமாச்சாரி; 15 ஹிந்தி பயிற்சி:—கிருஷ்ணசாமிக் கோனர்.

## தொண்டர்களின் விபரம்

ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியாரின் தலைமையில் சென்ற முதல் தொண்டர் படையில் சேர்ந்த தொண்டர்களின் ஊர்களும் தொகையும் பின்வருமாறு:

திருச்செங்கோடு 9, மதுரை 24, தஞ்சை 7, திருச்சி 5, பம்பாய் (தமிழ்நாட்டார்) 9, கோயமுத்தூர் 4, ராமநாதபுரம் 12, சென்னை 11, வட ஆற்காடு 1, திருநெல்வேலி 15, ஸ்ரீரங்கம் 1-ஆக மொத்தம் 98.

தொண்டர்கள் பிரயாணத்தில் தத்தம் மூட்டைகளைத் தாமே சுமந்து செல்லவேண்டுமென்பதும் ஆளுக்கொரு பாத்திரம் கையிலிருக்கவேண்டுமென்பதும் முக்கிய நிபந்தனைகளாகையால் ஏறக்குறைய எல்லாத் தொண்டர்களும் சுமப்பதற்குச் சுலபமாயிருக்கும்படி ஹாவர்சாக் பை ஒன்றும் அதிக கனமில்லாத செம்பு ஒன்றும் கொண்டு வந்திருந்தனர். கால்நடைப் பிரயாணத்தில் காசி முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை செல்லும் நமது நாட்டுச் சாதுக்கள் கழியொன்றைத் தோளில் வைத்துக்கொண்டு அதிலேயே மூட்டை முடிச்சுகளையெல்லாம் தொங்கவிட்டுக்கொண்டு ஒரே முகமாய் எல்லாப் பளுவையும் சுமந்து வெறுங்கையை வீசி நடந்துபோவது வழக்கம். அது போன்ற யாத்திரையே இதுவும் ஆதலால், பிரயாணத்திற்கு முதல் அங்கமாக ஒவ்வொரு தொண்டருக்கும் ஒவ்வொரு கழி வழங்கப்பட்டது. தலைவர்களையும் தொண்டர்களையும் வழி சொல்லியனுப்பி ஆசிகூற வந்திருந்த சில பிரமுகர்கள் தொண்டர்கள் பிரயாணத்தில் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டியதென்ற விஷயமாய்ச் சொற்பெருக்கு நிகழ்த்தினார்கள். இரவு 7 மணிக்கு மேல் தொண்டர்களிலிருந்து பத்துபேருக்கொரு தலைவராகப் பத்து உபதலைவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பிறகு தொண்டர்களுக்கு அறிகுறியாக நடுவில் வெள்ளையும் இருபுறத்திலும் நீலவர்ணமும் கொண்ட நாடாக்களும், அவற்றைமாட்டிக்கொள்ள ஒவ்வொரு ஊசியும் வழங்கப்பட்டன. இந்த வர்ணங்களின் தாத்பரியம், நீல நிறமுள்ள கடலிலிருந்து வெள்ளை நிறம் உள்ள உப்பை எடுக்கப்போகிறவர்கள் என்று சமயசந்தர்ப்பத்திற்கேற்றது போல் வியாக்கியானம் செய்தது போற்றத்தக்கதாயிருந்தது.

மேலே சொன்ன அலுவல்களெல்லாம் முடிவடைய இரவு 8½-மணி ஆயிற்று. இராப்போஜனத்திற்காக மணியும் அடிக்கப்பட்டது. இரவு தொண்டர்களும் தலைவரும், பிரமுகர்களும் எல்லோரும் ஏகபந்தியாயமர்ந்து உண்டபின் அதிகாலையில் புறப்படப்போகும் பிரயாணத்தைப்

பற்றியே பேச்சு நிகழ்த்தினவர்களாய் நித்திரையில் மூழ்கினர்.

படுத்து உறங்கிச் சரியாக 5 மணி நேரம் ஆயிற்று. எல்லோரும் அயர்ந்து நித்திரை செய்கிறார்கள். அச்சமயம். இரண்டொருவர்மட்டும் விழித்துக்கொண்டிருந்தனர். அவர்களுடைய கண்கள் கடியாரத்தின் பேரிலேயே நோட்டமாய் இருந்தன. சரியாக மணி 3-30 ஆயிற்று, இதுதான் சமயம் என்றார் ஒருவர். இவ்வளவு சீக்கிரமா என்றார் மற்றொருவர். எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொள்வதற்கு நேரம் வேண்டுமல்லவா என்றார் இன்னொருவர். கடைசியாக இதுதான் சரியான நேரம் என்று முடிவாயிற்று. உடனே 'டிங்—டாங்' என்று சேமக்கலத்தில் அறையுண்ட அடிகள் ஒன்றன் பின் ஒன்றாய் அடுத்தடுத்து அநேகம் கிளம்பி தூக்கத்தில் உள்ள தொண்டர்களின் செவித் தொளைகளில் ஊடுருவி ஒவ்வொருவரையும் உடனே எழுப்பிவிட்டன. முன்னால் எழுந்தவர்கள் மற்றவர்களையும் தட்டியெழுப்பி விட்டார்கள். ஐந்து நிமிஷ நேரத்தில் அலை ஓய்ந்த சமுத்திரம்போல் அடங்கிக் கிடந்த அந்த இடத்தில் சந்தை இரைச்சல் குடிபுகுந்தது. அரைமணி நேரத்திற் கெல்லாம் காலைக்கடன்களை முடித்துக் கொண்ட தொண்டர்கள் சிற்றுண்டிக்காக இதோ மணியடிக்கப்போகிறதென்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே, சரியாக 4 மணிக்கு மணியடித்தது. பிரார்த்தனைக்குப் பின் ஆளுக்கு இரண்டு வாழைப்பழங்களும், ஒரு கோப்பைத் தயிரும் வழங்கப்பட்டன. பஞ்ச பஞ்ச உஷத்காலத்தில் இப்பேர்ப்பட்ட சிற்றுண்டியை ஒருவரும் அதுவரை உண்டிருக்க மாட்டார், என்று சொல்லிக்கொள்வாரும், காப்பி கொடுத்திருந்தால் நிரம்பவும் நலமாயிருந்திருக்குமென்பாரும், காப்பி வழக்கம் பிரயாணத்தில் கூடாதென்ற நிபந்தனையை அதுசமயம் ஞாபகமூட்டித் தவறாகச் சொல்லிவிட்ட காப்பிப் பிரச்சினையைக் கண்டிப்பாரும் இவ்விதமாகச் சிற்றுண்டி முடிவதற்குச் சரியாக 4-30 மணி ஆயிற்று. தொண்டர்கள் எல்லாரும் மூட்டையும், செம்பும், கழியுமெடுத்துக்கொண்டு

பிரயாணத்திற்குப் புறப்படுவதற்கு ஆயத்தமாய் வரிசையாய் வந்து நின்றனர். அந்தச் சமயம் மங்களப் பெண்மணிகள் ஒவ்வொரு தொண்டரின் நெற்றியிலும் குங்குமம் இட்டு ஜயத்தோடு திரும்பி வருக என்று ஆசிகூறி வந்தனர்.

## வேள்வித் திசையில்

இரவு 12 மணியோடு சுக்கில வருஷம் கழிந்து பிரமோதூத வருஷம் உதயமாயிருந்தது. சித்திரைமாதம் முதல் தேதி ஆதிவார சுபதினமாகிய அன்று காலை 5 மணிக்குச் சரியாகத் தலைவர் ஸ்ரீ ச. இராஜகோபாலாச்சாரியார் சங்க முழக்கம், முரசொலி இவைகளுக்கிடையே தேசீயக்கொடியை முன்னே நடத்திக்கொண்டு அடிபெயர்த்து வைத்துப் பிரயாணத்தை ஆரம்பித்தார்.

திருச்சி நகர் வாசிகள் அநேகர் புறப்படும் நேரத்திற்கு வந்து பங்களாவிற்கு வெளியே காத்துக்கொண்டிருந்தனர். இரண்டிரண்டு பேராய் அணிவகுத்த தொண்டர்படை சுமார் 50 கஜம் வரை நீளமுள்ளதாய்ச் செல்ல இருபாரிசத்திலும் உள்ளூர்வாசிகள் இளைஞரும், முதியோருமாக அநேகர் கூடவே வந்துகொண்டிருந்தனர். டாக்டர் ராஜன் பங்களா திருச்சி தண்டில், ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஒரு பர்லாங்கு தூரத்தில் இருக்கிறது. இந்த பங்களாவுக்கும் திருச்சிக் கோட்டைக்கும் சுமார் இரண்டுமைல் தூரமிருக்கும். 'வந்தே மாதரம்' 'ஜய ஜய பாரத' முதலிய பாரதியார் தேசீய கீதங்களைப் பாடிக்கொண்டு புறப்பட்ட தொண்டர்படை அபிமானிகள் புடைசூழ வெகுவேகமாகவே நடந்துபோய் வழியிலுள்ள போலீஸ் ஸ்டேஷன் அருகில் வந்தபோது பொழுது புலர்ந்துவிட்டது. இதைத் தாண்டிச் சென்றதும் தொண்டர்படை நெடுகக் கடைத்தெரு வழியாகக் காந்தி மார்க்கெட்டுக்கு வந்து சேர்ந்தது. அங்கு கடைக்காரர்களெல்லாரும் சேர்ந்து ஒவ்வொரு தொண்டருக்கும் பூமாலைகளைச் சூட்டி ஆசி கூறினர். பிறகு சந்தனம் கற்கண்டு, வழங்கப்பட்டபின் அதைவிட்டுக் கடைத்தெரு

வழியாகவே வந்துகொண்டிருந்தது. பாறைக் கோட்டை அதோ தெரிகிறது என்று சொல்லிக் கொண்டு வெகு வேகமாகத் தொண்டர்படை மலைக்கோட்டை வாசலிலும் கடைக்காரர்கள் சார்பாக வரவேற்பு உபசரணை செய்வதற்காக நிறுத்தப் பட்டது. அங்கு கடைக்காரர்களெல்லோருடைய ஆதரவில் சந்தனம், புஷ்பம், வாழைப்பழம், பயத்தம் பாயசம் கஞ்சியும் வழங்கப்பட்டன. அத்துடன் பணமுடிப்பும் அளிக்கப்பட்டது.

இந்தச் சந்தர்ப்பத்தில் மகாத்மா கைதியாகி விட்டார் என்ற வதந்தி வந்திருப்பதாக அந்த இடத்தில் டாக்டர் ராஜன் அவர்கள் சொன்னார். ஆனால் இந்த வதந்தி சரியல்ல வென்று பின்னால் தெரிந்தது. 6 மணிக்கு அவ்விடத்திற்கு வந்து அவ்விடம் உபசரணையெல்லாம் முடிந்து பிரயாணம் தொடங்குவதற்கு அரை மணி நேரம் பிடித்தது. ஜனக் கூட்டம் பெரு வாரியாகக் கூடி விட்டது. வாசற்படியிலும், வீட்டு மெத்தை மேலும், ஆண், பெண் குழந்தைகள் கூட்டங் கூட்டமாய்க் கூடி நின்று மலர் சொரிவாரும், வாழ்த்துக் கூறுவோருமாய் வெகு சிறப்பாக வழி சொல்லி யனுப்பிக் கொண்டிருந்தார்கள்.

அப்பால் தொண்டர்படை மாணவர் விடுதிப் பக்கமாய்த் திரும்பி வேகமாய்க் காவிரியாற்றுப் பக்கமாய்ச் சென்று கொண்டிருந்தது. வரவர ஜனக்கூட்டம் வெகு நெருக்கமாகிக் கொண்டு வந்ததில் அங்கெழுந்த தூசியானது பெரும் புகை போலக் கிளம்புவதாயிற்று. இந்த விதமாக ஆற்றுப் பாலத்தருகில் தொண்டர்படை வந்தது. ஜனங்களெல்லோரும் சற்றுப் பின்னால் வருமாறு கேட்டுக்கொள்ளப் பட்டனர். தொண்டர்படை மட்டும் சங்கடமின்றி மேலே செல்வதற்கு வழியுண்டாக்கப்பட்டது.

தொண்டர்படை ஆற்றுப்பாலத்தைக் கடந்து அக்கரை சேர்ந்த சமயத்திற்கு ஸ்ரீரங்கத்திலிருந்து வரவேற்று அழைத்துச் செல்வதற்காகக் காங்கிரஸ் கமிட்டியார்

மேளதாளம் தேசீயக் கொடிகளுடன் வந்து தயாராக விருந்தனர்.

காவிரி, கொள்ளிடம் ஆகிய இரண்டாற்றின் இடையே நீர்வளம் மிஞ்ச நிமிர்ந்து நிற்கும் திவ்விய வைஷ்ணவ க்ஷேத்திரமாகிய ஸ்ரீரங்கம் அநேகவித விருக்ஷ ஜாதிகளுக்கு இருப்பிடமாய் நிழலை மயமாய் இருந்தது. வழிநெடுகப் புழுதி மேலே கிளம்பாதபடி தண்ணீர் தெளிக்கப் பட்டிருந்தது.

வந்தேமாதர கோஷத்துடனும் மேளதாளங்கள் மங்கலத் தொனிகள் முழங்க மிகவும் பொருத்தமான முறையில் வரவேற்கப்பட்ட தொண்டர்படை நேராகக் கார்னேஷன் ஹால் என்னுமிடத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டது. புகைப்படம் எடுப்பவர்கள், தொண்டர்கள் நுழையும் போதும் உட்காரும்போதும், தலைவர் பேசும்போதும் படங்கள் எடுத்துத் தங்கள் தொழிலுக்கு அநுகூலம் தேடிக்கொண்டிருந்தனர். இவ்விடத்தில் பிரார்த்தனைக்குப் பின் தலைவர், யாத்திரைபுறப்பட்டிருப்பதின்நோக்கமும்,மஹாஜனங்களெல்லோரும் படைக்கு ஜயமுண்டாக வேண்டுமென்று தங்கள் தங்கள் இஷ்டதெய்வங்களைப்பிரார்த்திக்க வேண்டுமென்றும், இந்த உப்புசத்தியாக்கிரகம் இடைவிடாமல் வெற்றி கிடைக்கும் வரை நடத்துவதற்கு ஆட்களும், பணமும் அத்தியாவசியமென்றும் இவைகளை மஹா ஜனங்கள் அவசியம் சேகரித்து அனுப்பிக் கொண்டே இருப்பார்கள் என்று தாம் நம்புவதாகவும் பேசினர். இங்கு ஸ்ரீரங்கம் பொது ஜனங்களெல்லோரும் சேர்ந்து ரூபா 300 கொண்ட பணமுடிப்பை அளித்தனர். இதுவரை வசூலான ரூபாய் பத்தாயிரத்தில் திருச்சி வக்கீல்கள் ரூ. 450ம், மாணவர்கள் ரூ. 38ம், மதுரை, கல்லிடைக்குறிச்சியிலிருந்து ரூ.800ம், 50ம் வசூலிக்கப்பட்டது. கூட்டங் கலைந்ததும் தொண்டர்படை ஸ்ரீ கொடியாலம் ரங்கசாமி ஐயங்கார் பங்களாவிற்குச் சென்று இறங்கியது. அப்போதுகாலை 9மணியிருக்கலாம். பங்களாவிற்குப் பின்னல் அரை பர்லாங்கு தூரத்தில் காவிரியாற்றின் கிளை நதி

யொன்று ஓடிக்கொண்டிருந்தது. தொண்டர்கள் அங்கு போய் ஸ்நானம் பண்ணிக்கொண்டு சிறுகச் சிறுகத் திரும்பி வந்தனர். மணி 10-30 ஆயிற்று. பகல் போஜனத்திற்கு மணியடித்தது. ஆலசியம் பண்ணியிருந்த தொண்டர்கள் அவசரமாக ஸ்நானம் முடித்துக் கொண்டு துவைத்த வேஷ்டி களைக் காயப் போட்டு உலர்ந்த உடைகளை உடுத்துக் கொண்டு போஜனஞ் செய்யப் புறப்பட்டனர். அரை மணி நேரத்தில் போஜனவேலை முடிந்தது. இரவு கண்விழித்தத் தொண்டர்களுக்கு வயிற்றில் சாப்பாடு விழவும் இளைப்பாற வேண்டுமென்ற அவசியம் ஏற்பட்டு மூலைக்கொருவராய்ப் போய்ப் படுத்துக் கொள்ளத் தலைப்பட்டனர்.

பத்திரிகை நிருபர்கள் முந்தின நாளிலிருந்து அங்கு வந்து சேரும் வரை நடந்த வரலாற்றை யெல்லாம் எழுதித் தபாலுக்கனுப்பிக் கொண்டிருந்தனர். "சுயராஜ்ய" நிருபர், சுப்பிரமணிய ஐயரும் ஹிந்து நிருபர் நடேசய்யரும் படையோடு கூடவே நடந்து பிரயாணஞ் செய்து வந்தனர். விளம்பரப் பிரிவார் தாங்களும் விஷயங்களை விரிவாய் எழுதி வைப்பதும், நிருபர்களுக்குத் தேவையான விஷயங்களைச் சொல்லி வருவதுமாய் இருந்தனர். தலைவருக்கோ தொடர்ச்சியாய் வந்து கொண்டேயிருந்த ஸ்ரீரங்கவாசிகளைக் கண்டு பேசுவதற்குச் சரியாயிருந்தது.

நிற்க, தொண்டர் ஒவ்வொருவருக்கும் நூல் நூற்கும் தக்ளி ஒன்றும் கொஞ்சம் பஞ்சும் கொடுக்கப்பட்டது. தினம் ஒன்றுக்கு 50 கஜம் நூல் கொடுத்து வரவேண்டு மென்னும் நிபந்தனை இருந்தது. எனினும் நிரம்பவும் அவசியமான, அவசரமான வேலைகளை மேல்போட்டுக் கொண்டவர்களைத் தவிர மற்றவர்களெல்லோரும் இளைப்பாறுவதாகவே காணப் பட்டனர்.

மாலை 4மணிக்கெல்லாம் இரண்டாவது போஜனத்திற்கு மணியடித்து விட்டது. போஜனமான பிறகு மாலைப் பிரயாணம் ஆரம்பமாயிற்று. வெளியிடத்தில் மாலைச் சூரியனு

னிலும் வெகு உக்கிரமாகவே கிரணங்களை வீசிக்கொண்டி ருந்தது. சாப்பிட்டவுடன் பிரயாணப்பட்டதே அநேக தொண்டர்களுக்குச் சங்கடமாயிருந்தது. கூட வெயிலில் கொண்டு வந்து நிறுத்தி விட்டார்களென்று ஒருவித முணு முணுப்பும் கூட்டத்தில் கிளம்பியது. எல்லாத் தொண்டர் களும் சரியாயிருக்கிறார்களா வென்று கவனிப்பதற்காக வரிசையாக இலக்கம் சொல்லிக் கொண்டு வந்தனர். தொண்டர் தொகை சரி பார்த்தானபின் தளபதி சுப்பிரமணியம் புறப்படலாமே என்பதற்கறிகுறியாக ஊதல் சப்தம் கொடுத்தார். உடனே தேசிய கீதம் துவக்கமாயிற்று. படையும் ஐயங்காரவர்கள் பங்களாவை விட்டுப் புறப்பட்டு ஐந்து நிமிஷத்திற்குள்ளாக ஸ்ரீரங்கநாதர் சந்நிதியை யடைந்தது. கோவிலைச் சுற்றியுள்ள நான்கு வீதிகளையும் பிரதக்ஷிணம் வந்து வழியில் நடந்தேறிய உபசரிப்பை யெல்லாம் ஏற்றுக் கொண்டு திரும்பவும் நுழைந்த வழி யாகவே வெளிப்போந்து மீண்டும் கார்னேஷன் ரஸ்தாவி லேயே ஐயங்காரவர்கள் பங்களாவரை வந்து, அப்பால் திருவானைக்காவல் மார்க்கமாய் தொண்டர்படை ஓடோடி யும் சென்றுகொண்டிருந்தது.

## திருவளர் சோலை

பத்து நிமிஷத்தில் திருவானைக்காவல் வந்தாயிற்று அங்கு ஓர் அக்கிரகாரத்தில் பானகம் வழங்கப்பட்டபின் அந்த இடத்தை விட்டுக் கோவில் மதிலை யொட்டியதாகவே தொண்டர்படை நடந்து கடைசியில் அறுவடையான வயல் களில் இறங்கி மேலே செல்ல ஆரம்பித்தது. சிறிது தூரம் இவ்வாறே நடந்து போனபின் ஒரு வாய்க்கால் கரைமேல் ஏறியது. இந்த வாய்க்காலே திருவளர்ச்சோலைவரை துணை யாகவந்தது. இந்த வாய்க்கால் கரை சிறிது தூரம் கெட்டித் தரையாகவும், சிறிது தூரம் மணல் தரையாகவும் மாறிமாறி யிருந்தது. மணல் தோன்றிய இடத்தில் நடப்பது மிகவும் கஷ்டமாயும், நடைவழி குறுகிய இடத்தில் ஒற்றை வரிசை யாக ஒருவர்பின் ஒருவராக நடந்தும் இவ்வாருகத்

திருவளர்சோலை நோக்கிப் படை சென்று கொண்டிருந்தது வழியில் மா, கொய்யா, பலா முதலிய விருக்ஷ ஜாதிகள் நோக்கிய திசைதோறும் தென்பட்டன சூரியன் பூராவும் அஸ்தமனமாகி இருள் கவிகிற சமயத்தில் பாதி ஒளியும் பாதி இருளுமாக இருக்கும்பொழுது பார்த்த விடமெல்லாம் தோட்டமும் சோலைகளும் ஆங்காங்கு கூடுகளில் போய்ப் புகும் பக்ஷிகளுடைய சப்தமும், ஆடுமாடுகள் பொழுது பூராவும் மேய்ந்து விட்டு வயிறு நிரம்பத் திருப்தியோடு, வீட்டிலுள்ள கன்றுகளை நினைத்துக்கொண்டு இடையன் ஓட்டுவதற்கு முன் தாமாகவே ஊர்நோக்கி வேகமாய் ஓடிச் செல்வதும், ஆங்காங்கு சிறு பையன்கள் உற்சாகமாய்ப் பாடிக்கொண்டு ஊர்நோக்கிச் செல்வதும், மாட்டு மந்தைக்குப்பின் சாணந் திரட்டச் சென்ற சிறு பெண்கள் ஓடோடியும் வந்து சேருவதையும் பார்த்துக் கொண்டே தொண்டர்படை சென்று கொண்டிருந்தது.

திருவளர்ச்சோலைக்கருகில் ரஸ்தாவை யடுத்து வாய்க்கால் ஒன்று ஓடிக்கொண்டிருந்தது. அங்கு ஒரு சிறு பிள்ளையார்கோயில் இருந்தது. அந்த இடத்தில் கைகால் அலம்புவதற்காகச் சற்று தாமதம் செய்யப்பட்டது. அதற்குள்ளாகத் திருவளர்சோலையிலிருந்து கைவிளக்குகளை ஏந்திக்கொண்டு சில பிரமுகர்கள் வந்தனர். அவர்கள் முன்னால் செல்லத் தொண்டர்படை புறப்பட்டது. ரஸ்தாவை விட்டு ஒற்றையடிப் பாதை வழியாக ஒரு பர்லாங்கு தூரத்தில் ஊர் இருந்தது. இந்த கிராமத்தில் பொதுக்கூட்டம் கூடுவதற்கு வசதியான வெளியிடங்கள் இல்லாததால் நடுத் தெருவிலேயே கூட்டம் கூட்டப்பட்டிருந்தது. தலைவர் ராஜாஜி உட்காருவதற்கு நாற்காலி போடப்பட்டிருந்தது. அதன் பக்கத்தில் ஒரு கயிற்றுப்பின்னல் கட்டில் இருந்தது. இதன்பேரில் பத்திரிகை நிருபர்கள் இரண்டு பேர்களும் விளம்பர இலாகாவைச் சேர்ந்த மூவரும் நெருங்கி உட்கார்ந்துகொண்டனர். பிறகு தலைவர் உப்பு சத்தியாக்கிரஹ தத்துவத்தை விரிவாக எடுத்துச் சொன்னர். இரவு

9-மணியாகிவிட்டது. தொண்டர்களெல்லாரும் படுக்கை ஜாகைக்காக ஒரு பஜனை மடத்திற்கு அழைத்துச் செல்லப் பட்டனர். இந்த மடம் அந்த ஊரராரைச்சேர்ந்த பொது ஸ்தலம். இதில் நடுவில் ஒரு கூடமும், அதைச்சுற்றி ஒரு தாழ்வாரமும், கிணறும், முற்றத்தில் மரஞ்செடிகளோடு அடக்கமாய் அமைக்கப்பட்டிருந்தன. ஸ்ரீராமநவமி உற்சவத்திற்காகப் பிரதிதினமும்போல் அந்தத் தினத்திலும் பத்துமணிக்குமேல் இரண்டுபேர் வந்து அந்தக் கூடத்துக் கதவைத் திறந்து, விளக்கேற்றி, உள்ளே வைக்கப்பட்டிருந்த சுவாமி படங்களுக்கு முன்னால் சுதி ஹார்மோனியம் தாளம் முதலிய ஜமாக்களுடன் சில கீர்த்தனைகளைப் பாடிவிட்டு கற்பூர ஆராத்தியுடன் தேங்காய் பழங்கள் நிவேதனம் சமர்ப்பித்து ஆனபின் கதவைப் பழையபடி மூடிவிட்டுப் போயினர். தொண்டர்களெல்லோரும் வெளித்தாழ்வாரத்தி லேயே படுத்திருந்தனர். இடம் போதாமல் சில தொண்டர் கள் அடுத்துள்ள கோவிலில் போய்ப் படுத்திருந்தார்கள்.

## கல்லணை

காலை நான்கு மணிக்கெல்லாம் சங்கு ஊதியது. தொண்டர்கள் எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொள் வதற்காகக் கைச்செம்புகளைக் கொண்டு வெளியே சென்று அரைமணி நேரத்திற்குள் திரும்பி வந்தனர். பிரார்த்தனைக்குப் பின் 5-மணிக்குச் சிற்றுண்டி தயாராயிற்று. கூட்டம் நடந் தேறிய இடத்திற்கு அருகில் ஒரு வீட்டிற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அங்கு படைக்கப்பட்ட சிற்றுண்டி பேருண்டியாகவே இருந்தது. வேண்டியமட்டும் உப்புமாவும், பொங்கலும், சர்க்கரையும், வாழைப்பழமும், தயிரும் சாப்பிட்டது பகல் போஜனத்திற்கு மேலாகவே இருக்கும். சிற்றுண்டி முடிந்ததும் பிரயாணம் துவக்கமாயிற்று. தொண்டர்களெல்லோரும் கழியுங்கையுமாக வெளிக்கிளம்பி னர். சரியாக 5-30மணிக்குத் தேசிய கீதங்களைப் பாடிக் கொண்டு அவ்விடமிருந்து புறப்பட்டனர்.

ஒற்றையடிப்பாதை வழியாய் வயல்களெல்லாம் தாண்டி ஒரு பர்லாங் தூரத்தில் ரஸ்தாவை அடைந்தது. பிரயாண வழி மிகவும் ஜாஸ்தியாய் வளர்ந்துவிடாமல் கூடியமட்டில் சுருக்கமான பாதைகளைப் பின்பற்றியே குறித்த இடங்களுக்குப் போய்ச்சேர்வது பிரயாணத்தில் ஓர் ஏற்பாடாயிருந்தது. பாதை கடினமானதாய் இருக்குமென்ற காரணத்தால் சுலபமாகச் செல்லக் கூடிய சுற்றுப்பாதைகளை எக்காரணத்தைக் கொண்டும் பின்பற்றவில்லை. ஒரு கெடியிலிருந்து மற்றொரு கெடிக்குப் போய்ச் சேருவதில் சுருக்குப் பாதையைப் பின்பற்றுவதால் குறைந்தது அரைமணி நேரம் மிச்சப்படுவதாயிருந்தது. எனவே திருவளர்சோலையை விட்டுப் புறப்பட்ட தொண்டர்படை சிறிது நேரம் ரஸ்தா வழியாகவே சென்று பிறகு ஒரு வாய்க்கால் கரையில் ஏறியது. இந்தப்பாதை சற்று களிமண் கலந்த தரையாயிருந்தது. மழைநாளாயிருந்தால் இதன்பேரில் நடக்க முடியாது. மணல் மண் அள்ளிச் செல்வதற்காக இந்தக் கரையின்பேரில் தள்ளுவண்டிகள் தள்ளிச்செல்லும் தண்டவாளங்கள் போடப்பட்டிருந்தன. சற்றுத் தூரத்தில் கட்டப்படும் ஒரு பாலத்திற்கு வேண்டிய களிமண் ஏற்றிக்கொண்டு போவதற்காக இந்தத் தண்டவாளம் போடப்பட்டிருந்தது.

## சபரி உபசாரம்

வளைந்து வளைந்து சென்ற இந்த வாய்க்கால் கரையின் மேல் ஒற்றை வரிசையாகப் பிரிந்து தொண்டர் படை ஒரு பர்லாங்கு தூரம் நீண்டு நடந்து சென்றது. தேசீயகீதம் முறை வைத்துச் சொல்லும் சுப்பய்யர் ஒரு கோடியிலிருந்து பாடியதால் பாதி தூரத்திற்கும் எட்டாமலிருந்தது. இதனால் பாதிப்பேர் பாடுவதும் சிலர் அறைகுறையாய்ப் பாடுவதும் சிலர் மௌனமாய்ச் செல்வதுமாயிருந்தனர். ஆகவே முதலில் நின்ற சுப்பய்யர் நடுவரிசையில் வந்து கலந்து கொண்டார். அப்பொழுது நன்ருய்ப் புலர்ந்திருந்தது.

கிராமவாசிகளில் கூலிவேலை செய்யக் கூடிய ஆண் பெண் குழந்தைகள் அந்தக் கரையின் மேல் எதிரில் வந்து கொண்டிருந்தனர். அவர்களுக்கு இந்த நூதனமான பிரயாணம் ஆச்சரியத்தையும் பிரமிப்பையும் விளைவிக்க கூடியதாயிருந்தது. 'கத்தியின்றி ரத்தமின்றி' முதலான வீரச்சுவை ததும்பிய பாடல்களைக் கேட்டு அந்தச் சுவாரஸ்யத்திலே ஈடு பட்டவர்களாய் நெடு நேரம் வரை பின்னோக்கிப் பார்த்த வண்ணமாய் நின்று பின்னால் தங்கள் ஜோலிகளுக்குச் சென்ற வண்ணமிருந்தனர். இந்த இடத்தில் சுமார் 80 வயதுள்ள ஒரு கிழவி ஒரு தட்டில் கற்கண்டு வைத்துக் கொண்டு படைக்கு முன்னால் வந்திருந்து வழங்கி உபசரித்தாள். அது அந்தக் காலத்தில் சபரி ஸ்ரீராமனுக்குச் செய்த உபசரிப்பை ஒத்திருந்தது. கொள்ளிடம் சற்று தூரம் வாய்க்காலையொட்டியதாய்ச் சமீபிப்பதும் சற்று தூரம் தள்ளிச் செல்வதுமாய் கூடவே தொண்டர் படையைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்தது.

காலை ஏழு மணி ஆயிற்று. சூரியனுடைய இளங் கிரணங்கள் தொண்டர்களை வரவேற்ற வண்ணமாய்க் கீழ்த் திசையினின்று வீசிக்கொண்டிருந்தன. கால்கள் தரைக்குப் படுமோ படாதோ என்ற பான்மையில் ஓட்டமும் நடையுமாகப் படை சென்று கொண்டிருந்தது. தலைவர் ராஜாஜி வாலிப தசைக்குத் திரும்பியவர் போல் நடந்த விசையில் தொண்டர்களை யெல்லாம் பின்னால் ஓடி வரும்படி செய்து விட்டார். இந்த விதமாய்த் தொண்டர்படை கல்லணையை நெருங்கிக் கொண்டிருந்தது. கல்லணைப்பாலம் இரண்டு பர்லாங்குத் தூரமிருக்கையில் லால்குடித் தாலுக்கா பிரமுகர்கள் கூடி வரவேற்புக்காக வந்தனர். வைதிகப் பிராமணர்கள் மங்கள ஆசி கூறி வரவேற்க, அவர்களின் பின்னால் தொண்டர் படை சென்று காவிரியாற்றின் கரையில் ஒரு மாந்தோப்பில் இறங்கியது.

இந்த இடம் தங்குவதற்கு மிகவும் வசதியாய் அடர்த்தியான நிழலோடு கூடியிருந்தது. சுமார் 100 கெஜம் குறுக்

களவு உள்ளபெரிய வட்டமாய் ஒரு பெரிய சேனை தங்கு வதற்கு ஏற்றதாயுமிருந்தது. ஆற்றங்கரையாதலால் தரை பூராவும் மணல் தரையாகயிருந்தது. ஒரு புறம் ஆற்றுப் படுகையும் பெரிய அணைகட்டும் ஒருபுறம் பசும்புல்தரையும் ஒருபுறம் வயல்களும் பார்க்க நேத்திரோற்சவமாயிருந்தது. ஆற்றைக் கடந்தால் தஞ்சை ஜில்லாவை மிதிக்கப் போகிறோம் என்ற நிலையில் இந்தத் தங்குமிடம் அமைந் திருந்தபடியால், தடுக்கப்பட்ட தஞ்சை ஜில்லாவின் எல்லை யிலிருக்கிறோம் என்ற எண்ணம் ஒவ்வொரு தொண்டர் உள்ளத்திலும் ஊடாடிக்கொண்டிருந்தது. அத்துடன் தஞ்சைஜில்லா ரகசியப் போலீஸ் உத்தியோகஸ்தர்கள் அந்த இடத்தில் முதல் முதலாக வந்து தலைக்காட்டியதால் அதே இடத்தில் தலைவர் கைது செய்யப் பட்டு விடுவார் என்றே எல்லாத் தொண்டர்களும் எண்ணி விட்டனர். தலைவரும் அவ்வாறே எண்ணியிருந்தார். சிறையை எதிர் நோக்கி வந்தவர்களாயினும் தலைவர் தங்களை விட்டு இவ் வளவு சடுதியில் பிரிக்கப்படுவது தொண்டர்களுக்குச் சற்று வியாகூலத்தையே உண்டு பண்ணக் கூடியதாயிருந் தது. ஏனென்றால் அந்த உத்தியோகஸ்தர்கள் உத்தியோக முறையிலில்லாமல் மாற்றுடைகளைத் தரித்துக் கொண்டு தொண்டர்களின் ஜாபிதாவைக் கேட்பதும் மற்றும் உளவு களைத் தெரிந்து கொள்வதும் தூரத்தில் போய் ஒருவருக் கொருவர் ரகசியமாய்ப் பேசிக்கொள்வதுமாய் இருந்தார் கள். தொண்டர்கள் அவசரமாய் ஸ்நானம் முடித்து வந்து கொண்டிருந்தார்கள். தோப்பின் ஒரு மூலையில் சமையல் ஆகிக்கொண்டிருந்தது. தாளிப்பு வாசனையும் சப்தமும், கேட்டு விட்டது. இன்னும் அரைமணி நேரத்தில் சாப்பாட்டு மணியை எதிர் பார்த்த வண்ணமாயிருந்தார்கள்.

## மதுவிலக்கு பிரசாரம்

நிற்க, இந்த இடம் மது விலக்குப் பிரசாரத்திற்கு மிகவும் பொருத்தமாயிருந்தது. கள்குடியினால் வரும் கேடு களை யெல்லாம் விளக்கிக் காட்டும் சித்திரப் படங்கள்வரிசை

யாகக் கயிற்றில் கோத்து மரங்களோடு சேர்த்துக் கட்டப் பட்டன. ஆதித்திராவிட மக்களும் ஏனையோரும் பெருங் கூட்டமாகக் கூடிவிட்டனர். தீண்டாமை, மது விலக்கு இவைகளை உலகுக்கு எடுத்துப் போதனை செய்து வரும் மஹாத்மா காந்தியடிகளின் சீடர்கள் உப்பு எடுக்கும் நிமித்தமாகக் கால் நடையாகவே வேதாரண்யம் செல்கின்றார்கள் என்ற செய்தி அக்கம் பக்கத்திலுள்ள ஜனங்களை வெகு உற்சாகத்துடன் கிளப்பி விட்டிருந்தது. இவர்கள் செய்யக்கூடிய உபதேசங்கள் என்னவென்பதைக் கேட்க வேண்டுமென்ற ஆவல்கொண்டவர்களாய் எப்பொழுது படம் கட்டுவார்கள் என்று அவர்கள் கேட்ட வண்ணமாயிருந்தனர்.

அந்தச் சமயத்தில் தலைவர் ராஜாஜி படங்கள் கட்டியிருந்த இடத்திற்கு வந்து ஒவ்வொரு படத்திலும் உள்ள தாத்பரியங்களை எடுத்து விளக்கி வந்தார். முதலாவது படத்தில் மூன்று கட்குடியர்கள் கள்ளுக்கடைக்குச் செல்லும் பாவனையாக எழுதப்பட்டது. ஒருவன் அதுவரை குடித்தறியாதவன். மற்ற இருவர் நன்றாய்க் குடித்துப் பழக்கமடைந்தவர்கள். இந்த இருவரும் அந்தத் தினத்தில் தொழிற்சாலையிலிருந்து சம்பளம் வாங்கி வரும் புதிய மனிதன் ஒருவனை மயக்கித் தங்கள் வலையில் போட்டுக் கொண்டு கடைக்கு அழைத்துப் போகிறார்கள். அவன் வரமாட்டேனென்று முதலில் சொல்லுகிறான். பிறகு தாக்ஷிணியத்திற்காகக் கூடப் போய் வருவோமென்று போகிறான்.

இரண்டாவது படம். கள்ளுக் கடைக்காரன் உயர்ந்த ஆசனமொன்றில் உட்கார்ந்து கொண்டிருக்கிறான். அவன் இடது கைப்புறம் ஒரு பீப்பாய் நிறையக் கள் இருக்கிறது. அந்தப் பீப்பாய்க்குக் கீழே ஒரு குழாய் இருக்கிறது. அதைத் திறந்து மொந்தையில் வார்த்துக் கொண்டிருக்கிறான். யார் முன்னால் பெற்றுக்கொள்வது என்பதில் போட்டி நடந்து கொண்டிருக்கிறது. கஷ்டப்பட்டுத் தேடிய பணத்தை அலட்சியமாய் வீசி எறிந்து, குடித்த வெறியில்

சில்லறையும் வாங்கிக் கொள்ளாமல் சிலர் போகிறார்கள். இதை விட்டுச்சற்று அப்புறம் போனால் ஒருவன் ஒரு தட்டில் மொச்சைக் கடலை, தோசை, மாமிசம் இவையெல் லாம் வைத்துக் கொண்டிருக்கிறான். அவனிடத்தில் குடித்த ஒவ்வொருவனும் போய் பக்ஷணங்கள் வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டு போதையால் அசைந்தாடி நடந்து போகிறார்கள்.

இந்தக் கும்பலில் மேலே ஒரு பாராவில் சொன்ன மூன்று பேரும் காணப்படுகின்றனர். அவர்களும் நன்றாய்க் குடித்து விட்டு வெளியேறிக் கொண்டிருந்தார்கள். புதுக் குடியன் பாடு திண்டாட்டத்தில் வந்து விட்டது. வெறி பிடித்து வெளியே போகிறவர்களையும் வருகிறவர்களையும் கண்டபடி திட்டிக்கொண்டே போனான். அதைக் கேட்ட சிலர் அவனைக் கண்டித்தார்கள். குடியனுக்குக் கோபம் வந்து விட்டது. கண்டித்தவர்களையெல்லாம் அடிக்க ஆரம்பித்தான். இவன் கையில் அதுசமயம் ஒரு பேனாக் கத்தியிருந்தது. அதைக் கொண்டு ஒருவனைக் குத்தி விட்டான். மற்ற இரண்டு பேர்களும் ஓடிவிட்டார்கள். இது 3-வது படத்தில் காணப்படும் விஷயம்.

இனி 4-வது படத்தில் குடியனைப் போலீசார் பிடித்துக் கொண்டு போகிறார்கள். அவன் கையிலிருந்த ரத்தந் தோய்ந்த கத்தியைப் பத்திரமாய் வைத்துக் கொண்டார் கள். குடியன் இன்ன இடத்திற்கு செல்கிறோமென்ற உணர்ச்சியில்லாமலே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் அடைக்கப்படுகிறான்.

5-வது படத்தில் கொலை செய்த குற்றவாளி கோர்ட் டில் நிற்கிறான். தான் குற்றம் செய்தது ஞாபகமே யில்லாமற் போய் விட்டது. உடனே அவனுடைய கத்தியே ருசுவாக கோர்ட்டாருக்கெதிரில் வைக்கப் படவே அவன் அது தன்னுடைய கத்தி யென்று ஒப்புக் கொண்டான். அவன் பேரில் ஏற்பட்ட குற்றத்திற்காக நீதிபதி 5 வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கிறார்.

6-வது படம். குற்றவாளி அழுதுகொண்டே சிறைச் சாலைக்குப் போகிறான். அங்கு அவனுக்கு கக்கூஸ் அள்ளும் உத்தியோகம் கொடுக்கப்படுகிறது.

7-வது படம். குற்றவாளியின் வீட்டில் பெண்சாதி குழந்தை, தாயார் பட்டினியாய்க் கிடந்து அகோரமாய் அழுது கொண்டிருக்கிறார்கள். தண்டிக்கப்பட்ட விஷயம் யாரோ ஒருவரால் தெரிவிக்கப்பட்ட பின்புதான் அவர் களுக்கு விஷயம் தெரிந்தது. அதுவரை சம்பளம் வாங்கப் போனவன் எங்கே போய் விட்டானோ என்று ஏங்கிக் கொண்டிருந்தார்கள். முந்தின நாள் பூராவும் பட்டினி. அன்றைத் தினமும் வகையில்லாமல் திகைத்துக்கொண்டிருக் கிறார்கள். ஒரு மாதத்திற்கு வேண்டிய அரிசி, பருப்பு, உப்பு, புளி, மிளகாய் அவனுடைய சம்பளம் வந்து தான் வாங்க வேண்டுமென்ற நிலையில் இருந்த அந்தக் குடும்பத்தின் கோர காட்சியைப்பார்த்தால் மிகவும் பரிதபிக்கத் தக்கதல்லவா?

8-ஆவது படம். கள்ளுக்கடையை மூடி விட்டால் இந்தச் சங்கடமெல்லாம் நீங்கிவிடும் என்பதைக் காட்டக் கடையை மூடிப் பெரிய பூட்டுப் போட்டிருக்கிறது.

9-ஆவது படம். கள்ளு மொந்தையையும் பிராந்தி விஸ்கி சீசாக்களையும் தூக்கில் போடும் பாவனையாக வரையப்பட்டது. இதன் தாத்பரியம் மனிதனைக் கெடுத்துக் கொலைகாரனாக்கியது மது. அந்த மதுவை இல்லாமல் தொலைத்து விட்டால் கொலைக் குற்றம் நடவாது என்பதைக் காட்டுவதாகும்.

குடித்துக் கெட்டவன் குடும்பத்தின் அவலக்ஷணமான காட்சியும் யோக்கியமாயிருந்த குடும்பத்தின் சந்தோஷமும் தேஜஸும் விளக்கிக் காட்டும் படங்களென்ன! மதுபான வகைகள் அன்னிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப் படும் கணக்கைத் தெரிவிக்கும் படங்களென்ன! இன்னும் மதுவிலக்குச் சம்பந்தமாகப் பொதுஜனங்கள் மனதில்

என்னென்ன விஷயங்கள் பதிய வேண்டுமோ அவற்றைச் சுலபமாக மனதில் பதியும்படி புகட்டக் கூடிய முறையில் படங்கள் வரையப்பட்டிருந்தன.

இவைகளையெல்லாம் தலைவர் ராஜாஜி அங்குக் கூடியிருந்த ஜனங்களுக்குக் காட்டி வந்தார்.

பகல் 12 மணி சுமாருக்குத் தலைவருடன் ஸ்ரீ கொடியாலம் ரங்கசாமி ஐயங்கார் வந்து பேசிக்கொண்டிருந்தார். இந்த சம்பாஷணை மிகவும் முக்கியமானது. ஏனென்றால் பின்னால் பிரயாணம் வெற்றிகரமாய் முடியச் செய்தது இந்தச் சம்பாஷணைதான். தஞ்சை ஜில்லா கலெக்டரின் உத்திரவைப் பற்றி அவ்விருவருக்குள் பிரஸ்தாபம் நடந்ததில், ஸ்ரீ ரங்கசாமி ஐயங்காரவர்களுக்கு அந்நிய நாட்டிலிருந்து உத்தியோக நிமித்தமாய் வந்த ஒருவர் இந்த நாட்டு மக்களுக்கு உணவு அளிக்கக் கூடாதென்று உத்திரவு போட, நாம் அதைப் பார்த்துக் கொண்டு சும்மாயிருப்பதா என்ற ஆவேசம் உதித்து, அப்பொழுதே அந்த இடத்திலிருந்து புறப்பட்டு தமது சொந்தக் காரில் ஏறிக்கோவிலடிக்குப் போயினர்.

அன்று பகல் போஜனம் 12 மணிக்கெல்லாம் முடிந்ததும், தொண்டர்களெல்லோரும் மரத்து நிழலில் இளைப்பாறிக் கொண்டிருந்தனர். அங்கிருந்து புறப்படுவதற்குள்ளாக அநேகமாய்த் தலைவர் கைது செய்யப் படுவார் என்றே எல்லோரும் எண்ணியிருந்தனர். தலைவருக்கும் இதே எண்ணமிருந்தது. அதனால் பிற்பகல் இரண்டு மணி சுமாருக்குத் தொண்டர்களை மட்டும் தனியாக ஒரு கூட்டமாய்க் கூட்டிதாம் பிரிந்து போனால் என்னென்ன விதமாய் நடந்து கொள்ள வேண்டியது என்பது பற்றித் தலைவர் சொல்லி வருகையில் ஒவ்வொரு தொண்டரும் உற்றுக் கவனித்திருந்தனர். ஏனென்றால் அதுவே அவருடைய சிறைவாசத்திற்கு முன் கடைசி உபதேசமாக இருக்கப் போகிறதென்றே எல்லோரும் சந்தேகமின்றி நம்பிவிட்டனர். இந்த விதமாக இந்தக் கூட்டம் கலைய

மாலை 4-மணி ஆயிற்று. சாப்பாட்டிற்கு மணி அடித்தது. அரை மணி நேரத்தில் அதுவும் முடிந்தது. தலைவர் ராஜாஜீ மட்டும் வழக்கம் போல் மாலை போஜனம் சாப்பிடவில்லை. இதற்குப் பதிலாக இரவில் கனி வர்க்கங்கள் சாப்பிட்டு வந்தார். இவர் நீங்கலாக எல்லோரும் சாப்பிட்டு முடிந்ததும் பிரயாணம் ஆரம்பமாயிற்று. தொண்டர்களெல்லோரும் வரிசையாய் அணிவகுத்து நின்றனர். இந்த இடத்தில் ஒரு தொண்டர் அதைரியப்படுவதாய் அபிப்பிராயம் தெரிவித்துப் பிரயாணத்திலிருந்து விலகி வீட்டிற்குச் சென்றார். பிறகு தொண்டர் படை கல்லணை கெடியை விட்டுப் புறப்பட்டது. கரையோரமாய்ச் சென்று ரஸ்தாவிலேறி கல்லணையைக் கடக்க ஆரம்பித்தது. இந்த இடத்தில் காவிரியாறு இரண்டு பிரிவாகப்பிரிகிறது. அந்த அணை கல்லினால் கட்டப்பட்டிருப் பதால் அதற்குக் கல்லணை என்று பேரிட்டு அழைக்கப்படுவ தாயிருக்கிறது. அக்கரை சேர்ந்தபொழுது மணி 5-30 ஆகியிருந்தது. ஆயினும் சூரிய கிரணங்கள் மிகவும் கடுமை யாகவே வீசிக்கொண்டிருந்தன. ரஸ்தாவின் இரு பக்கங் களிலும் மரங்களிருந்தன. பாலத்திலிருந்து ஒரு பர்லாங்குத் தூரத்தில் தஞ்சை ஜில்லா ரகசிய போலீஸ் உத்தியோகஸ் தர்கள் இறங்கியிருந்த ஜாகையிருந்தது. அவர்களும் புறப் படுவதற்குத் தயார் பண்ணிக்கொண்டிருந்தார்கள். மோட்டார் வண்டியொன்று வாசற்படியருகில் நின்று கொண்டிருந்தது. சப்இன்ஸ்பெக்டர்களும், ஜவான்களும் தொண்டர் படையை ஒட்டியதாகவே ஓட்டமும் நடையுமாய் வந்து கொண்டிருந்தனர். சற்று தூரம் போன பின் பாதை இரண்டாய்ப் பிரிகிறது. வண்டிப் பாதையொன்று, ஒற்றையடிப் பாதை மற்றொன்று. தொண்டர் படை ஒற்றையடிப் பாதையிலேயே சென்றது. அது சற்றுக் கடின மென மதித்த ரகசியப் போலிசார் ரஸ்தா வழியே மேல் நோக்கிச் சென்று கொண்டிருந்தனர்.

இந்தப் பாதையானது பூராவும் மணல் பரந்தது. இந்த வழியாய் நடப்பதென்றால் ஆற்று மணலில் நடப்பது போலவும், சமுத்திரக்கரையோர மணலில் நடப்பது

போலவுமே இருந்தது. இதில் வண்டிப் போக்கு வரத்து வெகு கஷ்டமாகவே நடக்குமென்பது நாம் சொல்லாமலே விளங்கும்.

மாலை வெயில் முதுகிலும் கன்னங்களிலும் வந்தடித்து வேர்வை நீர்ப் பெருக்கெடுக்க, மணலில் பாதங்கள் பதிந்து அடி பெயர்த்து வைக்க வெகு கஷ்டப்பட்டுக் கொண்டே தொண்டர்படை கோவிலடியை நோக்கி நடந்து கொண்டிருந்தது.

## கோவிலடி

கோவிலடி ஊர் அரைக்கல் தூரத்திலிருக்கையில் ஊர் ஜனங்கள் திரள் திரளாகக் கூடி எதிர் கொண்டழைத்துச் செல்ல வந்திருந்தனர். ஆதித்திராவிட மக்கள் அநேகர் இந்தக் கூட்டத்தில் காணப்பட்டனர். ஜனங்களுடைய உற்சாகம் எதிர்பார்த்ததற்கு மேல் எத்தனையோ மடங்கு அதிகமென்று சொல்லிக் கொண்டே தொண்டர் படை நடந்தது. இரண்டு பர்லாங்குத் தூரமிருக்கையில் வாத்திய கோஷம் வரவேற்க ஆரம்பித்தது.

தொண்டர் படை ஊருக்குள் நுழையும் சமயம் அங்கு பல்லாயிரக்கணக்கான ஜனங்கள், "மஹாத்மா காந்திக்கு ஜே", "ராஜாஜிக்கு ஜே", "தொண்டர் படைக்கு ஜே", "உப்பு சத்தியா கிரஹத்துக்கு ஜே" என்று கோஷம் செய்து கொண்டே நின்றனர். தொண்டர் படை நடுவில் வர இரு பாரிசத்திலும் ஜனங்கள் சூழ்ந்து கொண்டு ஊர்வலம் அழைத்துச் சென்றனர். டாக்டர் ராஜனும் இன்னும் சில பிரமுகர்களும் அவ்விடத்திற்கு வந்திருந்தார்கள். எல்லோருடைய முயற்சியின் பயனுய் வரவேற்பு மிகவும் சிறப்பாகவே நடந்தது. இரவு 7-30 மணிக்குக் காவிரியாற்றில் ஒரு பெருங் கூட்டம் கூடியது. அந்தச் சிறு ஊரில் ஐயாயிரத்துக்கு மேல் பொதுக் கூட்டத்திற்கெனத் திரண்டுவந்தது அதுவே முதல் தடவையென அந்த ஊரார் சொல்லிக்கொண்டனர். சுற்றுப்

பக்கத்திலெல்லாமிருந்து உபன்யாசத்தைக் கேட்பதற்காகவே பலர் வந்திருந்தனர். பெண்பாலாரும் பெருந்தொகையில் கூட்டத்தில் கலந்திருந்தனர்.

ஸ்ரீ கந்தசாமி சோளிங்கத் தேவர் என்பவர் மூன்று நாட்களுக்கு முன்னுலிருந்து செய்த பிரசாரத்தினுல் போலிஸார் பயமுறுத்தலே யெல்லாம் பொருட்படுத்தாமல் வேலே செய்யக் கூடிய ஊக்கமுள்ள ஒரு சிலர் அங்கு தயாராயிருந்தனர். ஸ்ரீ ரங்கசாமி ஐயங்கார் வேண்டிய ஏற்பாடுகள் செய்வதற்காகக் கோவிலடிக்குச் சென்ற பொழுது ஊர் ஜனங்கள் மனது இவரால் ஏற்கனவே பக்குவப் படுத்தப் பட்டிருந்தபடியால் யாதொரு சிரமமுமின்றி ஜனங்களேத் திரட்டுவதற்கும் ஏதுவாயிருந்தது.

அன்றைய கூட்டத்தில் தலேமை வகித்த ஸ்ரீ ரங்கசாமி ஐயங்கார் தமக்கும் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாருக்கும் அபிப்பிராய பேதமிருந்தாலும் ஓர் அந்நிய தேசத்து மனிதர் தமது நாட்டு மக்களுக்கு அன்னந் தண்ணீர் அளிக்கப்படாது என்று உத்திரவிடும்வரை காரியம் மிஞ்சிப் போகும் பொழுது தாங்களெல்லோரும் எப்படி சும்மா பார்த்துக் கொண்டிருக்க முடியும் என்றும், இதற்காகவே தாம் முயர்சியெடுத்துக் கொண்டதாகவும் தங்களேப் போன்றவர்களேயெல்லாம் இந்த ஏற்பாட்டில் கலந்து கொள்வதற்குக் கலெக்டரின் உத்திரவே காரணமானபடியால் அவர் ஒரு விதத்தில் நன்மையே செய்திருக்கிருர் என்றும் அதற்காக எல்லோரும் அவருக்கு வந்தனமளிக்க வேண்டுமென்றும் சொன்னுர்.

தலேவர் ராஜாஜி செய்த உபன்யாசத்தில், ஜனங்களுடைய தைரியத்தையும் தேச பக்தியையும் பாராட்டினுர். அன்று கூட்டம் முடிய வெகு நேரமாயிற்று. தொண்டர்கள் படுத்துக்கொள்வதற்கு வசதியான ஜாகை ஊரில் இல்லாதபடியால் ஆற்று மணலிலேயே அன்றிரவைக் கழிப்பதென்று தீர்மானிக்கப்பட்டது. தேசியக் கொடியை நடுவில் நட்டு அதைச் சுற்றிலும் தொண்டர்கள் படுத்துக் கொண்டனர்.

அன்று பௌர்ணமி கழிந்து சில தினங்களாயிருந்தது. தேய் பிறைச் சந்திரன் 9-மணிக்கு வானத்தில் தோன்றினன். வேனிற் காலத்தில் நிலாவொளியில் ஆற்று மணலில் படுப்ப தென்றல் அதிருப்தி கொள்பவர்கள் யார்தானிருப்பார்கள்? எனவே அன்றிரவு மெல்லிய மணலை மெத்தையாய்க்கொண்டு மூட்டைப்பூச்சி கொசுக்கடி முதலிய உபத்திரவம் இல்லா மல் காற்றோட்டமிருந்தபடியால் வேர்வைக் கஷ்டம் தோன்ருமல் ஒவ்வொரு தொண்டரும் நடந்துவந்த சிரமத் தினல் படுத்து உடனே அயர்ந்த நித்திரையில் ஆழ்ந்தனர்

மறுநாள் ஏப்ரல் 15-ம் தேதி செவ்வாய்க்கிழமை அதி காலை ஐந்து மணிக்கெல்லாம் தொண்டர்கள் அவ்விடமிருந்து புறப்பட்டு ஊருக்குள் வந்தார்கள். ஒரு தெருவில் அணி வகுத்து நின்றவண்ணமாகவே ஆளுக்கிரண்டு வாழைப் பழங்களும், தயிர் ஒரு கோப்பையுமருந்தினர். பாதை புதிதாகையால் அந்த ஊர்வாசிகள் இரண்டொருவர் விடியு மட்டும் வழி காட்டிக்கொண்டு முன்னல் நடந்து செல்ல, அவர்களைப் பின் தொடர்ந்து தொண்டர் படை சென்றது. புறப்பட்ட ஒரு நாழிகைக்கெல்லாம் கீழ்த்திசையில் அருணன் உதயமாவதற்கு அறிகுறி காணப்பட்டது. வழியில் ஒரு நெற்களத்தில் குடியானவர்கள் மேய்ந்திருந்த சூட்டை அவிழ்த்துவிட்டு நாலு மணிக்கு முன்னதாகவே மாடுகளைப் பிணையில் சேர்த்து நிலவொளியில் சூடடிக்கத் துவக்கியிருந் னர். அங்கு கயிற்றுக் கட்டிலின்பேரில் ஒருவன் கீரிழைத் துணியால் நன்ருய்ப் போர்த்து முக்காடிட்டுக்கொண்டு சூட்டடிவேலையை மேல்பார்த்துக்கொண்டிருந்தான். சாலை யின் இரு ஓரங்களிலுமுள்ள மரங்களில் கூடுகட்டி வாசம் செய்யும் குருவி, காக்கைக் கூட்டங்கள் அருணேதயத்தைக் கண்டு ஆனந்தங் கொண்டு கூவுவதும், இரைதேடச் செல்வ தற்காகச் சகாக்களை அழைத்துக் கொள்வதும், சிறகுகளை அடித்துக்கொண்டு கிளைமாறிக் கிளை உட்காருவதுமாயிருந் தன. இவையெல்லாம் கண்ணுற்ற வண்ணமாய் தொண்டர் படை காலை வாடையில் கஷ்டம் தெரியாமல் வேகமாய்

நடந்து சென்றது. சிறிது தூரம் மூங்கில் காடுகளிலும், சிறிது தூரம் நன்ருய்ப் பூரித்துப் பரந்த நாணற் புதர்களி லும் மறைவதுமாய், காவிரி நதி தொண்டர்படையைப் பின் தொடர்ந்து வந்தது. இவ்வாருகக் காலை 6-30 மணிக்குத் திருக்காட்டுப் பள்ளிக்கு அரைக்கல்லுக்கு இப்பால் தொண்டர் படை வந்து கொண்டிருந்தது.

## திருக்காட்டுப்பள்ளி

இந்த இடத்தில் ஆற்றுக்கு அக்கரையில் பழமானேரி என்ற ஊர் இருக்கிறது. தமிழ் நாட்டிற்கு ஏழெட்டு ஐ. சி. எஸ். உத்தியோகஸ்தர்களை அளித்த அந்த ஊர்வாசி கள் ஆற்றைத் தாண்டிவந்து அந்த இடத்தில் ஒரு சிறு பந்தல் போட்டு வரவேற்பதற்காகத் தயாராயிருந்தனர். வழி நெடு கப் புழுதி படர்ந்த ரஸ்தாவாயிருந்தபடியால் செம்மண் தூசி படர்ந்து தொண்டர்களின் உடுத்த உடையெல்லாம் காவி தோய்த்த வஸ்திரமாயும், கால்களில் முழங்கால் வரை தூசி படிந்தும் தடித்துப்போயிருந்தன. இந்த லக்ஷணத்தோடு வரவேற்பு உபசாரத்தை ஏற்றுக்கொள்வது முறையற்றதா கத், தோன்றியபடியால் கைகால்களை சுத்தி செய்து கொள்ளு மாறு தலைவரால் அனுமதிக்கப்பட்டனர். பத்து நிமிஷ நேரத்தில் கைகால் முகங்கழுவிக் கொண்டு எல்லாத் தொண்டர்களும் திரும்பி வந்தனர். பிறகு பழமானேரி வாசிகளால் வழங்கப்பட்ட கஞ்சி, கொடுமுந்திரியாதி கனி வர்க்கங்கள் அருந்திய பின்னர் அங்கிருந்து தொண்டர்படை புறப்பட்டு திருக்காட்டுப்பள்ளியை நோக்கி நடந்தது.

திருக்காட்டுப்பள்ளி காவிரியாற்றின் அக்கரையிலிருக் கிறது. இடையில் இரண்டு பாலங்கள். இந்த இரண்டு பாலங்களைத்தாண்டியதும் ஊருக்குள் நுழைவதாயிருந்தது. அந்த ஊரிலிருந்து வரவேற்பதற்காகச் சில பிரமுகர்கள் மேளவாத்தியங்களுடன் வந்திருந்தனர். திரளான ஜனங்கள் வெகு உற்சாகத்துடன் வரவேற்பு வைபவத்தில் கலந்திருந்த னர். தொண்டர் படை ஆற்றுப் பாலத்தைக் கடந்ததும்

நேராக ஊருக்குள் செல்லாமல் காவிரியாற்றங்கரைப் படித் துறைக்கு அழைத்துச் செல்லப்பட்டது. பெருங்கூட்டம் கூட்டுவதற்கு ஏற்ற இடமாயிருந்தது. தலைவர் ஒரு மேடையில் அமர்ந்தார். தொண்டர்கள் பின்னால் வரிசையாய் உட்கார்ந்து கொண்டனர். நாற்புறங்களிலும் ஜனங்கள் ஏராளமாய் உட்கார்ந்திருந்தனர். ஆற்று மணலில் ஓர் ஒதுக்கமாய் ஆதித் திராவிட மக்கள் உட்கார்ந்திருந்தனர். அது சமயம் காலை எட்டு மணியாயிருந்தது. பிரார்த்தனைக்குப் பின் தலைவர் வழக்கமாய்ச் சொல்ல வேண்டிய விஷயங்களை எடுத்துப் பேசியதோடு, கலெக்டரின் உத்தரவு அநீதமானது என்று உணர்ந்து அதற்குமாறாகத் தங்களுக்கு வரவேற்பு அளிக்கும் அந்த ஊர் வாசிகளின் தைரியத்தைப் பாராட்டி உபன்யாசம் செய்தார்.

கூட்டம் முக்கால் மணி நேரத்தில் முடிந்து விட்டது. பின்பு அங்கிருந்து தொண்டர்படை புறப்பட்டு அக்னீஸ்வரர் கோவிலில் போய் இறங்கியது. இந்த ஊரில் இறங்குவதற்கு வசதியான சத்திரஞ்சாவடிகளிருந்தும் போலீஸ் அதிகாரிகள் அவற்றைப் பூட்டி, சாவிகளைக் கைப்பற்றிக் கொண்டிருந்தனர். அன்று செவ்வாய்க்கிழமை. ஜாகையில் சாமான்களையெல்லாம் வைத்துவிட்டு ஸ்நானம் முடித்துக் கொள்வதற்காகத் தொண்டர்கள் ஆற்றுக்குச் சென்றனர்.

தெளிவான தண்ணீர் ஆற்றின் பாதியளவுக்கு மேல் ஓடிக்கொண்டிருந்தது. இனி போகுமிடங்களில் தண்ணீர் வசதி கிடைக்குமோ கிடைக்காதோ என்ற சந்தேகத்தில் தொண்டர்கள் தம் வேஷ்டிகளையும் சட்டைகளையும் சோப்புப்போட்டு நன்ருய் துவைத்துக்கொண்டனர். துவைத்த வஸ்திரங்களை உலர்த்த, மணலில் காயப்போட்டுக் கொண்டு, வரும் வழியில் கிடைத்தத் திராட்சைப்பழங்களை மிச்சப்படுத்தி வைத்திருந்ததைத் தின்றுகொண்டிருப்பாரும், நீண்ட மயிரை வைத்திருந்தோர் உலர்த்துவாரும், தோழர்களுக்காகக் காத்திருப்பாருமாகத் தொண்டர்கள் அங்கு தாமதித்திருந்தனர். மணி பத்தாயிற்று. அந்த சமயம்

சாப்பாட்டிற்கு மணி அடித்துவிட்டதென்று பாத்திரமும் கையுமாகத் தொண்டர்கள் சாப்பிடும் இடத்தை நோக்கிச் செல்ல ஆரம்பித்தனர். ஒருவரையொருவர் அவசரமாய் அழைத்துக்கொண்டு பசிமிகுதியால் முதல் பந்தியிலேயே சாப்பிடவேண்டுமென்ற எண்ணத்தோடு சென்றுகொண்டிருந்தனர்.

சாப்பாட்டிற்கென்று ஏற்படுத்தியிருந்த இடம் பக்கத்துத்தெருவில் இருந்தது. அது ஒரு பழைய கட்டிடம். தரையெல்லாம் களிமண்ணும் மணலும் கலந்து பரப்பியதாயிருந்தது. சுவரெல்லாம் மண் பூசிய சுவர்களாக இருந்தன. இடமும் அவ்வளவு பெரிதல்ல. தொண்டர் நூறுபேரும் ஒரே பந்தியாய் உட்கார்ந்து சாப்பிட முடியாது. ஆகையால் தான் சேர்ந்தமட்டும் சௌகரியத்தை உத்தேசித்து விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தவர்கள் முதல் பந்தியைச்சற்றுச் சீக்கிரமாகவே உட்காருமாறு ஏற்பாடு செய்திருந்தனர்.

எல்லாத் தொண்டர்களும் சாப்பிட்டு முடிய 11 மணியாயிற்று. கோவில் மண்டபத்தில் அவரவர்கள் கைவசம் கொண்டு வந்த படுக்கைகளை விரித்துக்கொண்டு இளைப்பாறுவதாயினர். ஒரு மணி நேரத்திற்கு மேலேயே இளைப்பாறிப்பின் தலைவர் அந்த மண்டபத்தில் வந்து உட்கார்ந்தார். தக்ளியும் பஞ்சும் எப்பொழுதும் அவர் கையில் இருந்துவந்தன. தொண்டர்களும் தக்ளியும் கையுமாக அந்த மண்டபத்தில் கும்பலாக குழுமினர். அப்பொழுது தலைவர் அன்றுமுதற்கொண்டு பிரயாணத்தில் நடந்து கொள்ள வேண்டிய முறை இன்னதென்று சொல்லி வந்தார். பிரதி தினமும் பகல் ஒரு மணி முதல் இரண்டு மணிவரை மௌன விரதம் அனுஷ்டிக்கப்படவேண்டுமென்பது அவர் ஏற்படுத்திய முக்கிய ஏற்பாடாகும். அந்நேரத்தில் யாரும் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளக்கூடாது. வேறு எதிலும் சிந்தை செல்லாதிருக்குமாறு ஒவ்வொருவரும் தக்ளியில் நூல் நூற்பதிலேயே கவனம் செலுத்த வேண்டும். இது முடிந்ததும் விளம்பரப் பிரிவார் பகல் 2 மணி முதல் 3 மணி வரை

அன்ருடம் பத்திரிகையிலுள்ள முக்கிய விஷயங்களைத் தொண்டர்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டுமென்று மற்ருெரு முக்கிய ஏற்பாடும் அப்பொழுது செய்யப்பட்டது.

அதுபோல் ஒரு மணி நேரம் மௌன விரதம் அனுஷ்டிக்கப்பட்டது. முதல் தினமாகையால் ஒரு சிலர் தவறி அங்கங்கே ஒரு வார்த்தை உச்சரித்தாலும் பின்னுல் தம்மைத் திருத்திக் கொண்டனர். பெறும் பகுதியினர் ஒழுங்கு தவருமல் விரதம் அனுஷ்டித்தனர். அதன் பிறகு பத்திரிகை விஷயங்கள் ஆங்கிலத்திலும் தமிழிலும் அதற்கென ஏற்பட்டவர்களால் தொண்டர்களுக்கு எடுத்துக் கூறப்பட்டன.

திருக்காட்டுப்பள்ளி பாடல்பெற்ற ஸ்தலம். கோவில் முற்றத்தில் பாவுகல் போடாமலிருந்தது. அந்தக்கோவில் விஷயமாய் சிரத்தையெடுத்துக் கொள்ளக்கூடிய பெரிய தனவந்தர் அதுவரை ஒருவரும் முன்வரவில்லையென்பதைக் காட்டியது. இடிந்த சுவர்களும் உடைந்த தூண்களும் மேடு பள்ளத்தோடமைந்த தளமும் அந்தக் கட்டிடம் அமைத்துப் பல நூற்ருண்டுகள் ஆயிற்றென்பதைக் காட்டி நின்றன. கதவுகளும் ஏறக்குறைய எல்லாம் உடைந்தவைகளாகவேயிருந்தன. கோவில் கர்ப்பக்கிரஹத்தில் மூலஸ்தானமும் உத்சவ மூர்த்தியும் தரிசனம் பண்ண ஒரு சிறு விளக்கு மட்டும் ஏற்றிவைக்கப்பட்டிருந்தது. தொண்டர்கள் ஏகதேசமாய் உள்ளே சென்று தரிசனம் பண்ணி வந்தனர். வெளியே கொடிஸ்தம்பம் நாட்டியிருந்த இடம் பூராவும் வெளியாகவே இருந்தது. அங்கு சமீபத்தில் நடந்த பங்குனி உத்திர உற்சவத்திற்காகப் போட்ட பந்தல் அப்படியேயிருந்தது. அந்தப் பந்தற்கால்களில் மதுவிலக்குப் பிரசாரப் படங்கள் தொங்கவிடப்பட்டன.

பத்திரிகை விஷயம் படித்தானதும் இந்தப் படங்களையெல்லாம் காட்டி மதுவிலக்குப் பிரசாரமும் தீண்டாமை விஷயமாய் ஒரு உபன்யாசமும் முறையே தலைவருடைய காரியதரிசியாலும் மற்ருெரு தொண்டராலும் நடந்தேறின.

மேற்சொன்ன விஷயங்கள் முடிந்ததும் மாலை போஜனம் தயாராயிற்று என்பதைத் தெரிவிக்க சேமக்கல மணியடிக்கப் பட்டது. உடனே தொண்டர்கள் கையில் பாத்திரங்களோடு சாப்பிடும் ஜாகைக்குச் செல்ல ஆரம்பித்தனர். காலையில் தாமதமாய்ச் சாப்பிட்ட தொண்டர்கள் சிலர் அடுத்த பந்தியில் சாப்பிடுவோமென்று தாமதித்தனர். எல்லோரும் சாப்பிட்டு முடிய ஒரு மணி நேரம் பிடித்திருக்கும். அதற்குள் மாலை ஐந்து மணியாய்விட்டது. காப்டன் ஊதுகுழற் சப்தம் கொடுக்கவும் தொண்டர்களெல்லோரும் கைமூட்டையைத் தோளில் மாட்டிக்கொண்டு தடிகளை ஏந்திக் கொண்டு வந்து கோவிலுக்கு முன்னால் அணி வகுத்து நின்றனர்.

கால் மணி நேரத்தில் தொண்டர்களின் எண்ணிக்கை சரிபார்க்கப்பட்டு, தேசீய கீதத்துடன் அவ்விடத்தை விட்டு நகர்ந்தது. கோவில் சந்நிதி பெரிய ரஸ்தாவிலிருந்து இரண்டு தெருக்களுக்கு அப்பால் அமைந்திருந்தது. சந்நிதியிலிருந்து புறப்பட்ட தொண்டர்படை இரு பக்கங்களிலும் வந்து சூழ்ந்த ஜனத்திரள் பின்னால் நிறுத்தப்பட ஒடுக்கமான, பாலத்தின் பேரில் கஷ்டமின்றிச் செல்ல ஏற்பாடு செய்யப் பட்டது. ஜனங்களுக்கிருந்த உற்சாகத்தில் தொண்டர் களுக்கு ஏற்படும் அசௌகரியத்தை நினைத்துப் பார்ப்பது அவர்களால் கூடாமற் போனது.

## சாத்தனூர்

தொண்டர்படை இரண்டு மூன்று நிமிஷங்களில் பாலங் களைக் கடந்து சாத்தனூரை நோக்கிப் பெரிய ரஸ்தாவில் மேலே செல்ல ஆரம்பித்தது. மாலைச் சூரியனுடைய சிவந்த கிரணங்கள் தம்மால் கடாட்சிக்கப் பட்ட எல்லாப் பொருள் களையும் தங்கமயமாக்கின. ரஸ்தாவின் ஓரங்களில் நின்ற மரங்களின் இடைவழியில் சிவப்பும் மஞ்சளும் கலந்த கலப்பு வர்ணமுள்ள கிரணங்கள் தொண்டர்களின் உருவங்களை ஒன்றுக்கொன்று நாலைந்தாக நீட்டியிருந்தது. வழிநெடுக உபசரிப்புகள் வந்தவண்ணமாகவே யிருந்தன. வாழைப்பழம்

தயிர், மோர், பானகம் ஓயாது கிடைத்து வருவதைப் பார்த்துத் தலைவர் எங்கே தொண்டர்கள் மிதமிஞ்சி உண்டு வயிற்று உபத்திரவம் உண்டாக்கிக் கொள்வார்களோ வென்று தமது அநேக அலுவல்களுக்கிடையில் இதன் பேரி லும் தமது கவனத்தைச் செலுத்தி வந்தார். தொடர்ச்சியாக மூன்று நான்கு இடங்களில் உபசரிப்பு நடந்து வந்தால் ஓர் இடத்தில் மட்டும் உண்ண அனுமதி கொடுப்பார். மற்ற இடத்தில் வரும் வாழைப்பழம், கற்கண்டு முதலியன பின்னுல் வரும் சாமான் வண்டியில் கொண்டுபோய்ப் போடும்படி சொல்லி விடுவார். இந்த விதமாக வரவேற்புகளால் வழிப் பயணம் தாமதப்பட்டுப் போவதைச் சரிக்கட்டத் தலைவர் வேகமாய் நடக்க ஆரம்பிப்பார். தொண்டர்கள் பின்னுல் ஓடினுலல்லது அவரைப் பின்தொடர முடியாது. நடை மெலிந்து மெதுவாய் நடக்கும் தொண்டர்களை உற்சாகப் படுத்திக் கொண்டு தலைவர் ஒரு மைல் பிரயாணம் ஆவதற் குள் இரண்டு விசையாவது அந்தக் கோடியிலிருந்து இந்தக் கோடிவரை வந்துபோவார்.

தொண்டர்படை சூரியன் அஸ்தமித்தபின் சாத்தனூருக்கு அரைக் கல்லுக்கு இப்பால் இருந்தது. வரவேற்று அழைத்துச் செல்வதற்காக வந்த ஊர் பிரமுகர்கள் இரண்டு பர்லாங்குக்கப்பால் நின்று கொண்டிருந்தனர். அந்த இடத்தில் ஒரு பாதை ஊர்ப்பக்கமாயும் மற்ருெரு பாதை ஆற்றுப்பக்கமாயும் பிரிந்திருந்தன. அக்கம் பக்கத்துக் கிராமங்களிலுள்ள ஆதித்திராவிட மக்களால் சூழப்பட்டு தொண்டர்படை ஐந்து நிமிஷ நேரத்தில் அந்த இடத்திற்கே வந்து சேர்ந்தது. தலைவர் அந்த இடத்தில் எந்த வழியாய் போவது உசிதமென்று யோசித்துக் கொண்டு நின்ருர். இரண்டு பக்கங்களிலும் ஆவலே வடிவாய்த் திரண்டிருந்த ஆதித்திராவிடர்களைப் பார்த்தார். ஊருக்குள் போனுல் அக்கிரகாரத்தில் கூட்டம் கூட்டப்படுமென்பதை நினைத்தார். ஆதித்திராவிடரை அங்கு அனுமதிக்க மாட்டார்கள் என்பதை எண்ணினுர். தமது திருப்பணி முக்கியமாய் ஆதித்திராவிடர்

களின் சார்பிலேயே உள்ளதென்பதை உணர்ந்து ஆற்றுப் பக்கம்போன சிறுபாதையையே பின்பற்றி நடக்க ஆரம்பித்தார். இந்தப்பாதை கொடிப்புதர்களாலும் நாணற் புதர்களாலும் அணைக்கப்பட்ட ஓர் ஒற்றையடிப்பாதை. மேடும் பள்ளமும் நிறைந்திருந்தன. இடையில் நீர்வற்றிய சிறு வாய்க்கால்கள் ஒன்றிரண்டு காணப்பட்டன. வளைந்து வளைந்து சென்ற இந்தக் குறுகிய ஒற்றையடிப்பாதை ரஸ்தாவிற்கும் ஆற்றுக்குமிடையில் 3 நிமிஷ வழி தூரம் நீண்டிருந்தது. ஆற்றுப்படுகையில் கூடிய அந்தக் கூட்டத்தில் சாத்தனூர் ஊரார் இரண்டு மூன்று ஹரிகேன் கைவிளக்குகளைக் கொண்டு வந்திருந்தனர். மூன்று தடிகளை முக்காலியாக மணலில் நட்டு அதன்பேரில் விளக்கைத் தொங்க விடவும் கூட்டம் பூராவும் ஒளி பரவியது. தலைவர் உட்காருவதற்கு மணலைக் குவித்து ஒருமேடு உண்டாக்கப்பட்டது.

கூட்டம் ஐயாயிரத்திற்குக் குறைவில்லை. கிராமத்தில் நடைபெறும் கூட்டங்களில் ஐயாயிரத்திற்கு மேல் திரண்டு வருவது அபூர்வமான சம்பவமேயாகும். தஞ்சை ஜில்லா அதிகாரி வரவேற்கக் கூடாதென்று கண்டிப்பாயுத்திரவு பிறப்பித்திருக்கையில் இவ்வாறு ஆயிரக்கணக்கான பேர் திரண்டு வந்து வரவேற்பு வைபவத்தில் கலந்து கொண்டது ஜனங்களுக்கு இருந்த தேசீய உணர்ச்சியே காரணம் அல்லாது வேறென்ன? படித்தவர்கள்தான் உத்தியோகம் பெற வேண்டுமென்ற ஆசையினால் இயற்கையாக உள்ள தேசபக்தியை மறைத்துக் கொண்டு சர்க்காருடைய தாசானுதாசராய் இருந்து வருகிறார்களென்றால், உழுதுண்டு வாழும் மக்களும் அவ்வாறு இருந்து விடுவார்களா? தலைவர் கம்பீரமான மொழிகளால் கூட்டத்தின் தன்மைக்கு ஒத்ததாய்த் தமது உபன்னியாசத்தைச் செய்தார். அன்று கூட்டம் கலைய இரவு 9 மணிக்கு மேலாயிற்று. மூன்றாம்நாள் தேய்பிறைச் சந்திரன் அது சமயம் கீழ்த்திசையில் தோன்றியிருந்தான். தொண்டர்கள் ஒரு சிலர் நடந்து வந்த களைப்பினால் நித்திரை போயிருந்தனர். ஊருக்குள் தங்குவதற்கு ஏற்ற இடமிருந்தாலும் படுத்தத் தொண்டர்களையெல்லாம்

எழுப்பிக் கொண்டு போகும் சிரமத்தை உத்தேசித்தும் பெரும்பாலோர் ஆற்றுப் படுகையிலேயே படுத்துக் கொள்ளப் பிரியப்பட்டதை உத்தேசித்தும் தலைவரும் அவரோடு ஒருசில தொண்டர்கள் மட்டும் ஊர்வாசிகளின் அழைப்புக் கிணங்க ஊருக்குள் போய் அங்களிக்கப்பட்ட ஜாகையில் இரவைக் கழித்தனர்.

தொண்டர்களில் ஒரு சிலர் பாத்திரத்தில் தண்ணீரும் கரண்டியும் எடுத்துக் கொண்டு ஆற்றின் இக்கரையில் தோப்புகளுக்குப் போய்த் திரும்பினர். கரண்டி எதற்காக என்ற சந்தேகம் சிலருக்குத் தோன்றலாம். மஹாத்மா காந்தியடிகள் தமது ஆசிரமத்தில் ஏற்படுத்தியுள்ள நல்ல பழக்கங்களில் இதுவும் ஒன்று. வெளியிடங்களில் கண்டபடி மலவிசர்ஜனம் பண்ணிவிட்டு வருவதால் அங்கு துர்நாற்றம் உண்டாவது மல்லாமல் அங்கு போகக் கூடிய மற்றையார் அதை மிதித்து அசிங்கப் படுத்திக் கொள்வார்களல்லவா? இந்த விதமான அசந்தர்ப்பங்கள் ஏற்படாதபடி அவனவன் மலபாதை தீர்த்துக் கொள்ளப் போகும் பொழுது ஒரு கொத்துக் கரண்டியை அவசியம் கையில் எடுத்துக் கொண்டு உட்காரு மிடத்தில் ஒரு ஜாண் அளவுக்குச் சிறு பள்ளந் தோண்டி அதில் மலவிசர்ஜனம் செய்துவிட்டு மீண்டும் அதை மூடிவிட்டு வரவேண்டுமென்பது மஹாத்மா தமது ஆசிரம வாசிகளுக்கென்று ஏற்படுத்தியுள்ள விதியாகும். இதே விதியை இந்தப் பிரயாணத்திலும் தலைவர் ஏற்படுத்தி யிருந்தார். நூற்றுக்கணக்கான தொண்டர்களை அழைத்துக் கொண்டு இவர்களுடைய நடையுடை பாவனைகளால் ஊர் ஜனங்கள் திருந்த வேண்டுமென்றும் நோக்கத்துடன் செல்லு கையில் இந்தத் தொண்டர்கள் வந்து ஒருநாள் தங்கிவிட்டு ஊர்க் காட்டை யெல்லாம் நாற வைத்துப் போனார்கள் என்ற அவச்சொல் பின்னால் சொல்லிக் கொள்ளும்படி ஏற் பட்டு விட்டால் இதிலிருந்து இந்தமகத்தான இயக்கமாகிய சுதந்தரப் போரில் அவர்களுக்கிருக்கும் பக்தியும் விச்வாச மும் மட்டுப் படுவதாயிருக்கும். அற்ப விஷயங்களில்

அசிரத்தைக் காட்டுவதால் மகத்தான காரியங்களெல்லாம் கெட்டுப் போகின்றன. எனவே பிரயாணத்தில் இந்த அற்ப விஷயங்களிலும் கண்டிப்பான ஏற்பாடுகள் செய்யப் பட்டிருந்தன.

இவ்வாறு சில தொண்டர்கள் மாலைக் கடன்களை முடித்துக் கொண்டு திரும்பி வந்து இரவு 10மணிக்கு மேல் நித்திரை போயினர்.

பிறைச் சந்திரன் உச்சி வானத்தை நோக்கி ஏறிக் கொண்டிருந்தான். அதனுடைய பிரதி பிம்பம் சற்று தூரத் தில் ஓடிக் கொண்டிருந்த தண்ணீரில் பல சந்திர உருவங் களாய் பிரதிபலித்துக் கொண்டிருந்தது.

மறுநாள் ஏப்ரல் 16-ம்தேதி புதன்கிழமை காலை நாலு மணியானதும் தொண்டர்களெல்லோரும் எழுந்துக் காலைக் கடன்களை முடித்துக் கொண்டனர். ஆற்றுப் படுகையில் மலவிசர்ஜனம் செய்யக்கூடாது என்பது தலைவரின் கண்டிப் பான உத்திரவு.

அதன் படியே தொண்டர்கள் நடந்து வந்தனர். பின் தொண்டர்கள் வரிசையாய் ஊருக்குள் சென்று சிற்றுண்டி தயார் செய்யப்பட்டிருந்த விடுதித் திண்ணையிலிருந்து சிற்றுண்டி முடித்துக் கொண்டவர்களாய் பிரயாணத்திற் காயத்தமாயினர். நடக்க வேண்டுமானாலும் நிற்க வேண்டு மானாலும் உட்கார வேண்டுமானாலும் எல்லாம் காப்டன் கட்டளைப் பிரகாரமே நடந்தேறி வந்தன. தலைவர் தாமும் தொண்டர்களில் ஒருவராகவே கணக்கிட்டுக் கொண்டு காப்டனுடைய கட்டளைக்கடங்கி வருவதுபோல் காணப் பட்டாலும், எல்லாக் காரியங்களும் அவருடைய அனுமதி யுடனே காப்டன் மூலமாகத் தொண்டர்படைக்கு அளிக்கப் பட்டவைகளாகும். இந்த ஏற்பாடு, அதாவது ஒருவரைக் காப்டனாக நியமித்து அவர் சொல்லும் உத்தரவுப்படி எல் லோரும் அடங்கி நடக்க வேண்டுமென்ற உத்தரவு இட்டிருந்

நதானது தலைவருக்கு மிகவும் அனுகூலமாயிருந்தது. ஒரு விஷயத்தை நூறு பேருக்கு எடுத்துச் சொல்லும் கஷ்டமும் சிரமமும் தமக்கில்லாமற் செய்து கொண்டது முதல் அனுகூலம். தொண்டர்களை ஒரு அத்துக்குள் அடக்கி வைத்தது இரண்டாவது. சில்லறைப் புகார்களெல்லாம் தம்மிடத்தில் வராமல் தடுத்துக்கொண்டது மூன்ருவது. சில்லறைப் புகார்களைத் தடுத்துக் கொண்டதன் மூலமாய் அவர்களால் தொண்டர்களுக்குள் ஏற்படும் சில்லறை சச்சரவுகளையும் மனஸ்தாபங்களையும் தீர்த்து வைக்கும்படியான பொது அதிகாரம் தம்மிடத்தில் வைத்துக் கொண்டது நான்காவது அனுகூலம்.

காலை 5மணி சுமாருக்குப் படையும் புறப்பட்டு அடுத்த கெடியாகிய திருவையாற்றை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

தங்குமிடங்கள் ஒன்றுக்கும் மற்ருென்றுக்குமுள்ள தூரம் சற்றேறக் குறைய ஐந்து மைலாகவே இருக்கும்படி பிரயாணம் அமைக்கப் பட்டிருந்தது. காலை 7 மணிக்குள்ளாக முதற் பிரயாணமும், மாலை 7-மணிக்குள்ளாக இரண்டாவது பிரயாணமும் முடியத் தக்க முறையில் அமைக்கப்பட்டிருந்த இந்தப் பிரயாணம் வெயில் கொடுமையால் வீண் சிரமம் ஏற்படாமல் காத்து வந்தது. முன் பின் நடந்தறியாத தொண்டர்கள் பலரும் தற்காலீகமாக ஏற்பட்ட வீராவேசத்திஞல் இதில் சேர்ந்தவர்களாதலால் கால் நடைப் பிரயாணத்திற்கு அவர்களுடைய மனது தாராளமாய் இடங் கொடுக்குமாயினும் சரீரம் அவ்வளவு அமைதியாக இடங் கொடுக்காது. மேலும் தொடர்ச்சியாகப் பிரயாணம் செய்யக் கூடியவர்கள் சூரிய வெப்பம் இல்லாத நேரத்தையே தமக்குற்ற பிரயாண காலமாக வைத்துக் கொள்வது எங்கணும் வழக்கமென்பது சொல்லத் தேவையில்லை. எனவே இந்தப் பிரயாணமும் மகாத்மா காந்தியடிகளின் தண்டிப் பிரயாணத்தை அனுசரித்தே காலையும் மாலையும் நடந்து போவதென்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்

தது. மேலும் ஆகாரத்திற்காக எங்கேனும் தங்கித்தான் ஆக வேண்டுமல்லவா? போகுமிடங்களில் பிரசாரமும் நடந்தேறியாக வேண்டும்! அந்தந்த இடங்களில் நடக்கும் உபசாரங்களை ஏற்றுக் கொண்டாக வேண்டுமல்லவா? இதற்கெல்லாம் சௌகரியமாயிருப்பது பகற்காலமும் இரவில் படுக்கைக்குப் போகுமுன் உள்ளதாய நான்கு மணி நேரமுந்தானே? பாதி நாளைப் பிரயாணத்திலேயே கழித்துக் கொண்டே போனால் மேற்சொன்ன விஷயங்களுக் கெல்லாம் நேரமில்லாமற் போகும்.

அரை நாழிகை வழி நடந்தானதும் வழக்கம்போல் அருணோதயக் காட்சி எழுந்து ஆனந்தத்தை விளைவித்தது. வழியில் ரஸ்தா ஓரத்திலும் அரை பர்லாங்கு ஒரு பர்லாங்குக்கு அப்பாலும் சிற்றூர்கள் பல வந்துகொண்டே இருந்தன. ரெயில் போக்கு வரத்து இல்லாத இந்தச் சிற்றூர்களிலும் பட்டணவாசத்தின் நாகரீகம் அப்படியே வந்து குடி புகுந்திருந்தது. பிறந்த ஊரை விட்டு சென்னை முதலிய பெரிய பட்டணங்களில் குடியேறித் தமது ஆங்கிலக் கல்வியின் அதிமேம்பட்ட திறமையால் வக்கீல்களாகவும், ஜட்ஜுகளாகவும், டாக்டர்களாகவும், இஞ்ஜினியர்களாகவும், உபாத்தியாயர்களாகவும், கம்பெனி குமாஸ்தாக்களாகவும் இன்னும் பலதரப்பட்ட உத்தியோகஸ்தர்களாகவும் விளங்கிக் கொண்டிருக்கும் அறிவாளிகலெல்லாம் அது சமயம் கோடை விடுமுறைக்காகத் தங்கள் சொந்த ஊர்களுக்கு வந்திருந்தனர். அன்னோர் இந்த மகத்தான இயக்கத்தில் தாங்கள் வந்து கலந்துகொள்ளலாமென்றால் தங்கள் உத்தியோகம் இடந்தர வில்லையே என்று ஏங்கியவர்களாய் வீட்டிலேயே நின்று தொண்டர்படைக்கு வெற்றி கிடைக்க வேண்டுமென்று பிரார்த்தித்தனர். அவர்களின் மனைவி மக்கள் வெளியே தொண்டர்படை செல்லும் ரஸ்தாவிலும் அடுத்துள்ள வயல்களிலும் நின்று பார்த்த வண்ணமாய் இருந்தனர்.

ஆறு மணியடித்துச் சில நிமிஷங்களாயிருக்கும். அப்பொழுது வெகுதூரத்திற் கப்பால் ஒரு கமான் வளைவு

தொண்டர் படையை வரவேற்ற வண்ணமாய் ரஸ்தாவை யணைத்து நின்றது. இவ்வளவு சீக்கிரம் திருவையாற்றை அடைந்து விட்டோம் போலிருக்கிறதே என்று தொண்டர்கள் ஆச்சரியங்கொண்டனர். சரியாக மூன்று மைல் தூரம் கூட நடக்கவில்லை போலிருக்கிறதே! இதற்குள் தங்குமிடம் வந்து விட்டதனுல், மாலைப்பிரயாணம் கஷ்டமாயிருக்குமோ என்று சிறிது கவலை கொள்ளலாயினர். ஐந்து நிமிஷ நேரத்தில் அந்த காமன் வளவை நெருங்கினர். அதில் பெரிய எழுத்துக்களில் உப்பு சத்தியாக்கிரகிகளே வருக! வருக !! என் று எழுதியிருந்ததைத் தொண்டர்கள் கண்ணுற்றனர். அங்கு பழைய கல் மண்டபங்கள் ஒன்றிரண்டு காணப்பட்டன. சற்று நேரம் ரஸ்தாவில் நின்றவாறே வரவேற்கப்பட்ட தொண்டர்படை மீண்டும் வேகமாய் மேல் நோக்கிச் செல்ல ஆரம்பித்தது. அங்கிருந்த ஜனங்கள் அது தில்லைஸ்தானமென்றும் திருவையாறு இன்னும் ஒரு மைலுக்கப்பால் இருக்கிறதென்றும் தெரியப்படுத்தி சந்தேகத்தை நிவர்த்தி செய்தனர். சரிதான் திருவையாறு என்ருல் இவ்வளவு சொற்பமாக வரவேற்பு நடக்குமா என்று நினைத்தது சரியாயிற்று என்று சில தொண்டர்கள் சொல்லிக் கொண்டனர்.

## திருவையாறு

வெயில் மேலே ஏறிக் கொண்டிருப்பதைப் பார்க்கப் பார்க்க தொண்டர்களின் கால்கள் தம்மையறியாமல் ஓட்ட நடையில் நடந்து போயின. இதோ ஒரு பர்லாங்கு, இரண்டு பர்லாங்கு, மூன்று பர்லாங்கு, நான்கு பர்லாங்கு ஆகி விட்டது. இன்னும் அரை மைல் தான் இருக்கிறது என்று சொல்லிக்கொண்டே நடந்து போகையில், அந்த இடத்தில் ஒரு கூட்டம் வாலிபர்களும் பெரியோர்களும் நின்று கொண்டிருந்தனர். சிறுவர்கள் ஒவ்வொருவருடைய கையிலும் ஒரு முழக் குச்சியில் ஒட்டப்பட்ட காகிதத்தினுல் செய்யப்பட்ட தேசீயக் கொடிகள் இருந்தன. பள்ளி மாணவர்களாகிய இளைஞர் பலர் முன்னணியில் நின்று

வரவேற்கும் பெருமை பெரியவர்களுக்கு இல்லாமல் தாமே பூராவும் சுவீகரித்துக் கொள்ளலாமென்று நினைத்தவர்கள் போல, பெரியவர்களைப்பின்னணியில் நிறுத்திக் கொண்டு தாங்களே ஜயகோஷம் செய்து எல்லாத் தேசபக்தர் களுடைய பெயரையும் ஒவ்வொன்ருய்ச் சொல்லி திருமுறை சொல்லி வந்தனர். அன்று தொண்டர்படை தம்மூருக்கு வரப்போகிறது என்று ஒவ்வொரு வீட்டின் முன்னுலும் நீர் தெளித்துக் கோலம் போட்டு அலங்கரித்திருந்தது. தென்னேலை குருத்துகளால் செய்யப்பட்ட தோரணங்கள் பத்தடிக்கு ஒவ்வொன்ருய் தெருக்கள் பூராவும் குறுக்காக இரண்டு ஆள் உயரத்திற்கு மேல் வீட்டுக் கூரைகளிலும் மெத்தைகளிலும் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தன.

வைதீக நெறி வழுவாத பிராம்மணேத்தமர்களும், சைவத் திருவாளர்களும் அதிகாலையில் ஸ்நான முடித்துக் கொண்டு நெற்றியிலும் உடம்பிலும் திருநீறு பட்டை பட்டையாய்ப் பூசிக் கொண்டு வரவேற்கக் காத்திருந்தனர். ஒவ்வொரு தெருவாயிற் படியிலும் பெண்மணிகள் மஞ்சள் குளித்து முகத்தில் குங்குமப் பொட்டுத் தடவி மங்கள ரூபிணிகளாய் விளங்கிக் கொண்டிருந்தனர். இந்த ரஸ்தாக்களின் வழியாய் மேளதாள வைபவத்தோடு ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்ட தொண்டர்படை பெருந் திரளான ஜனங்களால் நெருக்கப்பட்டுக்கொண்டே அதற்கு வழக்கமாயேற்பட்டுவந்த வேக நடையெல்லாம் அவசியத்தை முன்னிட்டு அன்ன நடையாய் மாற, தெருக்களின் வழியாய் ஆற்றங்கரையை அடைந்தது. தஞ்சாவூர் பக்கமாய்ச் செல்லும் இராஜபாட்டையிலமைந்துள்ள காவிரியாற்றுப் பாலத்திற்கு இடதுபுறமாய் தொண்டர்படை ஆற்றில் இறங்கி, புஷ்ய மண்டபத் துறைக்கு முன்னுல் படுகையில் போய் நின்றது. அங்கு அன்று காலை கூட்டம் கூடுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

காலைச் சூரியனுடைய இளங்கிரணங்கள் வேனிற்காலத்திற் கேற்பட்ட கடுமையோடு வீசிக்கொண்டிருந்தன. சத்தி

யாக்கிரகத் தலைவரின் உபன்னியாசத்தைக் கேட்க வேண்டு மென்ற ஆவலோடு கூடியிருந்த ஜனத்திரள் ஆற்றின் அகலத் தில் பாதியளவுக்கு மேல் பரவியிருந்தது. புஷ்யமண்டபப் படித்துறை பூராவும் அடுக்கடுக்காய் ஜனங்கள் உட்கார்ந்து கொண்டும் நின்றுகொண்டும் இருந்தனர். படித்துறையிலி ருந்து பத்தடிதூரத்தில் படுகையில் உபன்னியாச மேடை போடப்பட்டிருந்தது அதைச்சுற்றி முதல் வரிசையில் பெருந் திரளான பெண்மணிகள் பிரத்தியேக இடவசதி செய்யப் பட்டு வீற்றிருந்தனர். தொண்டர்கள் நூறுபேரும் சற்றுத் தள்ளி வரிசையாய் வீற்றிருந்தனர். அவர்கள் பக்கத்தில் ஆதித்திராவிட மக்கள் ஆண்—பெண் அனைவரும் ஆவலே வடி வாய் அமர்ந்திருந்தனர். அது சமயம் காலை எட்டு மணிக்கு மேலாயிருந்தது. வழக்கமாகத் தொண்டர்கள் பிரார்த்தனைக் கீதங்கள் பாடினர். அதன் பிறகு அவைத் தலைவராய் அமர்ந்திருந்த பக்கத்து சிங்கப்பூர் மடத்துத் தலைவர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் தொண்டர்களையும் தலைவரையும் வரவேற்று அச்சடித்த பத்திரமொன்றை அகவற்பாவில் வாசித்துக் கொடுத்தார். அத்துடன் அவர் பஞ்சநதீஸ்வரர் பேரில் சைவசமயாச்சாரியர்களாற் பாடப்பட்ட தேவாரப் பாடல்களில் 'திருவையாறே, என்று முடிகிற ஸ்தலப் பெரு மையை விளக்கும் பாடல்களைப் பாடி கூட்டத்தில் குழுமி யிருந்த ஒவ்வொருவருடைய உள்ளத்தையும் பரவசப்படுத் தினார். தலைவர் ராஜாஜி மெதுவாக முக்கால்மணி நேரம் உபன்னியாசம் செய்தார்.

"ஸ்ரீ ரங்கத்தை விட்டபின்பு எங்கள் பிரயாணப் பாட் டையில் தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த முதலாவது பெரிய ஊர் இதுவே. இந்த ஜில்லா கலெக்டர்தான் எங்களை வரவேற்கக் கூடாது என்று உங்களுக்கு உத்தரவிட்டிருக் கிறார். அதை மீறிநீங்கள் தைரியமாய் உங்கள் கடமையைச் செய்து பெரிய பரீட்சையில் தேறியிருக்கிறீர்கள். எங்களைச் சட்ட விரோதக் கூட்டத்தார் என்று இவர் பேரிட்டிருக் கிறார். வேண்டுமானால் என்னை வந்து கைது செய்யட்டும்.

அதை விட்டு ஏழை ஜனங்களின் பேரில் ஏன் சீறி விழ வேண்டும் ?" என்று இவ்வாறெல்லாம் பேசியதுடன், சத்தியாக்கிரக தத்துவத்தையும், உப்பு வரி எப்படி அநியாயமென்பது முதலான விஷயங்களையும் எடுத்துப் பேசினர்.

கூட்டம் முடிய காலை 9-30 ஆயிற்று. அந்நிய நாட்டு ஆடைகள் சுவாமிகள் கையால் எரிக்கப்பட்டன. கலியாண புரத்தின் சார்பாக ரூ 151-5-0 தொகை அளிக்கப்பட்டது. கூட்டம் முடிந்ததும் தொண்டர்கள் சிங்கப்பூர் சுவாமிகள் மடத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். இந்த மடம் பார்வைக்கு ஒரு தனிகர் வீடு போலிருந்தது. இது 'ட' மாதிரி அமைக்கப்பட்டிருக்கிறது. தெரு மட்டத்திற்குச் சுமார் 4 அடி உயரத்திற்குக் கற்படிகள், இவைகள் ஏறியதும் கட்டிடத்தின் முதல் பாகம் அழகான சிறிய வெளி வராந்தா 5 அடி அகலத்திலுண்டு. இது முடிந்ததும் உள் கட்டிடத்திற்குச் செல்லும் முதல் வாயிற்படி இருக்கிறது. 'ட' உருவத்தின் முதல் உறுப்பின் அமைப்பாகிய இந்தப் பாகம் மூன்று நான்கு கட்டுகளாயிருக்கிறது. கடைக் கட்டில் ஒரு கிணறு உண்டு. இதிலிருந்து இடது புறமாய் ஒரு வாயிற்படி இருக்கிறது. இங்கிருந்து 'ட' உருவத்தின் இரண்டாவது உறுப்பின் அமைப்பு ஆரம்பமாகிறது. இதில் சுமார் 40 அடி நீளமுள்ள விஸ்தாரமான இடம் முதற்கட்டு. தெற்கு வடக்காய் நீண்டிருக்கும் இந்தப் பாகத்தில்தான் தொண்டர்கள் தங்கியிருந்தனர். இதன் இடது பாரிசத்தில் சிறு முற்றமும் அதையடுத்து ஒரு வாயிற்படியும் அதற்கப் பால் மாஞ்செடிகளோடமைந்த கொல்லைப்புறமும் இருக் கின்றன, இந்தக் கட்டின் தென் பாரிசத்தில் மேலும் இரண்டு கட்டுகளும் வாயிற்படிகள் நடைபாதைகளோடு அமைக்கப்பட்டிருக்கின்றன. கடைசி வாயிற்படியைக் கடந்து அப்பால் சென்ருல் அங்கே ஒரு சிறு சந்து கீழ் மேலாய் ஓடுகிறது. இது பார்வைக்குப் பொது இடமாகக் காணப்பட்டாலும் கட்டிடத்தைச் சேர்ந்த பாகமாகவே யிருக்கிறது. இதைத் தாண்டி மேலும் தெற்கே போனல்

இந்த மடத்தைச் சேர்ந்த படித்துறை ஆற்றில் கொண்டு போய் விடுகிறது. இதுதான் மடத்தைச் சேர்ந்த புழக்கடைவாசல். மடத்தின் உள்ளே போய்ப் பார்க்காதவர்களுக்குக் கட்டிடத்தின் முகப்பு வாசலுக்கும் புழக்கடை வாசலுக்கும் சம்பந்தமிருக்கிறதென்றே தெரிந்துகொள்ள முடியாததாய் இது அமைக்கப்பட்டிருப்பதைப் பார்த்தால் வெவ்வேருயிருந்த இரண்டுக் கட்டிடங்கள் பின்னால் ஒன்ருய்ச் சேர்க்கப்பட்டிருக்கிறதென்னும் ஊகத்துக்கு இடமுண்டாகும் ஆற்றங்கரையோரமாய் அமைக்கப்பட்டிருந்த இந்தக் கட்டிடமும் இன்னும் இதுபோன்ற பல புராதனமான கட்டிடங்களும் தஞ்சாவூர் மகாராஜா அரசாண்ட காலத்தில் அமைக்கப்பட்டனவாயிருக்குமென்று சொல்லத்தக்கதாயிருக்கின்றன.

இந்த ஜாகையில் தொண்டர்கள் கைமூட்டைகளை வைத்துவிட்டு ஸ்நானம் பண்ணுவதற்காக ஆற்றுக்குப் போயினர். அதுசமயம் மணி பத்தாயிருந்தபடியால் வெகு சீக்கிரம் ஸ்நானம் முடித்துக்கொண்டு வரவேண்டுமென்று தாக்கீது செய்யப்பட்டது. அதுபோலவே தொண்டர்கள் வேஷ்டி துவைக்கும் ஜோலியெல்லாம் பின்னால் பார்த்துக் கொள்வோமென்று ஆடைகளை அப்படியே அவிழ்த்து வைத்துவிட்டு ஐந்து நிமிஷம், பத்து நிமிஷங்களுக்குள்ளாக அனைவரும் ஸ்நானம் முடித்துக்கொண்டு திரும்பினர். இதற்குள்ளாகச் சாப்பாடு தயாராயிற்றென்று அழைக்கப்பட்டனர். தொண்டர்களெல்லோரும் செம்பும் கையுமாக ஒரு பர்லாங்கு தூரத்தில் கடைத்தெருவெல்லாம் தாண்டிச் சென்ருர்கள். பஞ்சநதீஸ்வரர் ஆலயத்திற்குப் பின்னால் மேட்டுத்தெருவில் போஜன ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இலைகளெல்லாம் போட்டுத் தயாராயிருந்தன. சற்றுப் பின்னால் வந்தவர்களுக்கெல்லாம் கீழே இடமில்லாமல் மேல் மெத்தையில் இடமுண்டாக்கிக் கொடுக்கப்பட்டது. தலைவர் ராஜாஜியும் சற்று தாமதித்து வந்தபடியால் அவரும் மெத்தைக்கே அழைத்துச் செல்லப்பட்டார்.

விருந்துக்கான ஏற்பாடுகள் வெகு சிறப்பாகவே செய்யப் பட்டிருந்தன. ஏழெட்டுக் கரிவகைகளும், வேண்டியமட்டும் நெய்யும், பஞ்சபக்ஷ்ய பரமான்னம் இலைகளில் பரிமாற வழக்கம்போல் சாப்பாட்டிற்கு முன் நடக்கவேண்டிய பிரார்த்தனை 'ரகுபதி ராகவ ராஜாராம் பதிதபாவன சீதா ராம்,' என்ற பத்தியத்தின் வாயிலாகச் செய்து முடித்து கால்மணி நேரத்திற்குள்ளாகச் சாப்பிட்டு முடித்தனர். தொண்டர்கள் தத்தம் இலையைத் தாமே எடுத்துக்கொண்டு அந்தக் கட்டிடத்திற்குப் பின்புறத்தில் தொண்டர்படையின் சுகாதார கோஷ்டியாரால் ஏற்கனவே வெட்டியிருந்த குழியில் கொண்டுபோய் போட்டுக் கைகால் அலம்பிக்கொண்டு ஜாகைக்குத் திரும்பினர். எல்லா இலைகளும் குழியிற் போய்ச் சேர்ந்ததும் சுகாதாரக் கோஷ்டியார் மண்வெட்டிகளைக் கொண்டு அதைப் பந்தோபஸ்தாக மூடிவைத்தனர். இதனால் பெரிய விருந்து நடக்குமிடத்தில் வீட்டிற்கருகில் உண்டாகும் அசுத்தம் பிரஸ்தாப விருந்திடத்தில் சிறிதும் காணப்பட வில்லை. சாப்பிட்ட இலைகளெல்லாம் என்னவாயிற்று என்று அந்தத் தெருவார் ஆச்சரியத்துடன் பேசிக்கொண்டு, பிறகு உண்மை தெரிந்துகொண்டு தொண்டர்படையின் ஏற் பாட்டைக் கண்டு போற்றவும் ஆயிற்று.

திருவையாற்றில் நடந்த வரவேற்பு வைபவத்திற்குச் சுவாமிகளுக்குப்பக்க பலமாயிருந்து வேண்டிய ஏற்பாடு செய்தவர்களில் டி ஊர் ஸ்ரீ சுப்பிரமணிய முதலியாரவர்களும் ஸ்ரீ வ. ராமசுவாமி ஐயங்காரவர்களும் முக்கியஸ்தர்களாவர். இவர்கள் பின்னால் ஆறுமாத தண்டனைக்கு ஆளாகிச் சிறை வாசம் செய்து பல்லாரி அலிபுரம் சிறையில் அவர்களுடைய வாய்தா முடிந்து விடுதலையடைந்தனர்.

மாலை 4 மணிக்கெல்லாம் இரண்டாவது வேலை போஜ னத்திற்கு மணியடிக்கப்பட்டது. தொண்டர்கள் காலையில் சென்ற கிரகத்திற்கே போய் அரைமணி சாவகாசத்திற்குள் திரும்பி வந்தனர். 4—45 மணிக்குத் தொண்டர்களெல்லாம்

புஷ்ய மண்டபத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அங்கு அன்று சுகாதார வேலைக்காகப் பறைச்சேரிக்குப் போயிருந்த தொண்டர்களை முன்னணியில் வைத்துக்கொண்டு படையை வரிசையாய் நிறுத்தி ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரும் ஸ்ரீ சிதம்பர சுவாமிகளும் கூட நின்ற வண்ணமாய் ஒரு புகைப்படம் எடுக்கப்பட்டது.

இந்தப்பிரயாணத்தில் செய்யப்பட்டிருந்த ஏற்பாடுகளில் பிரதி தினமும் பகலில் 12 மணியிலிருந்து 2 மணி வரை தொண்டர்களிலிருந்து ஏழெட்டு பேர் பொறுக்கியெடுக்கப் பட்டு பறைச்சேரிக்கு அழைத்துச் செல்லப் படுவர். ஒருவன் டங்கா தோளில் மாட்டிக்கொண்டு அடித்துக் கொண்டே போகப் பின்னல் இரண்டொரு தொண்டர் கையில் தெருப் பெருக்குமாறும், ஒருவர், "பிக்ஆக்ஸ்" என்ற மண் தோண்டி யும் ஒருவர் மண்வெட்டியும், ஒருவர் மதுவிலக்குப் பிரசாரப் படங்களும் எடுத்துக்கொண்டு பின்னல் செல்வார்கள். இந்தச் சிறு கூட்டத்தில் இரண்டொருவர் நன்ருய்ப் பாடக் கூடியவர்களும் உபன்யாசம் செய்யக் கூடியவர்களும் இருப் பார்கள். எல்லாவற்றிலும் சுகாதாரக்குறையுள்ள இடம் ஊருக்கு வெளியிலுள்ள பறைச்சேரி என்பது எல்லாவூரிலும் பிரசித்தமாயிருக்கிறபடியால் அந்த இடத்திற்குப் போவார் கள். அங்கு நிழலுள்ள இடமாகப் பார்த்து படங்களைத் தொங்கவிட்டு கள்குடியினல் ஏற்படும் தீங்குகளைப்பற்றி இரண்டொருவர் பிரசாரம் செய்வார்கள். மற்றவர்கள் சேரியில் அசுத்தமாக உள்ள இடங்களை மண்தோண்டி கொண்டு தோண்டுவதும் மண்வெட்டி கொண்டு எடுத்துப் போடுவதும் தெருப்பெருக்குமாறுகளைக் கொண்டு பெருக்கு வதுமாய் தெருக்களைத் துப்புரவு செய்வார்கள். மகாத்மா காந்தியடிகளின் தண்டிப் பிரயாணத்தில் இதே மாதிரி செய்யப்பட்டு வந்தது. அதுபோலவே இந்தப் பிரயாணத் திலும் ஏற்பாடு செய்யப்பட்டு வந்தது. இதன் தாத்பரிய மென்னவென்ருல் ஒரு தொழிலை இழிவெனக் கருதி அதைச் செய்வோரை இழிவாகக் கருதுவது கூடாது. எல்லாத்

தொழிலும் எல்லோரும் செய்யக் கடமைப்பட்டவர்கள். அதிலும் தேச சேவைக்காக முற்பட்ட தொண்டர்கள் ஜாதி வித்தியாசமின்றி எல்லோருமே தொண்டு செய்யக்கடமைப் பட்டவர்கள் என்பதை நிதரிசனமாகக் காட்டவே இந்த ஏற்பாடு. அத்துடன் மதுவிலக்குப் பிரசாரமும் நிர்மாண திட்டத்தில் ஒன்ருதலால் அதுவும் கையோடு கையாய்ச் செய்யப்பட்டு வந்தது.

பிறகு தொண்டர்கள் காப்டனுடைய உத்திரவின்பேரில் தொண்டர்படை தேசீயக்கொடியை முன்னே செலுத்திக் கொண்டு டங்கா நாதத்துடன் இந்த இடத்தைவிட்டுப்புறப் பட்டது. இந்த இடத்தில் தலைவருக்கு வலதுகாலில் கல்லால் அடிபட்டு ரத்தம் பீறிட்டு ஓடிக்கொண்டிருந்தது. காயத்தில் துணிபோட்டுக் கட்டிக்கொண்டு மெதுவாக அவர் நடந்தார். வலி ஜாஸ்தியானல் அவர் ஏறிக்கொள்வதென்று ஒரு வண்டியும் அமர்த்தப்பட்டது. அதுவும் கூடவே படை யோடு வந்துகொண்டிருந்தது. ஆனல் தலைவர் பிரயாண முழுவதும் கால்நடையாகவே நடந்து முடித்தார்.

ஜனங்கள் வெகு உற்சாகமாய்க் கூடவே சூழ்ந்துவந்த னர். புஷ்யமண்டபப்படித்துறை ரஸ்தாவைத் தாண்டியதும் தொண்டர்படை பஜார் தெருவழியாகச் சற்று தூரம் போனதும், தெற்கு வடக்காயோடும் ஒரு தெருவில் திரும்பி யது. இது தான் தஞ்சாவூருக்குச் செல்லும் ரஸ்தா இரண்டு மூன்று நிமிஷத்திற்குள்ளாகக் காவிரியாற்றுப் பாலம் குறுக்கிட்டது. வழக்கம்போல் ஜனங்கள் சற்றுப் பின்னல் வரும்படி கேட்டுக்கொள்ளப் பட்டனர். படை பாலத்தைச் சிரமமின்றிக் கடந்து அப்பால் செல்லலாயிற்று.

இந்துக்களும் முஸ்லிம்களும் கலந்த பெருங் கூட்டம் படையை இருபுறத்திலும் சூழ்ந்து கொண்டு ஜெயகோஷம் நிமிஷத்திற்கொருதரம் செய்த வண்ணமாகவே நடந்தனர். ஜனங்களுக்கிருந்த உற்சாகம் இவ்வளவுதான் என்று சொல்லி முடியாது. தஞ்சைவாசிகள் அநேகர் எதிர்

சேவைக்காக வந்து படையோடு நடந்து வந்து கொண்டிருந்தனர். அவர்கள் இருபாரிசத்திலும் இடம் காணமல் ரஸ்தாப் பள்ளத்தில் இறங்குவதும் வயல்களில் இறங்குவதுமாய் நடந்து வந்தனர்.

## திருக்கண்டியூர்

சுமார் $1\frac{1}{2}$ கல் நடந்தானதும் காவிரியாற்றின் ஒரு கிளை நதியாகிய 'குடமுருட்டி' ஆறு குறுக்கிட்டது. இது சமயம் மாலை 5–30 மணி ஆகியிருந்தது. வெம்மை தணிந்த கிரணங்களே வீசிக்கொண்டிருந்தனவாயினும், நடந்த வேகத்தினல் ஒவ்வொரு தொண்டருக்கும் நெற்றியிலும் கன்னங்களிலும் வியர்வை நீர் ஒழுகிக் கொண்டே இருந்தது. உடம்பின் வியர்வையால் சட்டைகளெல்லாம் நனைந்துகொண்டே இருந்தன. ஆற்றுப்பாலத்தைக் கடந்து சில நிமிஷத்திற்குள், ரஸ்தாவோடமைந்த ஒரு சிறு ஊர் காணப்பட்டது. இது அட்ட வீரட்டாதைத்துள் ஒன்ருகிய திருக்கண்டியூர். இங்கு சொற்பமாக வரவேற்பு நடந்தது. இங்கு படை ரஸ்தாவில் நிற்க, தாம் மட்டும் பிரிந்து போய், வரவேற்பளித்த அந்த ஊர் வாசிகளுக்கு இரண்டொரு வார்த்தைகளால் தலைவர் உபன்னியாசம் செய்து முடித்துத் திரும்பி வந்தார். படையும் உடனே அங்கிருந்து புறப்பட்டது. கூட வரும் கூட்டத்தோடு அந்த ஊராரின் கூட்டமும் ஒன்று கூடி மேலே போகப் போக பெருங் கூட்டம் திரண்டு விட்டது. ஜனங்கள் கால் மாறிக் கால் வைப்பதற்கும் போதிய இடம் இடையிலில்லாமல் கால்களோடு கால்கள் கடுமையாய் மோதிக் கொண்டன. எவருக்கும் வசப்படாமல் உற்சாகத்திலேயே ஊறிக் கிடந்த இவர்களுக்கு ஒழுங்காய் வரச் சொல்லிக் கட்டளையிட யாரால் சாத்தியப்படும்? ஹிந்துஸ்தான் சேவா தளத்திலிருந்து இப்படையில் வந்து சேர்ந்திருந்த ஏழெட்டு தொண்டர்கள் பிரயாண ஆரம்பத்திலிருந்து படைக்கு இருபுறத்திலும் இருந்து பந்தோபஸ்து வேலையை வழி நெடுகக் கவனித்து வந்தனர். காக்கி சட்டை நிஜார் காலுக்கு மேஜோடு ஜோடுகள் அணிந்து கொண்டு இவர்கள் வெகு

திறமையாகப் படையைக் காத்து வந்தனராயினும் கூட்டம் ஜாஸ்தியாய்ப் பெருகிய இடத்தில் இவர்களால் ஒன்றுமே செய்ய இயலாமற் போய்க் கொண்டிருந்தது. இவ்வாறு கூட்டம் வரம்பு மீறி ஜெயகோஷம் செய்து கொண்டு வழி நடந்து கொண்டிருக்கையில் வெட்டாறு வந்து குறுக்கிட்டது. அதைத்தாண்டி அப்பால் செல்லுகையில் அந்த ஜில்லா வாசிகளாகிய தொண்டர்கள் "அதோ தெரிகிறது, அம்மன் பேட்டை" என்றனர். அப்படியாயின் 'வடுவூர் துரைசாமி ஐயங்கார் எழுதிய பூர்ண சந்திரோதயத்தில்' வரும் கூத்தாடி அன்னதத்தினுடைய சொந்தவூர் ஆயிற்று என்று சில தொண்டர்கள் ஹாஸ்யத் துணுக்குகளை அளந்து விட்டுக் கொண்டேபோயினர்.

## தஞ்சாவூர்

தஞ்சை நகரத்தின் சுங்கச் சாவடி அடுத்தாற்போல் இருந்தது. அதைத் தாண்டியதும் 'ஜம்பு காவிரி' என்ற கிளை நதி குறுக்கிட்டது. இந்த இடத்தில் தஞ்சை நகர வாசிகள் மாபெருங் கூட்டம் கூடி பூச்சக்கர குடையோடும் மூன்று பூர்ண கும்பங்களோடும் மேளதாள பஜனை வைபவத் தோடும் காத்திருந்தனர். தொண்டர்படை அவர்களிருந்த இடத்தை அடையவும் அப்படியே ரஸ்தாவில் நிறுத்தப் பட்டது. ரோஜா மலர் தூவுவது ஒரு புறம், பன்னீர் தெளிப்பது மற்றொரு புறம், பானகம் வழங்குவது இன்னொரு புறம், கற்கண்டு வழங்குவது மற்றோர் புறம், இந்த விதமாக வெகு சிறப்பாக உபசரிப்பு நடத்தி வந்தனர். தஞ்சை ப. சா. வெங்கடகிருஷ்ண பிள்ளை படையின் ஒரு கோடி யிலிருந்து மற்றொரு கோடிவரை இரு புறங்களிலும் ஒவ் வொரு தொண்டரின் நேருக்குநேர் நின்று சந்தனம் பூசி மலர்மாலை சூட்டி வந்தார். இங்கு மட்டும் படை அரைமணி நேரம் தாமதம் செய்ய வேண்டியிருந்தது. அதற்குள் இருண்டு போகும் சமயம் ஆகிவிட்ட படியால் காந்த விளக்குகள் ஒன்றன்பின் ஒன்றாய் அநேகம் வரத்தலைப் பட்டன.

தஞ்சை ஜில்லாவுக்குத் தலைநகரான இந்த ஊரில் தாரன்துரை ஜில்லாவுக்குத் தலைவராய் இருந்துகொண்டு தொண்டர்படையை வரவேற்கக் கூடாது என்று சொல்லி யிருந்ததால்தான் அவருடைய உத்தரவை ஊர்வாசிகள் சற்றும் பொருட்படுத்தவில்லை என்பதை அவர் நன்றாய் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற நோக்கத்தோடு இந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்ததாகக் காணப்பட்டது. சற்று ஆடம்பரமாய்த் தோன்றினாலும் பாதகமில்லையென்று நினைக்கத் தக்கதாயிருந்தது. விளக்கு வைத்திருப்பவர்கள் விளக்குகளையும், புஷ்பவியாபாரிகள் புஷ்பங்களையும், சந்தனம் பன்னீர் முதலிய வாசனைத் திரவிய வியாபாரிகள் அந்தந்த சாமான்களையும் பலசரக்குக் கடைக்காரர் கற்கண்டு முதலிய பதார்த்தங்களையும், காய்கறி வியாபாரிகள், பழக் கடைக்காரர்கள் கூடைக்கூடையாய்ப் பழங்களையும் அவரவர் காணிக்கையாகக் கொடுத்து உதவியதில் பணம் வசூலித்துப் பதார்த்தங்கள் வாங்கும் சிரமமில்லாமல் பருத்திச் செடியில் வஸ்திரமாகவே காய்த்தது போலாயிற்று. இந்த வரவேற்பு ஏற்பாடுகளில் ஜாகை முதலிய வசதிகள் தேடிக் கொடுப்பதில் இளைஞர் கோஷ்டியில் ஸ்ரீ கோபாலகிருஷ்ண அய்யர் மிகவும் சிரமம் எடுத்துக்கொண்டு உழைத்திருந்தார். அடுத்தடுத்து அநேக காந்த விளக்குகள் ஒளிபரப்பத் தொண்டர்படை, அந்த இடத்திலிருந்து புறப்பட்டு மேலே செல்ல ஆரம்பித்தது. சற்று தூரத்தில் வெண்ணாறு குறுக்கிட்டது. கைப்பிடி மதிலின்பேரில் ஜனங்கள் நின்றுகொண்டு தொண்டர்படை செல்வதைப் பார்த்து நின்றனர். தொண்டர் படையைச் சுற்றிலும் பல வாலிபரும் முதியோரும் ஒருவரோடொருவர் கைகோத்துக் கொண்டு ஜனங்கள் தொண்டர்களின்பேரில் வந்து விழுந்து தொந்திரவு செய்யாதபடி காத்து வந்தனர். கூட்ட மிகுதியால் வேகமாய் நடக்க முடியாமல் படை மெதுவாய்ப் போய்க் கொண்டிருந்தது. வெண்ணாற்றுப் பாலத்தைக் கடந்து சற்றுதூரம் போனதும் தொண்டர் படை இறங்குவதற்காக ஏற்படுத்தப்பட்டிருந்த கட்டிடம் ரஸ்தாவோடிருந்தது. அங்கு வரவேற்பு உப

சரணைக்காக சற்றுநேரம் படை நிறுத்தப்பட்டது. இந்தக் கட்டிடம் ஓர் அம்மையாருக்குச் சொந்தம். ஊரிலுள்ள பெரிய பிரபுக்களும் படித்தவர்களும் கலெக்டருடைய உத்தரவுக்குப் பயந்து இடங்கொடுத்துதவ மறுத்த சமயம் ஒரு பெருமாட்டி பெருந்தன்மையோடும் வீரத்தோடும் இடங்கொடுத்துதவ வேண்டியது தம்முடைய கடமையென உணர்ந்து முன் வந்தது அந்த ஊர் பயங்கொளிகளையெல்லாம் சரியானபடி கண்டித்தது போலிருந்தது.

அந்தக் கட்டிடத்தின் முன்னால் சிறிதுநேரம் நிறுத்தப் பட்டு வரவேற்கப்பட்ட தொண்டர்கள் அத்துடன் கட்டிடத் திற்குள் அழைத்துச் செல்லப்பட்டால் மிகவும் நலமாயிருக்கு மென்று நினைத்தார்கள். ஏனென்றால் வழக்கமாய் நடக்க வேண்டிய அளவு ஏற்கனவே நடந்தாய் விட்டது. இனிமேல் நடக்கும் ஒவ்வோர் அடியும் அதிகப்படியாக நடந்தது போலவே ஆவதாயிருந்தது. அல்லாமலும் ஒரே இடத்தில் அதிகநேரம் நின்று நின்று போவதினால் ஏற்படும் சிரமமும் அன்று மாலைப் பிரயாணத்தில் அதிகமாய் ஏற்பட்டிருந்தது. என்ன சிரமமேற்பட்டிருந்தாலுமென்ன? பொதுக்கூட்டம் நடக்குமிடத்திற்குப் போகாமலிருக்க முடியுமா? அந்தஇடத் திற்கோ இந்த ஜாகையிலிருந்து சரியாய் இரண்டு மைலி ருந்தது. அங்குபோய்க் கூட்டம் முடிந்தபின்பு மீண்டும் இந்தயிடத்திற்கு வந்து தங்க வேண்டுமென்ற நிலையில் இருந்தத் தொண்டர்கள் நிலைமை மிகவும் பரிதாபகரமாய்த் தானிருந்தது. ஆனாலும் நானாவித ஜனங்கள் சூழ்ந்து உற் சாகமேவடிவாய் ஜெயகோஷம் செய்துகொண்டு போவதைப் பார்த்து அந்தச் சமயத்திற்குத் தங்கள் சிரமமெல்லாம் சற்று மறந்தார்கள். தொண்டர்களின் காப்டன் தமக்கும் படைக் கும் அங்கு நடந்த உபசரணையின் மிகையைக் கண்டு மதுவை யுண்ட வண்டுபோல் அப்படியே பரவசமடைந்தவராய் தம்மையறியாமல், தமிழும் மலையாளமும் கலந்த மணி பிரவாளமொழிகளில் கூட்டத்தைப் பார்த்து ஆவேசத்துடன் சொல்ல ஆரம்பித்தார்.

'க்விக் மார்ச்' என்றும் 'ஹால்ட்' என்றும் 'டபிளப்' என்றும் 'நோ நாய்ஸ்' என்றும் ஆங்கிலத்தில் சொல்லிக் கொண்டும் அவசியமான பொழுதெல்லாம் ஊதுகுழற்சத்தம் கொடுத்துக் கொண்டும் இருந்தார். தொண்டர்படை இந்த உத்தரவுகளுக்கெல்லாம் சற்றும் பிசகாமல் அடங்கி நகர் பக்கமாய் மேல்நோக்கி நடக்க ஆரம்பித்தது. கருந்தட்டான் குடியைத் தாண்டியதும் மேற்கே கள்ளப்பெரம்பூர் அருகில் வெண்ணாற்றிலிருந்து பிரிந்த வடவாறு என்னும் கிளைநதி குறுக்கிடுகிறது. இதையும் தாண்டி தொண்டர்படை அப்பால் சென்றது. தஞ்சை நகரத்தின் கோட்டைவாசல் அங்கிருக்கிறது. அதையும் தாண்டி தொண்டர்படை வெகு வேகமாய் நடந்து கடைத்தெருப்பக்கமாய் வந்தபொழுது அங்குக் கீழவாசல் கடைக்காரர்களால் உபசரிக்கப்பட்டு சிறிது நேரம் தாமதிக்கப் பட்டது.

இது முடிந்ததும் அங்கிருந்து புறப்பட்ட படை மணிக் கூண்டு மைதானத்திற்கு (லஜபதிராய் சதுக்கம்) அழைத்துச் செல்லப்பட்டது. படை அங்குபோய்ச் சேருவதற்கு வெகு நேரத்திற்கு முன்னதாகவே அதை எதிர்பார்த்தவண்ணமாய் பல்லாயிரக்கணக்கான ஜனங்கள் கூடி ஆவலே வடிவாய் அமர்ந்திருந்தனர்.

அமளிதுமளியாயிருந்த அந்தக் கூட்டத்தில் ஒவ்வொரு வருக்கும் இடம் கிடைத்து, உட்கார்ந்து, அமைதி நிலைபெற அரைமணி நேரம் பிடித்திருக்கும். அதுவரை உபன்னியாச மேடையிலிருந்து தொண்டை கிழியக் கத்தினதெல்லாம் வீணாய்த்தான் போயிற்று. உபன்னியாசம் நடைபெறும் இடத்திற்கு எவ்வளவு சமீபமாய்ச் செல்ல முடியுமோ அவ்வளவு சமீபமாய்ப் போகவே ஒவ்வொருவரும் பிரயத் தனப் பட்டனர். தேகபலம் சாதகமாயுள்ளவர்கள் தங்கள் மனோரதத்தைச் சாதகமாக்கிக் கொண்டனர். இளைத்தவர் கள் தண்ணீர் நிரம்பிய குளத்தில் சத்தை குப்பை கரைக்குத் தள்ளப்படுவதுபோல் தூரத்தில் தள்ளப்பட்டுக் கொண்டி ருந்தனர். இளைத்தவர்களிலும் வாய்சாதுரிய முள்ளவர்கள்

மேடையருகில் அவசரவேலை யிருப்பதாகச் சொல்லிக் கொண்டே எல்லோரையும் ஒதுக்கிக்கொண்டு போய்த் தந்திரமாக முன்னிடங்களைச் சம்பாதித்துக்கொண்டிருந் தனர். தொண்டர்களில் இரண்டொருவர் ஒன்றுக்குப் போய் விட்டு வந்தவர்கள் மற்ற தொண்டர்களோடு கலந்து கொள்ள முடியாமல் வெகு நேரம் வரை எட்ட நின்றிருந்து தாங்கள் தொண்டர்கள் தானென்பதை ருசுப்படுத்திக் கொண்டு தொண்டர்களோடு தொண்டர்களாய்ப் போய் உட்காரப் பட்டபாடு பகீரதப் பிரயத்தனமாய் முடிந்தது. சந்தடியும் குழப்பமும் நின்று பொதுக்கூட்டத்தின் நட வடிக்கைகள் நடத்துவதற்குப் பிரமுகர்கள் பிரயாசை பட்டுக்கொண்டிருந்தனர். இரகசியப்போலீஸ் உத்தியோகஸ் தர்கள் தலையிறங்கப்போட்டு உட்கார்ந்திருந்தனர். மதுரை யிலிருந்து பிரயாணத்தில் பின்தொடர்ந்து வருவதற்காகவே பிரத்தியேகமாய் வரவழைக்கப்பட்டிருந்த இரண்டு சி. ஐ. டி. உத்தியோகஸ்தர்களும் அந்த கோஷ்டியில் கலந் திருந்தனர். தலைவர் எழுந்து ஒருமணி நேரம்வரை உபன் னியாசம் செய்தார். ஸ்ரீ ஆச்சாரியார் பேசிவருகையில் முக்கியமாய்ப் பொதுஜனங்களைப் பார்த்து சில கேள்விகள் கேட்டார். அவை பின்வருமாறு;

"நீங்கள் தஞ்சை கலெக்டர் வெளியிட்ட அறிக்கையைத் தெரிந்து இக்கூட்டத்திற்கு வந்தீர்களா, அல்லது தெரியா மல் வந்திருக்கிறீர்களா?" என்று வினவினர். அதற்கு ஜனங்கள், "தெரிந்துதான் வந்தோம்" என்றனர்கள். பிறகு ஸ்ரீ ஆச்சாரியார் ஒரு போலீஸ் சேவகர் இம்மேடைக்கு வந்து உங்கள் எல்லோரையும் கைது செய்திருக்கிறேன் என்று கூறினல் என்ன செய்வீர்கள் என்றும், தொண்டர் களை வரவேற்றதற்கு கலெக்டர் உத்தரவின்படி 6 மாதம் சிறைத்தண்டனையை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறீர் களா என்றும், தற்கால ஆட்சி முறையில் உங்களுக்கு விருப்பமா? என்றும், கேட்டபொழுது ஜனங்கள் முறையே, கைதியாகத் தயாராக விருப்பதாகவும் 6 மாத சிறைத் தண்டனையை ஏற்றுக்கொள்ளச் சித்தமாயிருப்பதாகவும்

தற்கால ஆட்சிமுறையில் விருப்பமில்லை யென்பதாகவும் பதிலளித்தார்கள். முடிவில் ஸ்ரீ ஆச்சாரியார் தஞ்சை மகா ஜனங்களின் வீரமே சுயராஜ்யமடைவதற்கு ஓர் அறிகுறியாகுமென்று கூறினர். அன்றைக் கூட்டத்தில் ஓர் அம்மையார் மோதிரம் கொடுத்தார். அதைத் திருப்பூர் முத்துசாமிச் செட்டியார் ஏலத்தில் வாங்கினர்.

அன்று கூட்டம் முடிய இரவு 10-15 மணிக்குமேல் ஆய் விட்டது. கூட்டத்தில் பணமுடிப்பும் உண்டி வசூலும் சாமான்களாக வந்து ஏலம் போட்ட தொகையும் சேர்ந்து தலைநகர் என்ற பேரின் கௌரவத்துக்குக் குறைவில்லாத அளவு தொகை சேர்ந்தது.

அங்கிருந்து இரவு 11 மணிக்குப் படை புறப்பட்டது. அந்த அகால வேளையில் ஊர்வலம் அழைத்துப் போயினர். தொண்டர்களுக்கு இந்த ஊர்வலம் வேண்டாவெறுப்பாக இருந்தது. ஆயினும் என்ன செய்வது? பிரியத்தோடு அழைக்கும் ஊர்வாசிகளின் வேண்டுகோளை மறுக்கவும் மனமில்லாதவராய் சிரமத்தோடு சிரமமாய் பிரதித் தொண்டரும் பல்லைக்கடித்துக்கொண்டு நடந்துபோயினர். வளைந்து வளைந்து பல தெருக்களில் விழுந்து கடைசியாக ஒரு ரஸ்தாவோடு வந்து சேர்ந்தது. அந்த ரஸ்தாவிலும் அதற்கப்பாலும் வரவேற்கவேண்டுமென்று விரும்பிய கனவான்கள் இருந்தனர். வேகமாய் நடந்துபோன தொண்டர்படை திடீரென்று ஒரு வீட்டின் முன்னால் நிறுத்தப்பட்டது. ஸ்ரீ வெங்கிடகிருஷ்ண பிள்ளை அந்த வீட்டிலிருந்து ஒரு கத்தை கதர்நூலைக் கையிலேந்திக் கொண்டுவந்து ஒவ்வொரு தொண்டருக்கும் கதர் மாலை சூட்டி உபசரித்தனுப்பினர். இங்கு தொண்டர்கள் இரண்டு பிரிவாய்ப் பிரிந்திருந்தனர். ஒருசிலர் இங்கே உபசரிக்கப்படுகையில் மற்றும் சிலர் வேறு சில இடங்களுக்கும் போய் அங்கு நடந்தேறிய உபசரிப்பை ஏற்றுக்கொண்டு வேறு வழியாய் ராஜ பாட்டைக்கு வந்து வெண்ணாற்றங்கரைக்குப் போகும் ரஸ்தாவில் ஒன்றாய்ச் சேர்ந்து போக ஆரம்பித்தனர். ஆனல்

ஒழுங்குமுறையெல்லாம் அனுசரிக்க முடியாமல் அவனவன் சீக்கிரம் ஜாகைக்குப் போய்ச் சேர்ந்தால் போதும் என்ற எண்ணத்தோடு ஓட்ட நடையில் போயினர். சிலர் கால்வலி தாங்கமாட்டாமல் நத்தை ஊர்வதுபோல நடந்து போய்க் கொண்டிருந்தனர். அந்த இரண்டு மைல் தூரம் நடப்பதற் குள்ளாக பட்ட கஷ்டம் அதை அனுபவித்த தொண்டர்களே நன்கறிவார்கள். அன்று மாலைப் பிரயாணம், ஊர்வலத்தில் சுற்றியலைந்தது உள்பட 12 மைலுக்கு மேலாகவேயிருக்கும். கடைசியாக ஜாகைக்குப் போய்ச் சேர்ந்த சமயம் மணி 12 ஆகிவிட்டது. ஆனால் அன்றிரவு நித்திரை போனால் நாலு மணிக்கு எழுப்பப்படமாட்டோம் என்ற தைரியம் இருந்திரா விடில் தொண்டர்கள் பாடு மிகவும் திண்டாட்டமாகத்தான் இருந்திருக்கும்.

ஜாகை ஏற்படுத்தியிருந்த அந்தக் கட்டிடம் ரஸ்தா அமைந்திருந்த வாட்டத்தையனுசரித்து ஒரு நீண்ட மதிலி னால் ரஸ்தாவினின்றும் பிரிக்கப்பட்டிருந்தது. அந்த மதிலை யடுத்து உள்பக்கத்தில் ஒரு சிறு முற்றம், மதிலின் நீளமும், 10 அடி அகலமும் உள்ளதாயிருந்தது. அதில் ஒரு மூலை யில் அவரை முதலிய கொடிகள் பந்தலாகப் போடப்பட்டிருந் தன. இந்த முற்றத்தை யடுத்து முற்றத்தின் நீளத்தில் கெட்டிமச்சுக் கட்டிடம் அழகான வெளித்திண்ணையோடு அமைக்கப்பட்டிருந்தது. இந்தக் கட்டிடத்தில் எல்லாத் தேச பக்தர்களுடைய படங்களும் சுவரில் தொங்கிக்கொண்டிருந் தன. இந்தக் கட்டிடத்தின் இடது பாரிசத்தில் வெளி முற்றத்திலிருந்து ஒரு சிறு வாசற்படி வழியாய்ச் சென்றால், அங்கே ஒரு பெரிய வெளியில் பந்தல் போட்டிருந்தது. இந்த இடம் ரஸ்தாப்பக்கமாய் முட்கம்பி வேலியால் தடுக்கப்பட்டிருந்தது. இதன் பின்பக்கத்தில் ஒரு குட்டை யிருந்தது. அதன் தண்ணீர் குடிப்பதற்கு யோக்கியமில்லா திருந்தாலும் நூற்றுக்கணக்கான தொண்டர்கள் சௌகரிய மாய்க் கைகால் கழுவிவிட்டு வர உபயோகமாயிருந்தது. அதற்கப்பால் பூராவும் அறுவடையான வயல்களாகவே யிருந்தன. அந்த இரவில் தொண்டர்களுக்கு அவை மிகவும்

சௌகரியமாகத் தோன்றின. மூட்டை முடிச்சுக்களை யெல்லாம் பந்தலில் கொண்டுபோய் வைத்துவிட்டுச் சில தொண்டர்கள் தேகபாதைகளைத் தீர்த்துக்கொள்ள கரண்டியும் கையுமாய், செம்பில் குட்டையின் நீரை ஏந்திக் கொண்டு வயற்பக்கங்களுக்குப் போய் வந்தனர். பெரும்பான்மையோர் உடனே படுக்கை விரித்து உறங்கலாயினர்.

சரியாகக் காலை ஐந்துமணிக்கு வழக்கம்போல் மணியடிக்கப்பட்டது. தொண்டர்களில் ஒருவராவது எழுந்திருப்பதாகக் காணப்படவில்லை. மணியடித்து 5 நிமிஷத்திற்கு மேலாயிற்று. அங்கங்கே ஒவ்வொருவர் மட்டும் எழுந்து உட்கார்ந்து இருந்தனர். இரண்டொருவர் எழுந்து உட்கார்ந்து எல்லோரும் தூங்குவதைப் பார்த்து மீண்டும் தூங்கத் துவங்கினர். பத்து நிமிஷமாயிற்று தலைவர் தாம் வருவதாகவும் எல்லோரையும் எழுப்பிவிடச் சொல்லியும் செய்தி அனுப்பி விட்டார். உடனே படுத்திருந்தவர்களைப் பலாத்காரமாக எழுப்பி உட்கார்த்திக் கொண்டே வந்தனர். பிரார்த்தனை முடிந்த பிற்பாடு தூங்கலாமென்ற ஒரு சமாதானம் கூடவே சொல்லப்பட்டு வந்தது சில தொண்டர்களுக்குச் சற்று ஆறுதலாயிருந்தது. அரை மனதோடு எழுந்து தந்த சுத்தி செய்து கொண்டு பாதி தூக்கத்திலும் பாதி விழிப்பிலுமாக ஒவ்வொரு தொண்டரும் பிரார்த்தனை வரிசையில் வந்து உட்கார்ந்தனர். பிரயாணம் ஆரம்பித்தது முதல் தவருமல் நடந்தேறி வந்த காலைப் பிரார்த்தனை அன்றைத் தினம் சற்று சிரமத்தோடு நடத்தவேண்டியதாயிருந்தது. ஆயினும் முந்தின நாள் இரவில் அலைந்த அலைச்சலை நினைத்துக் கொண்டு எவரும் எத்தகைய புகாரும் எவர் பேரிலும் சொல்லாமல் தங்கள் மனதிலேயே எல்லாம் அடக்கிக் கொண்டனர்.

சுமார் பதினைந்து நிமிஷம்வரை வழக்கம்போல் பிரார்த்தனை நடந்தது. இது முடிந்ததும் தலைவர் தமது ஜாகைக்குச் சென்ருர். உடனே அநேக தொண்டர்கள் படுக்கையை விரிக்கலாயினர். சில தொண்டர்கள் மட்டும்

எழுந்தபிற்பாடு மறுபடியும் தூங்குவதென்ன என்று நினைத்தவர்களாய் தேகபாதைகளைத் தீர்த்துக்கொள்ளும் நிமித்தம் கரண்டியோடு வெளியே சென்றனர். வெளிக்குப்போய் வந்ததும் தூக்கமெல்லாம் இருந்தவிடம் தெரியாமல் பறந்து விட்டதென்பதை உணர்ந்தனர்.

முந்தின நாள் அசுத்தங்களெல்லாம் உடம்பில் இருப்பதினாலேயே ஆலசியமும் சோம்பலும் நித்திரையும் மயக்கமும் உண்டாகின்றன. இதனால் தான் ஆரோக்கிய வழி தெரிந்த அறிவாளிகள் அதிகாலையில் எழுந்திருந்ததும் தேக பாதையைத் தீர்த்துக்கொள்வதே முதல் கருமமாக வைத்துக் கொண்டிருக்கின்றனர். தேகபாதையோடு இருக்குங்கால் மனது இருக்கிற நிலையும் அது நிவிர்த்தியான பின் மனது இருக்கும் நிலையும் எப்படியென்பது நாம் சொல்லத் தேவையில்லை. அதிகாலையில் எழுந்திருக்கும் வழக்கத்தையே பூராவும் அறியாதவனாயினும் மேற் சொன்ன விஷயத்தை அறியாதிருக்க முடியாது.

ஆனால் அவர்கள் தங்கள் விருப்பத்தின்படி நெடு நேரம் தூங்கமுடியவில்லை. சிறிது நேரத்தில் காலைச் சிற்றுண்டியை அந்த விடத்திலே கொண்டு வந்து விட்டனர். அப்பொழுது மனது தூக்கத்திலிருந்து சிற்றுண்டிக்கு மாறியது. சிற்றுண்டி சாப்பிட்டு முடிந்ததும் அவ்விடத்தில் எண்ணெய் ஸ்நானம் முடிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. முடி வளர்ந்தவர்களுக்கு ஒரு அவுன்ஸ் ஜாஸ்தியும் முடியில்லாதவர்களுக்கு ஒரு அவுன்ஸ் கம்மியாகவும் எண்ணெய் வழங்கப்பட்டு வந்தது. அதைப் பெற்றுக்கொண்ட தொண்டர்கள் அடுத்துள்ள வெண்ணாற்றிற்கு ஸ்நானத்திற்காகப் போயினர்.

காலை பத்து மணிக்கெல்லாம் எல்லோரும் ஸ்நானம் முடித்துக் கொண்டு திரும்பி வந்தனர். பின்னால் அரை மணி நேரத்திற் கெல்லாம் போஜனத்திற்காக மணியடிக்கப் பட்டது. தொண்டர்களெல்லோரும் தண்ணீர் பாத்திரங்களை ஏந்திக்கொண்டு கட்டிடத்திற்குள் சென்றனர். இலைகளில்

போய் உட்கார்ந்து பரிமாறியதும் வழக்கம் போல் பிரார்த்தனை செய்து போஜனமருந்தலாயினர். பரிமாறு கிறவர்கள் காய்கறி பதார்த்தங்களை யேந்திக் கொண்டு சாப்பிட்டு முடியும் வரை சந்தேகத்திற்கு வேண்டிய மட்டும் பரிமாறிக் கொண்டிருந்தனர். அரைமணி நேரத்தில் போஜனம் முடிந்து எழுந்து தத்தம் எச்சிலையைத் தாமே சுமந்து கொண்டு போய்க் குழியில் சேர்த்து விட்டு வெளி முற்றத்தில் கிணற்றின் அருகில் போய் கை கால், சுத்தம் செய்துகொண்டனர். இவர்கள் பந்தலுக்குள் சென்றவுடன் சாப்பிட வேண்டியிருந்த பாக்கித் தொண்டர்களும் இரண்டாவது பந்தி உட்காருவதற்கழைக்கப்பட்டனர். மற்றும் அரைமணி நேரத்தில் அவர்களும் போஜனம் முடித்துக்கொண்டனர். அது சமயம் ஏற்கனவே சாப்பிட்டாயிருந்த தொண்டர்களில் ஒரு சிலர் இளைப்பாற ஆரம்பித்தனர்.

அங்கு ஒதுக்கமாக ஒரு மரத்து நிழலில் ஹிந்தி உபாத் தியாயர் தொண்டர்களை வைத்துக்கொண்டு ஹிந்தி சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். ராஷ்ட்ரீய பாஷையாகப் போகும் ஹிந்தியைப் பிரதி தொண்டரும் அவசியம் கற்றுக் கொள்ள வேண்டும் என்பது பிரயாணத்தின் முக்கிய ஏற் பாடுகளில் ஒன்று. பகலில்போய்த் தங்கக் கூடிய இடங் களில் முதல் சாப்பாட்டிற்குப் பின் 12மணி முதல் 1மணி வரை ஹிந்தி வகுப்புகள் நடத்தப்படுவதென்ற ஏற்பாட்டின் படி திருக்காட்டுப் பள்ளி சிவன் கோவிலில் முதன் முதல் ஆரம்பமாகி நடந்து வந்து கொண்டிருந்தது. ஹிந்தி வகுப்பு கள் முடிந்தபின் மௌனம் ஆரம்பமாயிற்று. அதன் பிறகு பத்திரிகை விஷயம் எடுத்துச் சொல்லப்பட்டது. அத்துடன் அட்டவணை அலுவல்கள் பூர்த்தியாயின. மணி4-30 ஆனதும் போஜனத்திற்கு மணியடிக்கப் பட்டது. தொண்டர்கள் போஜனம் முடித்துக் கொண்டு பிரயாணத்திற்குத் தயாரா யினர்.

புறப்படுவதற்கு முன் அங்கு பந்தலுக்கு வெளியே வெளி யிடத்தில் தொண்டர்களை யெல்லாம் வரிசையாய் நிறுத்தி,

தலைவரும் கட்டிடம் கொடுத்துதவிய அம்மையாரும் அம்மையாருடைய சகோதரரான ஜப்பேசய்யரும் நடுவில் இருந்த வண்ணமாய் ஒரு புகைப்படம் எடுக்கப் பட்டது. பிறகு படையும் மாலை 5மணிக்குப் புறப்பட்டது. அப்போது டிப்டி கலெக்டரும் மற்றும் இரண்டொரு உத்தியோகஸ்தரும் மோட்டாரில் ஏறிக்கொண்டு படைக்கு முன்னால் வெகு வேகமாய் ஓடினர். படைபுறப்பட்டு வருகிறதென்று அடுத்த கிராமங்களுக்குப் போய் எச்சரிக்கை செய்துகொண்டே போகும்படியான உத்தியோகம் அவர்கள் அது சமயம் ஏற்றுக் கொண்டிருந்தார்கள்.

## நடார் நடுக்கம்

அன்றுமாலை போய்த் தங்கக் கூடிய இடம் நடார் என்று பிரயாணக் கிரமத்தில் குறிக்கப்பட்டிருந்தது. மாலை 6மணி சுமாருக்குப் படை ரஸ்தாவோடமைந்த அந்தச் சிற்றூர் சமீபமாய் வந்து கொண்டிருந்தது. இடையில் வெட்டாறு குறுக்கிட்டது. பாலத்தைத் தாண்டி அப்பால் சென்றதும் செங்கல் கட்டிடத்தினால் ஒரு கமான் வளைவு, அங்குதான் அச்சிற்றூர் ஆரம்பமாகிறதென்று குறிப்பிட்டு நின்றது. அதன் வழியாய் ஊருக்குள் புகுந்தத் தொண்டர்படை அங்கு என்ன கண்டது? குடிசைகள் பலவும் செங்கற் கட்டிடங்கள் சிலவும் வாயிற்கதவுகள் தாழிடப்பட்டு தங்கள் எஜமானர்களெல்லாம் சர்க்கார் பயமுறுத்தலுக்குப் பயந்து வெளியே போய் விட்டார்கள் என்று தெரிவித்துக் கொண்டு நின்றன. அங்கே ஒவ்வொரு பெண் பிள்ளைகளும் குழந்தைகளும் காணப்பட்டனர். சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் அந்த வழியாய்ச் சென்றதின் பலன் கல்லுளிச் சித்தன் போனவழி காடுமேடு தவிடுபொடி என்பதுபோல் ஆனது.

தாகத்தால் தவித்திருந்தத் தொண்டர்கள் பக்கத்திலுள்ள வாய்க்கால் குளங்களில் தண்ணீர் மொண்டு அருந்திக் கொண்டே போய்க் கொண்டிருந்தனர். சற்று தூரம் போனபின் ரஸ்தாவில் ஒரு புங்கமரம் நின்றது. அதனருகில் ஒரு

வீட்டு வாயிற்படியில் பெரிய கொப்பரைகளில் நீர் மோர் வைத்துக் கொண்டு சிலர் தொண்டர் படைக்காக எதிர் பார்த்துக் கொண்டிருந்தனர். அங்கு சென்றதும் தொண்டர் படை ரஸ்தாவிலேயே நிறுத்தப்பட்டு ஒவ்வொரு தொண்டரும் தாகசாந்தி செய்து கொண்டனர். அங்கு தண்டாங் கோரையிலிருந்து சிலபிரமுகர்கள் அன்றுதொண்டர்படைக்கு ஜாகை தங்கள் ஊரில் அமைக்கப்பட்டிருக்கிற தென்று அழைக்க வந்துவிட்டனர். நடார் வாசிகளைப் பயமுறுத்தி விட்டதால், இரவு தங்குவதற்கும் ஜாகை யில்லாமல் தொண்டர்கள் தவிக்கப் போகிறுர்கள்; அதைப் பார்த்துக் களிகூறுவோமென்றிருந்த சர்க்காருக்கு இது ஏமாற்றத் தையே விளைவித்தது. படையுடனே சென்று அப்போதைக் கப்போது தடுத்துக் கொண்டே போவதற்கு அவர்களுக்குத் தைரியமும் இல்லை. ஏனென்ருல் ஒன்றுமறியா ஜனங்களைத் தனிமையில் இருக்கும் பொழுது பயமுறுத்தி விடலாம். ஆனால் ஒரு கூட்டமாய்க் கூடி ராஜீய வாதிகளின் முன்னிலை யிலிருக்கும் பொழுது பயமுறுத்துவது ஏளனத்திற்கும் நகைப் பிற்கும் இடமாகுமென்பது அவர்களுக்குத் தெரியும். ஆகையால் ஜில்லா அதிகாரியினுடைய உத்தரவு இந்த விஷயமாக வெகு கண்டிப்பாகவே யிருந்தாலும் நாட்டு ஜனங்களாயிருக்கும் கீழ்உத்தியோகஸ்தர்கள் அவ்வளவு துணிச்சலாய் இந்தக் காரியத்தில் இறங்கும் வழக்கமில்லை யென்பது அங்கு ருசுப்படுத்தியதின் மூலம் எவ்வளவுதான் சம்பளத்திற்காக அடிமை உத்தியோகம் செய்தாலும் தங்கள் உள்ளத்திலும் தேசபக்தி சிறிது ஒட்டிக்கொண்டு தானிருக் கிறது என்பதை மெய்ப்பித்துக் காட்டினுர்களேயொழிய வேறல்ல.

தண்டாங்கோரைப் பக்கமாய்ச் சென்ற தொண்டர் படையை சி. ஐ. டி. உத்தியோகஸ்தர்கள் தொடர்ந்து கொண்டே போயினர். ராஜபாட்டைக்கும் ஊருக்குமிடை யில் வயல் வழியாய் ஒரு சிறு ரஸ்தா போய்க் கொண்டி ருந்தது. அந்தப்பாதை இரு புறங்களிலும் கீரைப் பாத்தி

கள் கொண்டதாய் வளைந்து வளைந்து போய்க் கொண்டிருந்தது. பாதையெல்லாம் கடந்து தொண்டர்படை ஊருக்குள் நுழைந்து பல தெருக்களையும் கடந்து அப்பால் சென்றது. ஊருக்கு வெளியே ஒரு குளக்கரைக்குத் தொண்டர் படை அழைத்துச் செல்லப்பட்டது. அங்கு பெரிய பந்தல் ஒன்று தொண்டர்கள் அன்றிரவு தங்குவதற்காகப் போடப்பட்டிருந்தது. அதில் தொண்டர்கள் கைமுட்டைகளையெல்லாம் வைத்துவிட்டு, கூட்டங்கூடுமிடத்தில் வரிசையாய் உட்கார்ந்து கொண்டனர். நடார்வாசியான வேங்கடராமய்யர் என்பார் நடாரில் செய்வதாக எண்ணியிருந்த வரவேற்பு தடைப்பட்டு விட்டபடியால் அந்த ஏற்பாட்டை யெல்லாம் இங்கு வெகு அவசரமாய்ச் செய்து முடித்திருந்தார்.

நடார்வாசிகள் அன்று சர்க்கார் பயமுறுத்தலுக்குப் பயந்து வெளியே போனவர்கள் எல்லோரும் அங்கே வந்து கூடியிருந்தனர். அந்தக் கூட்டத்திற்கு அந்த ஊர்வாசி வடமொழி வல்லுநரான ஒரு தீட்சதர் அக்கிராசனம் வகித்திருந்தார். அவர் சம்ஸ்கிருத சுலோகங்களால் மங்கள ஆசி கூறி, தலைவரையும் தொண்டர்களையும் வரவேற்றார். தலைவர் எழுந்து பேசியதில், நடாரில் வரவேற்பளிப்பது தவறிவிட்ட சமயம் தண்டாங்கோரை வாசிகள் தங்களை வரவேற்பளித்ததற்காக வந்தனம் செலுத்துவதாகவும், நடார் வரவேற்பளிப்பதை நிறுத்திக் கொண்டது தேச பக்திக் குறைவினாலல்ல வென்பது தமக்கு நன்றாய்த் தெரியுமென்றும், நடார் வாசிகள் அநேகர் கூட்டத்தில் காணப்படுவதால் இந்த வரவேற்பில் நடாரும் கலந்திருக்கிறதென்பது நன்றாய்த் தெரிகிறதென்றும், காற்றுத் தண்ணீர் போல காசு செலவில்லாமல் கிடைக்கக் கூடிய உப்பின் பேரில் வரிவிதித்திருப்பது சீமையிலிருந்துவரும் உப்புக்குக் கிராக்கி உண்டாக்கும் நிமித்தமாகவே என்றும், ஆதியில் மணல் மூட்டையும் கற்களுமாக கப்பல் அடிகனத்திற்காகக் கொண்டு வந்து கொண்டிருந்த பிரிட்டிஷ் வியாபாரிகள் இந்தியாவில் உப்பு ஜாஸ்தி செலவாகிறதென்று கண்டு

பிடித்ததும் வீண் சுமையாக ஏற்றிவரும் கல்மணலுக்குப் பதிலாக எப்படி உப்பை நிரப்பிக் கொண்டு போவது லாபகரமாயிருக்குமென்ற யுக்தியைக் கண்டு பிடித்தார் களென்ற ரகசியமும், அவ்வாறு கொண்டுவந்த உப்பைச் செலவழிக்க வேண்டி இந்தியாவின் உப்பு உற்பத்தியை எப்படி கட்டுப்படுத்தினர்களென்ற விஷயமும் விபரமாய் எடுத்துச் சொல்லி எல்லோரும் இந்தத் தர்ம யுத்தத்தில் தங்களால் இயன்ற உதவியைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு உபன்னியாசத்தை முடித்தார். தலைவர் பேசி முடிந்தவுடன் திருவையாறு சுப்பிரமணிய முதலியார் சிறிது நேரம் பேசி ஜனங்களுக்கு உற்சாகம் ஊட்டினர். கடைசியாக அக்கிராசனர் ரூ.50 அடங்கிய பணமுடிப்பைத் தலைவரிடம் சமர்ப்பித்து அத்துடன் கூட்டத்தை முடித்து விட்டார்.

இடையில் மதுவிலக்குப் பிரசாரப்படங்கள் பந்தல் கால்களோடு கயிறு கட்டி வரிசையாத் தொங்க விடப் பட்டிருந்தன. அவைகளைப் பார்த்துக் கொண்டே ஜனங்கள் கலையாமல் சூழ்ந்து கொண்டிருந்தனர். ஜனங்களுடைய உற்சாகத்தைப் பார்த்து, தலைவர் அங்கு மதுவிலக்குப் பிரசாரம் சிறிது நடத்த வேண்டுமென்று வந்து நின்றார். காந்த விளக்கின் ஒளியில் ஒவ்வொரு படமாய்க் காட்டி மதுவினல் உண்டாகும் கேடுகளைச் செவ்வையாய் விளக்கிக் கொண்டு வந்தார். இவர் செய்த பிரசங்கத்தைக் கேட்டிருந்த கூட்டத்தில் அங்கொருவன் எழுந்து ராஜாஜியோடு தர்க்கம் பண்ண ஆரம்பித்தான். அவன் கள்ளுக் கடையை அந்த வருஷம் குத்தகைக்கு வாங்கியிருந்தான். ஆகையால் இந்தப் பிரசாரத்தினல் தனக்கு வரும் நஷ்டத்தை நினைத்துப் பார்க்கவும் அவனுக்குத் தன்னை யறியாமல் ஆத்திரம் வந்து விட்டது. "குடியைப் பூராவும் விட்டு விடும்படி நீங்கள் சொல்லப்படாது. எங்களை யெல்லாம் என்ன செய்ய உத்தேசித்திருக்கிறீர்கள்? சிறிதும் முன் எச்சரிக்கை இல்லாமல் திடீரென்று இந்த அநியாயம் செய்யப் புறப்பட்டீர்களே" என்று கோபத்தோடு சொல்ல ஆரம்பித்தான்.

தலைவருக்கு இந்த எதிர்ப்பு, ஜனங்களுக்கு விஷயத்தை இன்னும் விளக்கமாய் எடுத்துச் சொல்ல சாதகமாயிற்று. அவர் ஜனங்களைப் பார்த்து, "பார்த்தீர்களா, சகோதரர்களே! நீங்கள் குடித்து உங்கள் கைப்பணத்தையெல்லாம் செலவு செய்தால் அதனால் இந்த கண்டிராக்டரும் இவனுக்குக் கடைவைக்க லைசென்ஸ் கொடுத்திருக்கும் சர்க்காரும் பிரயோஜனம் அடைகிறார்கள். இதற்காகத்தான் இந்தக் கடைக்காரர் குடியாதேயுங்கள் என்று உங்களுக்கு புத்திமதி சொல்ல வந்தால் அது தனக்கு இடையூறாயிருக்கிறதென்று கூசாமல் வாய்விட்டுச் சொல்லுகிறான். நீங்கள் எல்லோரும் குடியை இன்றே விட்டுவிடுவீர்களானால் உங்கள் கைப்பணம் உங்களிடத்திலேயே இருக்கும். இப்பொழுது இருக்கிற நிலைமையில் உங்கள் கைப்பணத்தையெல்லாம் இந்தக் கடைக்காரன் போன்றவர்களும், இவர்கள் மூலமாய்ச் சர்க்காரும் பறித்துக் கொண்டு உங்களை ஏழைகளாக்கி வருகிறார்கள். குடியின் மூலமாய் இந்தச் சர்க்காருக்கு 25 கோடி ரூபாய் வருமானம் வந்துகொண்டிருக்கிறது. ஒரு கோடி என்பது 100 லட்சம் கொண்டதல்லவா? ஒரு லட்சமென்றால் பணமாகக் கொட்டினால் ஒருவீடு நிறைந்து போகுமே. இந்தப்பணமெல்லாம் உங்களிடத்தில் நிற்காதபடி குடியின் மூலமாய் உங்களிடமிருந்து பறிக்கப்படுகிறது. இந்த 25 கோடி ரூபாய் செலுத்துகிறவர்கள் பெரும்பாலும் ஏழைமக்கள்தான். இந்தப்பணம் பூராவும் உங்களிடத்திலேயே நிற்கும்படி செய்துக்கொண்டால், ஒவ்வொருவரும் சுகமாக நிலங்காணி, நகைநாணயம், மாடுகன்று, வீடுவாசல் வைத்துக்கொண்டு வாழலாமே!" என்று இந்த விதமாக விஷயங்களை ஜனங்களுக்கு எடுத்துச் சொல்லிக்கொண்டிருக்கையில், கூட்டத்தில் ஆதித் திராவிடரின் நாட்டாண்மை ஒருவன் எழுந்து ராஜாஜியுடன் சம்பாஷிக்க ஆரம்பித்தான். அவன் விஷயங்கள் சற்று தெரிந்துகொண்டவனாய் குயுத்தியாய்ப் பேசிவந்தான்.

ஆதித் திராவிடன்: ஆமா சாமி! நீங்க சொல்வதெல்லாம் சரிதானுங்க. இந்தக் கிராமணி கடன் போட்டு நம்மைக் கெடுத்துப் புட்டான்சாமி. இந்தப் பயலுவளைக் கடைப்பக்கம் போகாதீங்கடா இன்னு, கேக்கராங்களா! கையிலே காசி கெடச்சா கடைப்பக்கந்தான் ஓட்ராங்களே!

ராஜாஜி: அப்பா நீ யார்? உன் பெயர் என்ன?

ஆதி: என் பேர் காத்தானுங்க இந்தச் சாதிக்கு இப்போ நாட்டாமையா இருக்கேனுங்க.

ராஜாஜி: நல்லது! நாட்டாண்மை சொல்லை எல்லோரும் கேட்கவேண்டுமென்ற கட்டுப்பாடு இல்லையா?

ஆதி: உண்டுங்க சாமி. ஆனா இந்தப்பயலுவ குடிக்கிற வெசயத்திலே கருப்பணசாமி, நேரேவந்து சொன்னாலும் கேட்கமாட்டானுவ சாமி.

ராஜாஜி: நீ குடிக்கிறதுண்டா?

இந்த கேள்விக்கு பதில் சொல்லாது மலைத்து நின்றான். அதற்குள் பக்கத்தில் நின்ற வாலிபன், சாமி இவன் நல்லா மூணு வேளையும் குடிக்கரான் சாமி. இவன் நல்லவனாயிருந்தாத் தானே சாமி இவன் பேச்சை எல்லாம் கேப்பானுவ, என்று அவனுடைய குட்டையெல்லாம் எடுத்துச் சொல்லிவிட்டான். அவனுக்கும் பெரிய அவமானமாய்விட்டது.

நாட்டாண்மை: சாமி இந்தப்பயல்தான் சாமி கெட்ட பயெ. இவென்வளிக்கு வந்துட்டா நம்ம சேரிக்கி அன்னிக்கே நல்லகாலம் பொறந்துடுஞ்சாமி. நீங்கதான் இவெனைத் திருத்தணும்.

ராஜாஜி: என்னடா நீ யோக்கியன் போலச் சொல்லிக் கொண்டாயே.

பையன்: சாமி நானு சொல்பமாத்தான் குடிக்கிறேன். இவெனெப் போல மூனு வேளே குடிக்கமாட்டேன்.

இந்த மாதிரியாகச் சம்பாஷணை தமாஷாகப்போய்க் கொண்டிருந்தது. ராஜாஜி எல்லோரையும் பார்த்து, போனது போகட்டும் இனிமேல் குடிக்காமல் இருப்பீர்களா? என்று கேட்டார். ஒன்று இரண்டு பேர் தவிர மற்றவர் களெல்லோரும் குடிக்கமாட்டோமென்று பதில் அளித்தனர். கருப்பணசாமி அறிய குடிக்கமாட்டீர்களல்லவா என்று பிரமாணப்பூர்வமாகக் கேட்டார். எல்லோரும் குடிப்பதில்லை என்று பிரமாணம் செய்து கொடுத்தார்கள். கடைக்குத்தகை வாங்கியிருந்தவன் ஒருபக்கம், 'வாய்தா முடியுமட்டும் நான் வியாபாரம் செய்து விடுகிறேன். பிறகு இந்த வேலைக்குப் நான் போகவே மாட்டேன். சர்க்காருக்கு நான் ஏற்கனவே பணம் கட்டி ஆய்விட்டது. எனக்குப் பெரிய நஷ்டம் உண்டாய்விடும்' என்று அவனுடைய கஷ்டத்தையெல்லாம் சொல்லிக்கொண்டு நின்றான். அவனை எல்லா ஜனங்களும் சேர்ந்து குடியைக்கெடுத்தவன், மோசக்காரன், படுபாவி இடும்பன் துடும்பன் என்று வாயில் வந்தபடி திட்ட ஆரம்பித் தார்கள்.

இந்த மாதிரி அன்றைய மதுவிலக்குப் பிரசாரம் ஜனங் களிடமிருந்து பிரமாணம் வாங்கப்பட்டு சமாப்தியாயிற்று. படங்களெல்லாம் அவிழ்த்து வைக்கப்பட்டன. இதற்குள் மணி பத்துக்குமேல் ஆய்விட்டபடியால் தொண்டர்கள் பந்த லிலேயே மூட்டைகளைத் தலையணையாக வைத்துக்கொண்டு நித்திரை செய்ய ஆரம்பித்தனர். தலைவர் கட்டிடத்தில் போய் இரவைக்கழித்தார்.

காலை 4 மணிக்கு முன்னதாகவே சங்கூதி மணியடிக்க பட்டது. தொண்டர்களெல்லோரும் எழுந்து காலைக்கடன் களை முடித்துக்கொண்டனர். வாழைப்பழம் இட்டிலி கஞ்சி அங்கு வழங்கப்பட்டன. அரை மணிக்குள் சிற்றுண்டி முடிந்து படை பிரயாணத்திற்குத் தயாராயிற்று. இங்கு ஒரு தொண்டர் நடந்து கொண்டமாதிரி சரியாயில்லையென்று தலைவரால் படையிலிருந்து நீக்கப்பட்டார். ஒவ்வொரு இடத்திலும் பிரார்த்தனை சமயத்தில் ஆஜர்ப்பட்டி அழைக்கப்

பட்டு வந்தது. ஒவ்வொரு பெயரையும் சொல்லிக்கொண்டே போவதால் காலதாமதம் ஆவதை நினைத்துத் தொண்டர்கள் அவரவர் நம்பர்களை சொல்லிவந்தனர். இடையில் ஆட்கள் குறைந்தால் அவர்களுடைய நம்பர்கள் அப்படியே காலியாக விட்டுவைக்கப்பட்டு சொல்லும்பொழுது அதற்குப் பிந்திய நம்பர் உள்ளவன் குறிப்பாக விவரம் சொல்லிக் கொண்டே போகும் முறையில் ஏற்பாடு நடந்து வந்தது. புதிதாக யாராவது படையில் சேர்ந்தால் அவர்களுக்குப் புது நம்பர்களே மேலே கொடுக்கப்பட்டு வந்தன.

## ஐயம்பேட்டை

அன்று காலை சுமார் 5 மணிக்கெல்லாம் தொண்டர்படை அந்த இடத்திலிருந்து புறப்பட்டு சிறிது நேரத்தில் ராஜ பாட்டையை அடைந்தது. ஒரு நாழிகை வழி நடந்ததும் பொழுது புலர்ந்துவிட்டது. பிறகு தேசீயகீதம் துவக்க மாயிற்று. முறைவைத்துச் சொல்லுபவர் ஆரம்பத்தில் ஒருவரே இருந்தார். பின்னல் நன்ருய்ப்பாடக் கூடியவர் களாய்ப்பார்த்து தொண்டர்களிலிருந்து ஏழெட்டுபேர் தேர்ந்தெடுக்கப்பட்டு கஷ்டத்தைப் பங்கிட்டுக் கொள்ளுமாறு ஏற்பாடு செய்யப்பட்டது. அதுபோலவே ஒருவர் விட்டு ஒருவர் பாடிக்கொண்டு உற்சாகத்தோடு நடந்து போயினர்.

காலை 6-30 மணிக்கெல்லாம் ஐயம்பேட்டையை அடைந்து அந்த ஊர் பெருமாள் கோயில் சந்நிதியில்போய் தொண்டர் படை நின்றது. அந்த ஊர் ஜனங்கள் முந்தினநாள் பூராவும் தாலுக்காபோர்டு தேர்தலுக்காக ஓடி ஆடி உழைத்து அலுத்துப்போயிருந்தனர். அந்த அலுப்பினுலும், படை அவ்வளவு சீக்கிரம் தங்கள் ஊருக்கு வரும் என்று சற்றும் எதிர்பார்த்தவர்களன்று ஆதலாலும் அதிகாலையில் எழுந்து வரவேற்புக்காகத்தயாராயிருக்க அவர்களால் கூடாமற் போயிருந்தது. ஆயினும் தொண்டர்படை அங்குபோய்ச் சேர்ந்த நேரத்திற்கே பிரமுகர்கள் அங்கு வந்து சேர்ந்தனர். அந்த ஊர் பிரபல வர்த்தகரும் சௌராஷ்டிரமரபினருமான

அயினு ராஜகோபாலய்யர் முன்னணியில் நின்று தொண்டர் படையை வரவேற்றனர். அந்த இடத்தில் கூட்டம் நடந்தேறியது. சீர்காழி சாமிநாத செட்டியார் அந்தப்பக்கத்தில் பிரசாரம் செய்திருந்தவர் அன்று அந்தக் கூட்டத்திற்கு வந்திருந்தார். அயினு கிருஷ்ணசாமியும் ஷியார் தம்பி கோபால்சாமியும் வரவேற்பளித்து ரூ 145 கொண்ட முடிப்பைத் தலைவர்பால் சமர்ப்பித்தனர். அன்று மாலை இவ்வூர் வாசிகள் தொண்டர்களை மிகவும் சந்தோஷத்துடனும் ஆரவாரத்துடனும் பிரிவு உபசாரஞ்செய்து வழியனுப்பியபோது மேலும் ரூபாய் 60 அளிக்கப்பட்டது. பின்னர் செட்டியார் ரூபாய் 25 பணமுடிப்பும் மரக்குடி ஜனங்களின் பேரால் ரூபாய் 39-4-0 கொண்ட பணமுடிப்பும் கொடுக்கப்பட்டன. அரைமணி நேரத்திற்கெல்லாம் கூட்டம் முடிவடைந்துவிட்டது.

படை அங்கிருந்து புறப்பட்டு, ஆற்றோரமாய் இருந்த ஒரு தென்னந்தோப்பில் போய் இறங்கியது. தொண்டர்கள் மூட்டைகளையெல்லாம் அங்கே வைத்துவிட்டு நீராட ஆற்றுக்குப்போயினர். ஆற்றின் பாதியளவுக்கு நீர் ஓடிக்கொண்டிருந்தது. வேஷ்டி துவைக்கக் கற்கள் காணப்படவில்லை. அந்த ஊரார் ஆற்றுக்கு வருவோர் கையோடு ஒரு பலகைகொண்டுவந்து அதை வைத்துக்கொண்டு ஆடைகளைத் துவைத்துக்கொண்டிருந்தனர். தொண்டர்கள் அவற்றை இரவல் வாங்கிக்கொண்டு தங்கள் ஆடைகளைத் துவைத்துக்கொண்டனர். பலகை கிடைக்காதவர்கள் ஆடைகளை அலசி ஸ்நான ஜோலியை, வெகு சீக்கிரமாக முடித்துக்கொண்டனர். ஒருமணி நேரத்திற்குள்ளாகத் தொண்டர்களெல்லோரும் ஸ்நானம் முடித்துக்கொண்டு ஜாகைக்குத் திரும்பினர். சாப்பாட்டிற்காக ஏற்படுத்தியிருந்த இடம் ஆற்றுப்படுகையை ஒட்டியதாகவே இருந்தது. அன்று வெகு அவசரமாகச் சமையல் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தபடியால் அன்றைய காலைச் சாப்பாடு தயிர்சாதமும் ஊறுகாயோடும் முடிவுபெற்றிருந்தது. என்றாலும் இத்தனை நாளைவிட

அன்றைய போஜனத்தையே தொண்டர்களெல்லோரும் வெகு திருப்தியாக உண்டனர்.

ஜாகை ஏற்படுத்தியிருந்த அந்தத் தோப்பு 40, 50 சதுர கஜ அளவுக்கு கொடி வேலியால் மறைக்கப்பட்ட ஒரு சிறு இடமாயிருந்தது. பூராவும் வளர்ந்து நிமிர்ந்த தென்னை களாகவே பெரும்பாலும் இருந்தன. சூரியன் மேலே ஏற ஏற மரத்தின் நிழலும் இடம் விட்டு இடம் மாறிக் கொண்டே யிருந்தது. தொண்டர்கள் நிழலையொட்டித் தங்கள் படுக்கைகளை நகர்த்திக் கொண்டவர்களாய் இளைப்பாறிக் கொண்டிருந்தனர். ஒதுக்குப் புறமாய்க் கைத்தடிகளைத் தரையில் நட்டு மேலே குவித்த குடிசை போல் செய்து அதன் மேல் துணியை விரித்து சிறு கூடாரமாக்கித் தலைவருக்குப் பிரத்தியேக ஜாகை ஏற்படுத்தப்பட்டிருந் தது. அங்கிருந்துகொண்டு அவர் தக்ளியில் நூற்பதும், பத்திரிகை படிப்பதுமாயிருந்தார். தொண்டர்களில் பெரும் பாலோர், இளைப்பாறி இருந்த சொற்பப் பேரைத் தவிர, இதரர் தக்ளியும் கையுமாகவேயிருந்தனர். அட்டவணைக் கிரமப்படி ஹிந்தி வகுப்புகளும் மதுவிலக்குப் பிரசாரமும் நடந்தன. மௌனவிரதத்தின் போது தலைவரும் வழக்கம் போல் கூடவிருந்து நடத்திவைத்து, அடுத்தாற்போல் பத்திரிகை விஷயம் எடுத்துச் சொல்லும் நேரத்தில், அன்று மிகவும் முக்கியமான விஷயம் பத்திரிகையில் வந்திருக்கிற தென்று தாமே ஹிந்து பத்திரிகையிலிருந்த விஷயங்களைப் படித்துச் சொல்லி வந்தார். இது முடிய பிற்பகல் 3 மணி ஆயிற்று. பின்னும் ஒரு மணி நேரத்திற்கெல்லாம் போஜனத் திற்காக மணி அடிக்கப்பட்டது.

தொண்டர்கள் பாத்திரமும் கையுமாகப் போஜன விடுதிக்குப்புறப்பட்டனர். காலையில் குறைந்த அம்சங்க ளெல்லாம் மாலையில் சரிக்கட்ட வேண்டுமென்ற எண்ணத் தோடு பலவித பதார்த்தம் கறிவகைகளோடு போஜனமளிக் கப்பட்டது. அயினு ராஜகோபாலய்யரும் அவருடைய குமாரர்கள் மூன்று பேரும் சிரமத்தைப் பாராட்டாது,

இந்த ஏற்பாடுகளில் சிரத்தைக் காட்டியவராயிருந்தனர். அறுபதுவயதுக்குமேல்சென்றபெரியவர் ராஜகோபாலய்யர் போஜனமுடித்து வந்த ஒவ்வொரு தொண்டரையும் உட்கார்த்தி உபசரித்துக்கொண்டிருந்தார்.

மாலை 5 மணிக்கெல்லாம் தொண்டர்களெல்லோரும் புறப்படுவதற்குத் தயாராக வெளியே வந்து நின்றனர். ரஸ்தா குறுகியதாயிருந்தபடியால், ஜனக்கூட்டம் முன்னல் வெகுதூரம் வரை நீண்டிருந்தது. நாதசுரம் வாசிக்கும் ஜதையைச் சுற்றிப் படைக்கு முன்னல் ஜனங்கள் பலாப் பழத்தை ஈ மொய்ப்பது போல் குழுமி இருந்தனர். தேசியக் கொடி பிடித்திருந்த ஆனந்த தீர்த்தர் கொடிக்கம்பை இரு கையாலும் தாங்கிய வண்ணமாய்ப் படைக்கு முன்னல் நின்றிருந்தார். 'டங்கா' அறையும் 'கண்பத்' (கணபதி) நாதசுரத் தொனியில் தன்னுடைய டங்கா நாதம் ஒன்றும் கேட்காதென்று நினைத்தவராய் சும்மா கழுத்தில் தொங்க விட்டுக் கொண்டு படைக்கு முன்னல் நின்றார். தலைவர் ராஜாஜி வேர்வைக் கஷ்டத்திற்காகக் கையில்லாச் சட்டையை அணிந்துகொண்டு முதல் வரிசையில் நின்றார். ஸ்ரீ சந்தானம் தாம் எப்பொழுதும் தலைவருக்கு அடுத்தபடியே இருப்பவர் என்று தெரிவிப்பவர்போல் தலைவருக்குப் பக்கத்தில் நின்றி ருந்தார். சங்கு ஊதும் 'சிவகுருநாத்' தனது மெல்லிய உடம்போடு ஆச்சிரம வாசம் செய்யும் பிரம்மச்சாரி காசி யாத்திரை புறப்பட்டக் காட்சியாக நின்றார். திருச்செங்கோடு ஆச்சிரம வாசியான ஸ்ரீ வெங்கட்ராமய்யர் உச்சிச்சிகையும் முழங்காலுக்குமேல் வேஷ்டியும் விளங்க, சிரித்த முகத்தோடு ஆச்சிரமவாசி இருக்க வேண்டிய முறை இது தான் என்று காட்டி நிற்பதுபோல் நின்றிருந்தார். மதுரை ஸ்ரீ ராமாச்சாரி பிரம்மச்சாரியம் சரியான முறையில் காப்பாற்றப்பட்டு கனிவர்க்கங்களாலேயே போஷிக்கப்படும் தம்முடைய சரீரம் கால்நடைப் பிரயாணத்திற்குச் சற்றும் சளைக்காது என்று விளக்கியவராய் நின்றிருந்தார். ஸ்ரீ விஸ்வநாதன் படையிலுள்ள வாலிபர்களிலெல்லாம் வயதில் சிறியவன் தாமே என்று, மூக்குக் கண்ணாடி யணிந்த முகத்தில் புன்னகை

தோன்ற அங்கொரு வரிசையில் நின்ரூர். திண்டுக்கல் ஸ்ரீ மஹாதேவய்யர் ரிஷீஸ்வரர் போன்று தாடி வளர்த்து, ஓலை மடிசன்சியை நன்ருய்க் கயிற்றினல் இறுக்கிக் கட்டித் தடியில் தொங்கவிட்டுக்கொண்டு கால்நடைப் பிரயாணத் திற்குத் தம்மைக் காட்டிலும் பொருத்தமுள்ளவர் வேறெருவருமில்லை என்பதை ருசுபித்து நின்ரூர். தொண்டர் களின் காப்டன் ஸ்ரீ சுப்பிரமணிய ஐயர் பின்னல் இருந்துக் கொண்டு தொண்டர்களையெல்லாம் வரிசையாய் நிற்கும்படி உரத்த குரலில் உத்தரவிட்டுக் கொண்டு தம்முடைய கடமையைச் செலுத்தி நின்ரூர்.

கால் நாழிகைக்குள்ளாக படை அந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டது. அந்த ரஸ்தாவின் கோடியை அடைந்ததும் அங்கு படை சில நிமிஷம் வரை நிறுத்தப்பட்டது. ஸ்ரீ அயினு கோபால்சாமி, அங்கிருந்த ஒரு பிள்ளையார் கோவில் மெத்தையிலிருந்துகொண்டு புகைப்படமொன்று எடுத்துக் கொண்டார். அதன்பின்பு படை அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டது. தேரடித்தெரு வழியாய் வேகமாய் நடந்து கடைத்தெருவில் போயிற்று. அங்கு சற்று நேரம் கடைக் காரர்களின் உபசரிப்புக்காக நின்றிருந்தது. அப்பால் மேல் நோக்கி நடந்தது. வழியில் ரஸ்தாவோடிருந்த அயினு இராஜகோபாலய்யர் வீட்டின் முன்னல் நின்று உபசரிக்கப் பட்டுப் பின்பு நெடுக நடந்து போய்க்கொண்டிருந்தது. சற்று தூரம் போனபின் முசல்மான்கள் வாசம் செய்யும் தெருக்க ளிருந்தன. அவற்றைத் தாண்டியதும் ரயில்வே ஸ்டேஷன் இருந்தது. ஸ்டேஷன் அருகில் ஒரு மரக்கடையில் நடந்த உபசரிப்பை ஏற்றுக் கொண்டு அந்த இடத்தை விட்டு வடகிழக்கு திசையை நோக்கி வழுத்தூருக்குப் போய்க் கொண்டிருந்தது.

## வழுத்தூர்

வயல்களிலும் ஒற்றையடிப் பாதைகளிலுமாகச் சுருக்க மான பாதையைப் பின்பற்றிச் சென்ற தொண்டர்படை

மாலை 6-30 மணிக்குமேல் வழுத்தூரை அடைந்தது. இந்த ஊருக்குள் நுழைவது சோலைக்குள் செல்வதைப் போன்றிருந் தது. எங்கு பார்த்தாலும் பச்சைப்பசேலென்று பார்க்க வெகு ரமணியமா யிருந்தது. நீரோடைகள் அங்கங்கே சல சல வென்ற ஓசையோடு மேட்டிடங்களிலிருந்து பள்ள இடங்களுக்கு ஓடிக்கொண்டிருந்தன. பகல் நேரத்தில் அங்கு தங்கும்படியாய்க் கிடைத்திருந்தால் மிகவும் நன்ருய் இருந்திருக்குமென்று தொண்டர்கள் சொல்லிக்கொண்டு நடந்தனர். சற்று தூரம் போனதும் இடது புறமாய்த் திரும்பி ஆற்றை நோக்கிப் படை நடந்துபோயிற்று. இடை யில் சுமார் ஒரு பர்லாங்கு வரை வயல்களே குறுக்கிட்டன. வயல்களைத் தாண்டியதும் தரைமட்டத்திலிருந்து ஆள் உயரத் திற்கு மேல் நிமிர்ந்திருந்த ஆற்றங்கரையிலேறி தொண்டர் படை ஆற்றுப்படுகையில் இறங்கியது. இந்த ஆறு குட முருட்டி. இறங்கிய இடத்திலிருந்து பெரும்பாகம் மணலாகவே இருந்தது. அதற்கப்பால் சிறிது தூரம் மட்டும் ஜலமோடிக்கொண்டிருந்தது. அந்த ஜலமே இறங்கிய இடத்திலிருந்து சற்று வலது புறமாய் வாய்க்காலாகக் கொண்டுவரப்பட்டு வயல்களுக்குப் பாய்ச்சுவதாயிருந்தது.

இந்த ஆற்றுப்படுகையிலேயே அன்றைய கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீ ஆர். வி. இராஜகோபாலய்யங்கார் ஆகியோர் முன்னணியில் நின்று படையை வரவேற்றனர். பிரார்த்தனைக்குப் பின் தலைவர் எழுந்து அரசாங்க அதிகாரி களைப் பகிஷ்காரம் செய்யவேண்டிய காலம் வந்து விட்ட தென்று கூறினர். தொண்டர்கள் ஆற்றுப்படுகையிலேயே இரவைக் கழிப்பதென்று முடிவாயிற்று. தலைவரும் சில தொண்டர்களும் ஊரார் அழைப்புக்கிணங்க அலவந்தி மஹா தனபுரத்தில் அவர்களால் அளிக்கப்பட்ட ஜாகையில் இரவைக் கழித்தனர். தொண்டர்களில் ஒருவராகிய சென்னை ஸ்ரீ ஓ. பி. ராமசாமி என்பவருக்கு இந்த இடத்தில் ஜுரம் கண்டிருந்தது.

அதிகாலை 4 மணிக்கெல்லாம் தொண்டர்கள் எழுப்பி விடப்பட்டனர். சிற்றுண்டி ஆற்றுப்படுகைக்கே கொண்டு வரப்பட்டது. அங்கிருந்தபடியே தொண்டர்கள் சிற்றுண்டி முடித்துக்கொண்டனர். 5 மணிக்கெல்லாம் படை அங்கிருந்து புறப்பட்டது. ஸ்ரீ ஓ. பி. இராமசாமியும் அவருக்குச் சிகிச்சை செய்வதற்காக மற்றொரு தொண்டர் டாக்டர் சுப்பாராவும், அவ்விடத்திலேயே விடியும்வரை தங்கியிருந்து மோட்டார் பஸ் வைத்துக்கொண்டு நேராகக் கும்பகோணம் போய்ச் சேர்ந்துவிட வேண்டியதென்று தலைவர் சொல்லியதற்கிணங்க அவர்கள் மட்டும் அங்கேயே தங்கிவிட்டனர்.

## பாபநாசம்

அடுத்த தங்குமிடம் பாபநாசத்தைப் படை நெருங்கிக் கொண்டிருந்தது. சாலையின் இரு ஓரங்களிலும் வானுற வோங்கி உயர்ந்த மரங்கள், தொண்டர்படையை வரவேற்பதற்காக ஜோடித்த பந்தலோ எண்ணலாம்படி அடர்த்தியாக எதிர்மரங்களின் கிளைகள் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டு ஆகாயத்தைக் காண முடியாதபடி மறைத்து நின்றன. அடுத்தடுத்து மூங்கிற்காடுகள் வந்துகொண்டேயிருந்தன. ஒரே புதரில் முப்பது, நாற்பது மூங்கில்களும் வளர்ந்திருந்தன. ஒவ்வொரு மூங்கிலும் உயரத்தில் அடுத்துள்ள மரங்களோடு போட்டிபோட்டு நின்றன. காலை 6-30 மணி சுமாருக்குப் படை பண்டாரவாடை என்ற ஊரை அடுத்திருந்தது. இந்த ஊரில் பெரும்பாலோர் முசல்மான்கள். இவர்கள் கூட்டமாய்த் திரண்டு ரஸ்தாவில் வேடிக்கை பார்க்க வந்து நின்றனர். ஐந்து நிமிஷம்வரை படை அங்கு தாமதித்தது. தலைவர் அங்கு கூடியிருந்த முஸ்லீம் மஹா ஜனங்களுக்குச் சிறிது உபன்னியாசத்தை நிகழ்த்தினார். இது முடிந்ததும் படை அந்த இடத்திலிருந்து புறப்பட்டு அரை மணிக்குள்ளாகவே பாபநாசத்தை அடைந்தது. வரவேற்புக்காக அந்த ஊர் பிரமுகர்கள் ஊர்தொடக்கத்தில் நின்றிருந்தனர். அங்கு ஊத்துக்காடு மஹாஜனங்களின்

சார்பாகச் சென்னை வழக்கறிஞர் ஸ்ரீமான் நாராயணசாமி ஐயர் ஸ்ரீ ஆச்சாரியார்க்கு பூமாலை சூட்டினார். அவர்களைத் தொடர்ந்து தொண்டர்படை ஆற்றுப்பக்கமாய்ச் சென்ற ரஸ்தாவில் அமைந்திருந்த தென்னந்தோப்பில் இறங்கியது. அந்த இடத்தில் சமையலுக்காகவும், உட்கார்ந்து சாப்பிடு வதற்காகவும் சிறிது தூரத்திற்கு மட்டும் பந்தல் போடப் பட்டிருந்தது. மற்ற இடம் பூராவும் வெளியாகவே கிடந் தது. கைமுட்டைகளையும் கழிகளையும் தொண்டர்கள் வெளி யிடத்தில் வைத்துவிட்டு வெளியே ரஸ்தாவில் கூடியிருந்த கூட்டத்தில் வந்து உட்கார்ந்தனர். அங்கு பிரார்த்தனைக்குப் பின் தலைவர் பேசினார்.

கூட்டத்தில் உண்டியல்மூலம் பணம் வசூல் செய்யப் பட்டது. திருக்கருகாவூர் ஜனங்கள் சார்பாக ரூ. 251 அடங்கிய பண முடிப்பு அளிக்கப்பட்டது. குடமுருட்டி ஆறு ஜாகையிலிருந்து அரைபர்லாங்கு தூரத்திலிருந்தது. தெளிவான தண்ணீர் ஆற்றின் சிறிது அளவுக்கு ஓடிக் கொண்டிருந்தது. கூட்டம் முடிந்ததும் தொண்டர்களெல் லோரும் ஸ்நானம் முடித்துக் கொண்டவராய் ஜாகைக்குத் திரும்பிக்கொண்டிருந்தனர். அது சமயம் காலை 10-30 மணி ஆயிருந்தபடியால் முதல் பந்தியில் உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்தனர். காய்கறிகள் பரிமாறிய இலைகள் சில காலியாயிருந்தன. தொண்டர்கள் சிறுகச்சிறுக அவற்றை நிரப்பிக் கொண்டிருந்தனர். ஜாஸ்தி தாமத மாகி வந்தவர்கள் அடுத்தப் பந்தியில் உட்காரவேண்டி யிருந்தது. அவ்வளவு நேரம் கழித்து வந்ததற்காக அவர் கள் கண்டிக்கப்பட்டனர். வேண்டுமெனத் தாமதித்து வந்தோருக்கு இது அவ்வளவு பிரமாதமாகத் தோன்ற வில்லை. ஆனால் சிலர் ஆற்றுக்குப் போனதே வெகு நேரம் கழித்துப் போனார்கள். எவ்வளவு அவசரமாய் ஸ்நானம் முடித்து வந்தாலும் அவர்களைக் காட்டிலும் சீக்கிரமாக எவராலும் வந்திருக்க முடியாது. அவர் களுக்கு இந்தவிதமாய் காப்டனால் கண்டிக்கப்பட்டது மனதை மிகவும் புண்படுத்திவிட்டது.

அன்று அவ்வளவு தாமசம் ஆனது போல் காணப் பட்டாலும் 11 மணிக்கெல்லாம் சாப்பாட்டு ஜோலி முடிந்துவிட்டது. தொண்டர்கள் மரத்தடியில் அங்கங்கே கும்பலாய் உட்கார்ந்து தக்ளியில் நூற்பதும், பத்திரிகை வாசிப்பதும் இளைப்பாறுவதுமாயிருந்தனர். தலைவருக் காகச் சிறு கூடாரம் அடித்திருந்தது. அதில் உட்கார்ந்து அவர் நூல் நூற்றுக் கொண்டும், பத்திரிகை படித்துக் கொண்டுமிருந்தார். அந்த ஊர்வாசிகள் கண்காட்சிச் சாலையைச் சுற்றிப் பார்ப்பதுபோலத் தோப்பில் வந்து சுற்றிப் பார்த்துக்கொண்டிருந்தனர்.

இந்த இடத்தில் பிற்பகல் 2 மணி சுமாருக்கு இருந்தாற் போலிருந்து மழை தூற ஆரம்பித்தது. வெளியே கிடந்த சாமான்களையெல்லாம் வெகு பரபரப்பாய்த் தொண்டர் கள் எடுத்துப் பந்தலில் கொண்டுவந்து வைத்தனர். மழை தொடர்ந்து பெய்திருந்தால் அன்று தொண்டர்கள் வெகு சிரமப்பட வேண்டி யிருந்திருக்கும். அடுத்தாற்போல் கட்டிடங்கள் ஒன்றும் கிடையா. என்ன மழை பெய்தாலும் அந்தப் பந்தலுக்குள் தான் ஒட்டிக் கொண்டிருக்க வேண்டும். வேறு விதியில்லை. ஆனால் சற்று நேரத்தில் தூறல் நின்று விட்டது.

அதுவரை நடந்தேறி வந்த பிரயாணத்தில் காப்டன் நடத்தி வந்த அமுல் முறைகள் சில தொண்டர்களுக்குப் பிடிக்காமல் சில்லறை மனஸ்தாப மொன்று புகைந்து கொண்டே யிருந்தது. இதைப்பற்றி புகார்கள் அடிக்கடி தலைவர் காதுக்கு எட்டிக் கொண்டே யிருந்தன, இதை ஒரு விதமாய் ஒழுங்கு பண்ணு விடில் புரையாய் வளர்ந்து விடு மென்று நினைத்துத் தலைவர் அடுத்தாற்போல் அந்த விஷயத்தை எடுத்துக் கொண்டார். அவர் இங்கு அனுசரித்த முறை இப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களில் தலைமை வகிப்பவருக்கு ஓர் உதாரணமாயிருக்குமென்ற எண்ணத்தால் அதை இங்கே குறிப்பிடுகிறோம். முதலில் அவர் இந்த காப்டன் கூடாது என்பவர்கள் கை உயர்த்த

லாமென்ருர். சிலர் கை உயர்த்தினர். அப்போது அவர் காப்டனைப் பார்த்து, "பார்த்தீர்களா! நீங்கள் பார்க்கும் வேலையைக் கண்டு திருப்தி படாதவர்களும் இருக்கிருர்கள். ஆகையால் இனிமேல் நீங்கள் எல்லோருக்கும் திருப்தி ஏற்படும் முறையில் நடந்து கொள்ள வேண்டும்". என்று சொன்ஞர். அடுத்தாற்போல் தொண்டர்களைப் பார்த்து காப்டன் பேரில் அதிருப்தி ஏற்படுவதற்குச் சகஜமாய் உண்டாகக் கூடிய காரணங்களை சூசனையாய் எடுத்துச் சொன்ஞர். முக்கியமானது அவற்றில் என்னவென்ருல் ஒவ்வொரு தொண்டரும் காப்டன் தன்னை விசேஷமாய்க் கவனிப்பதில்லையென்றும் மற்றவர்களைய்ய கவனித்துக் கொள்ளுகிருர் என்றும் நினைக்கலாம். ஆனுல் மற்றவர்கள் அவருக்கு நிரம்பவும் பழக்கமானவர்களும் சட்டென்று பேர் ஞாபகத்தில் வரக் கூடியதாயிருப்பதுமே அதற்குக் காரணமென்றும், இதனுல் தங்களைக் கவனிக்காமல் இருப்பதாக நினைத்துக் கொள்ளக் கூடாதென்றும் எடுத்துக்காட்டி, இனி அவ்வாறு நடக்காதபடி கூடியமட்டில் ஜாக்கிரதையாகவே அவரும் இருந்து வருவாரென்றும் சொல்லி அதோடு அந்த விஷயத்தைச் சமாப்தி பண்ணிஞர். இதற்குள் 4 மணியாயிற்று மாலை போஜனத்திற்கு மணியடித்தது. தொண்டர்களெல்லோரும் ஒரு மணி நேரத்திற்குள்ளாகச் சாப்பாட்டு ஜோலியை முடித்துக் கொண்டு தொண்டர்களின் தொகை சரிபார்க்கப்பட்டதும் படை அந்த இடத்தை விட்டு புறப்பட்டது. அப்போது வெளியே கூடியிருந்த மஹா ஜனக் கூட்டத்தில் அங்கு வந்திருந்த தென்ஞர்க்காடு ஜில்லாவைச் சேர்ந்த ஸ்ரீ எஸ். எ. தேவநாயகய்யா பேசிக்கொண்டிருந்தார். தொண்டர்படை அதன் பிரயாணத்திலேயே கண்ணுங் கருத்துமாய் கடிகைக் கொவ்வொரு அடி என்ற கணக்கில் நிற்காமல் நடந்து போய்க்கொண்டிருந்தது. சாலையில் இரு ஓரங்களிலும் ஓங்கி உயர்ந்த மரங்களின் நேர்மையால் சுந்தரச் சோலையின் காட்சியைப் படைத்த அந்தப் பாதையில், வெயிலும் வெப்பமும் தணிந்த அந்த மாலை நேரத்தில் தேசீயக் கொடியும் டங்கா நாதமும் வழிகாட்டிச் செல்ல கல்லூரை நோக்கி படை சென்றுக் கொண்டிருந்தது.

## நல்லூர்

மாலை 6-30 மணி சுமாருக்குத் தொண்டர்கள் நல்லூரை நெருங்கி விட்டனர். அப்பொழுது இராஜ பாட்டையிலிருந்து ஒரு சிறு ரஸ்தா ஊர்ப்பக்கமாய்த் திரும்பியது. அதன் வழியாய் ஒரு பர்லாங்கு தூரம் நடந்து நல்லூரில் பிரவேசித்தனர். அந்த ஊரில் கலியாண சுந்தரேஸ்வரர் ஆலயமும் அதற்கு முன்னால் ஒரு திருக்குளமும் உண்டு. அந்த கோயிலுக்கு முன்பாக அன்றைய கூட்டம் நடைபெற்றது.

கூட்டம் முடிந்தவுடன் தொண்டர்கள் ஊர்ப் பொது சத்திரத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அங்கு சாமான்களை யெல்லாம் வைத்து விட்டு வெளியே சென்று அரைமணி ஒருமணி நேரத்திற் குள்ளாக எல்லோரும் திரும்பி வந்தனர். அந்தச் சத்திரம் பெரிய காரைக்கட்டு மெத்தைக்கட்டிடம். கீழே பெரிய ஹால் இருந்தது. அதில் 200, 300 பேர் படுக்கக்கூடிய இடம் மிகவும் விஸ்தாரமாயிருந்தது. அங்குதான் பெரும்பாலோர் படுத்துக்கொண்டனர். தலைவரும் அவருடன் சில தொண்டர்களும் மேல் மெத்தையில் போய்ப் படுத்திருந்தனர்.

பிரயாணத்தில் தொண்டர்களுக்கெல்லாம் வேண்டிய தக்ளியை மூங்கில்குச்சி, பல்பத்துண்டுகளைக்கொண்டு செய்துகொடுத்து வந்த ஸ்ரீமான் கிருஷ்ணமூர்த்தி ஐயருக்குச் சொந்த ஊராயிருந்த அந்த ஊர் தேசபக்தியில் ஒன்றும் பின்னடைந்ததாகக் காணப்படவில்லை. வரவேற்பு ஏற்பாடுகளில் வக்கீல்களும் மற்றையோரும் கலந்துக்கொண்டிருந்தனர். கூட்டத்தின்போது சத்தியானுசாரம் சத்தியாக்கிரக நிதிக்கு சிறுதொகையும் அந்த ஊரார் சமர்ப்பித்தார்கள். முன்னணியில் நின்று வரவேற்ற பிரமுகர்கள் ஸ்ரீமான்கள் கலியாணசுந்தரத்தென்கொண்டார், இராமநாதய்யர், ரெங்கநாதபுரம் இராஜகோபாலய்யர் முதலியோர் ஆவர்.

காலை 4 மணிக்கு முன்னதாகவே தொண்டர்கள் எழுப்பி விடப்பட்டனர். காலைக்கடன்களை முடித்துக்கொண்டு அங்கு வழங்கப்பட்ட சிற்றுண்டி அருந்தி முடிந்ததும், தொண்டர் படை புறப்படலாயிற்று.

ஊரைக்கடந்து ராஜபாட்டைக்கு வந்து கும்ப கோணத்தை நோக்கி தொண்டர்படை நடந்து போயிற்று. பாதையின் இரண்டு பக்கங்களிலும் மூங்கிற்காடுகளே நெடுக இருந்தன. புறப்பட்ட அரை நாழிகைக் கெல்லாம் பொழுது புலர்ந்துவிட்டது. அப்பொழுது படை குடமுருட்டி ஆற்றுச் சமீபம் வந்துக்கொண்டிருந்தது. அதன் பாலத்தைத் தாண்டி அப்பால் இரண்டு பர்லாங்கு தூரம் போனதும் முடிகொண் டான் ஆறு குறுக்கிட்டது. அதிலிருந்து ஒரு பர்லாங்கு தூரத்தில் திருமலைராஜன் ஆறு குறுக்கிட்டது.

அடுத்துள்ள ரயில்பாதையில் புகைவண்டி ஓடிவருவது அருகருகே தென்பட்டது. இடைவழியில் ஓர் இடத்தில் ஐந்தாறு இரட்டைமாட்டு வண்டிகள் அவிழ்த்துப்போட் டிருந்தன. அவற்றில் பிரயாணஞ்செய்திருந்த ஆண் பெண் குழந்தைகள் கூடி எங்கேயோ யாத்திரை போய்க் கொண் டிருந்தவர்கள் அந்த இடத்தில் காலைக்கடனை முடித்துக் கொள்ள இறங்கி இருந்தனர். ஆடவர்களெல்லோரும் தலையை மொட்டையடித்துக்கொண்டிருந்தபடியால் ஏதோ பிரார்த்தனைப்படி முடி இறக்கிக் கொடுத்துவிட்டு வருவோ ராய் இருக்கலாம்போல் தோன்றியது. தொண்டர்படையும் அவர்களைத் தாண்டி அப்பால் சென்றுகொண்டிருந்தது.

## கும்பகோணம்

காலை 6-30 மணி சுமாருக்குத் தொண்டர்படை கும்ப கோணத்தின் உபநகரமாகிய தாராசுரத்தையடைந்தது. புராதனமான கட்டிடங்கள் சில அந்த ஊரை அலங்கரித்துக் கொண்டும் பழையகாலத்துச் சிற்பிகளின் கைத்திறமையை நினைப்பூட்டிக்கொண்டும் நின்றன. அந்த ஊர்வாசிகள்

மேளதாளங்களோடு வரவேற்புக்காகத் தயாராயிருந்தனர். பால்மணம் மாருத மிகமிகச் சிறு குழந்தைகளும் கையில் சிறுசிறு தேசீய ஜண்டாக்களைப் பிடித்துக்கொண்டு ஜெய கோஷம் செய்து வரவேற்றது விசேஷமாய் விளங்கியது. அங்கு படை சிறிதுநேரம் நிறுத்தப்பட்டு உபசரிப்பு நடந்தேறியபின் பெருந்திரளான ஜனங்கள் புடைசூழத் தொண்டர்படை கும்பகோணம் நகரை நோக்கிச் செல்ல ஆரம்பித்தது.

வழியில் அரசலாறு குறுக்கிட்டது. முனிசிபாலிட்டியார் தெருவெங்கும் நீர்தெளித்துத் தூசி மேலே கிளம்பாதபடி சிறந்த ஏற்பாடுகள் செய்திருந்தனர். சற்றுதூரம் சென்று தொண்டர்படை இடதுபக்கமாய் திரும்பிக் கும்பேஸ்வரர் கோவிலுக்குப்போகும் ரஸ்தாவில் சென்றது. இடையிலுள்ள ஷாப்புக்கடை, பூக்கடை, சந்தனக்கடை, பலசரக்குக்கடை முதலிய இடங்களிலெல்லாம் உபசரிப்பு நடந்தேறிய பின் மேலே நோக்கி நடந்து வலதுபுறமாய்த் திரும்பி கும்பேஸ்வரர் சந்நதி வழியாய்ச் சென்று மடத்து ரஸ்தாவை அடைந்து மீண்டும் இடது புறமாய்த் திரும்பி மேல்நோக்கிச் சென்றது. இரண்டு பர்லாங்குக்கப்பால் பந்துலு ஐயர் வீடு இருந்தது அந்த ஊர் டிபுடி கலெக்டரும் போலீசாரும் எல்லோரையும் பயமுறுத்தியதுபோல் அவரையும் பயமுறுத்தி, இந்த ஏற்பாடுகள் செய்யாதிருக்கப் பிரயத்தனம் செய்தும், அவருடைய தேசபக்தியின் வேகம் ஒன்றையும் பொருட்படுத்தாமல் தீரத்தோடு வந்தத் துன்பத்தை அனுபவிக்கிறேன்; தேசத்திற்காக இந்தக் கைங்கரியமும் செய்யாமல் இருப்பதா என்ற ஆவேசத்தை உண்டாக்கியிருந்தது.

அந்த வீட்டின் முன்னல் சிறிதுநேரம் நின்றிருந்து, தொண்டர் படை அங்கிருந்து சுமார் ஒரு பர்லாங்கு தூரத்திலிருந்த ஆற்றங்கரை மண்டபத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டது. இந்த ஆறு காவிரி ஆறு. ஆனல் தண்ணீர் ஒரு

சொட்டுக்கூட காணப்படவில்லை. ஆற்றில் அங்கங்கே கிணறுகளும் ஊற்றுக்குழிகளும் வெட்டப் பட்டிருந்தன. அவைகளிலிருந்து நீர் இறைத்துத் தொண்டர்களில் பெரும் பாலோர் ஸ்நானத்தை முடித்துக் கொண்டனர். சிலர் நகரின் பிறபாகங்களில் உள்ள குளம் குட்டைகளுக்குப் போய் ஸ்நானம் முடித்துக் கொண்டனர். சிலர் பந்துலு ஐயரால் ஏற்படுத்தப்பட்டிருந்த ஒரு விடுதிக்குப் போய் ஸ்நானம் முடித்துக் கொண்டனர். சிலர் அங்கு க்ஷவர ஜோலி முடித்துக் கொண்டனர். மதுரை என். எம். கிருஷ்ணமாச்சாரியும், சீர்காழி சாமிநாத செட்டியாரும் பந்துலு ஐயருக்குத் துணையாக இருந்து அங்கு நடந்த ஏற்பாடுகளின் சிரமத்தில் பங்கெடுத்துக்கொண்டிருந் தனர். அன்று ஞாயிற்றுக்கிழமையாகையால் அ. வைத்தியனாதய்யர் மதுரையிலிருந்து மீண்டுமொருமுறை தொண்டர்களையும் தலைவரையும் கண்டு பேசவேண்டுமென்று வந்திருந்தார். கூட மதுரை மௌலானா சாஹிபும் இராஜபாளையத்திலிருந்து பி. எஸ். குமாரசாமி ராஜாவும் அந்த இடத்திற்கு வந்திருந்தனர்.

அன்று காலை போஜனம் பந்துலு ஐயர் கிருஹத்திலேயே அறுசுவைகளோடு படைக்கப் பட்டது. கட்டிடம் பெரிய தாகவே இருந்ததால், முற்றம், நடை, தாழ்வாரம், கூடம், சமையல் அறை என்று ஓர் இடம் பாக்கியில்லாமல் இலை கள் போடப்பட்டிருந்தன. வாழைப்பழத்தில் மட்டும் மூன்று தினுசுகள். மொந்தை, ரஸ்தாளி, மலைவாழை போஜனத் தின்போது படைக்கப் பட்டன. பாயசம் பரமான்னத் தோடு அன்றைய காலை விருந்து அமைதியாக நடந்தேறியது. தலைவருக்கு அந்தக் கட்டிடத்திலேயே மேல் மெத்தையில் ஜாகை ஏற்படுத்தியிருந்த படியால் அவர் அங்கேயே தங்கியிருந்து, தம்மைக் காணவந்த வெளியூர் உள்ளூர் வாசிகளோடு அளவளாவி இருந்தார். வழுத்தூரில் ஜுரம் கண்ட ஓ. பி. ராமசுவாமியும் டாக்டர் சுப்பாராவும் அங்கு வந்து சேர்ந்திருந்தனர். பகல் 12மணிக்குமேல் சில

தொண்டர்கள் மதுவிலக்குப் பிரசாரத்திற்காக ஆற்றுக்கு அக்கரையிலிருந்த பறைச்சேரிக்கு அழைத்துச் செல்லபட்ட னர். இரண்டு மணி நேரம்வரை அங்கு பிரசாரமும் தெருப் பெருக்கு வேலையும் நடந்து அப்பால் அந்தத் தொண்டர்கள் திரும்பி வந்தனர்.

மாலை 4 மணிக்கு முன்னதாகவே இரண்டாவது வேளைச் சாப்பாட்டிற்கு மணியும் அடித்துவிட்டது. அவ்வளவு சீக்கிரம் சாப்பாட்டிற்கு ஏன் அழைக்கிறார்கள்; காலையில் சாப்பிட்டது இன்னும் சரியாக ஜீரணமாக வில்லையே; இங்கு இரவு தங்கத்தானே போகிறோம்; சாப்பாடு சற்று தாமதமாய்ச் சாப்பிட ஏற்பாடு செய்திருந்தால் நல்லதா யிற்றே என்று தொண்டர்கள் ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டிருந்தனர். அதற்குள், சாப்பிட்டானதும் தொண்டர் கள் ஊர்வலம் போக வேண்டுமாம்; ஆகையால் சீக்கிரம் சாப்பிடப் போங்கள் என்று உத்தரவு இடப்பட்டது. அப்படியே தொண்டர்கள் சென்று சாப்பாட்டு வேலையை முடித்தனர். காலையில் பூராவும் நீர்தெளித்த ரஸ்தாக்களில் நடந்து வந்ததினால் சில தொண்டர்கள் கால்வலியோடிருந் தனர். என்றாலும் ஊரைச்சுற்றிப் பார்க்க வேண்டுமென்ற ஆவலினால் அவர்களும் பாதி மனதோடு படையில் வந்து கலந்து கொண்டனர். அங்கிருந்து கும்பேஸ்வரர் சந்நிதி வழியாய்ச் சென்று நகரிலுள்ள பல தெருக்கள் வழியாகப் படை ஊர்வலமாக ஒருமணி நேரம் வரைச் சுற்றிவிட்டுக் கடைசியாக மாலை 6மணிக்கு டவுன்ஹாலை அடுத்திருந்த காந்தி சதுக்கத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டது.

## எதிர்ப்பிரசார ஐந்தாம்படை

இந்தக் கூட்டத்தில் எதிர்ப் பிரசாரக் கோஷ்டியார் ஐந்தாறு பேர் கொண்ட ஒரு சிறு கூட்டம் ஒரு துண்டுப் பிரசுரத்தை அச்சடித்துக் கொண்டு அன்று பொழுது பூரா வும் ஊரெங்கும் கொடுத்ததுபோகப் பாக்கியிருந்ததை அந்தக் கூட்டத்தில் வழங்கிக் கொண்டிருந்தது. அதில்

தலைவரைப் பலவிதக் கேள்விகள் கேட்டிருந்தார்கள். அவர்களுடைய நோக்கமெல்லாம் கூட்டத்தில் பெருங்கலகமும் அடிதடியும் உண்டாக்கி, சர்க்காருடைய நன்மதிப்பைச் சம்பாதிக்க வேண்டுமென்றெண்ணியுள்ள எதிர்க்கட்சித் தலைவர்களுக்குத் துணை செய்வதின் மூலமாய்த் தாமும் சில்லறை பிரயோஜனம் அடையவேண்டுமென்பதே. கூட்டத்திற்கு ஸ்ரீமான் பந்துலு ஐயர் தலைமை வகித்தார். ஸ்ரீமான் சக்கரவர்த்தி ஐயங்கார் பொது ஜனங்கள் சார்பாக ஓர் அச்சடித்த உபசாரப்பத்திரம் வாசித்துக் கொடுத்தார்.

தலைவரின் உபந்யாசம் முடிந்ததும், தஞ்சையிலும் அந்த இடத்திலும் நிதிக்காக வழங்கப்பட்ட கடிகாரம், மோதிரம், பவுண்டன்பேனா முதலிய சாமான்கள் ஏலம் போடவேண்டியிருந்தன. கூட்டத்தில் இருந்த இரைச்சலை சமாளிக்கக் கோடையிடி வி. மகாலிங்கய்யர் தொண்டை கிழிய உரக்கக் கூறி ஒவ்வொரு பொருளாய் ஏலம் போட்டு வந்தார். ஏலக்கடைகளில் ஏலம் போடும் பாவனையாகவே அவர் கூட்டத்திலுள்ளோரைக் கொல்லென்று சிரிக்கச்செய்து சிறிது நேரம் தமாஷ் நாடகத்தோடு காரிய நாடகமும் ஆடிமுடித்தார். தவிர உண்டி வசூலாகத் தொண்டர்கள் குல்லாய்களை ஏந்திக்கொண்டு செய்துவந்ததொகை பெருந்தொகையாகக் கூடிற்று.

இது நடந்து கொண்டிருக்கையில் கலகத்திற்கெனக் கங்கணங்கட்டியிருந்தவர்களில் ஒருவன் எழுந்து, தலைவரைத் தங்கள் பிரசுரத்தில் கண்ட கேள்விகளுக்குப் பதிலளிக்க வேண்டுமென்று கேட்க ஆரம்பித்தான். அப்பொழுது அங்கு அமைதி குலைந்து கூச்சலும் கும்மாளமும் குடிபுகுந்தன. மூலைக்கொருவர் எழுந்திருக்கத்தலைப்பட்டனர். தள்ளிக் கொண்டுபோ என்பாரும், அடித்துத்துரத்து என்பாரும், எட்டி உதை என்பாரும், மிதித்துத் தள்ளு என்பாரும், கழுத்தைப்பிடித்து நெட்டு என்பாரும் கல்தாக் கொடு என்பாரும் இந்த விதமாகப் பலவிதமாக மரியாதை வசை மாலைகள் அவனுக்குச்சமர்ப்பிக்கப்பட்டன. இதைப்பார்த்த

தலைவருக்குக் கூட்டம் எங்கே குழப்பத்தில் முடிந்து விடுமோ என்று தோன்றியது. மெதுவாகக் கையமர்த்தி எல்லோரையும் உட்கார்ந்து கொள்ளும்படிக் கேட்டுக்கொண்டார். தொண்டர்களை யெல்லாம் மூலைக்கொருவராய்ப்போய்ப் பந்தோபஸ்து செய்யச்சொல்லிக் காப்டனுக்கு உத்தரவு கொடுத்தார். பிறகு தலைவர் கேள்விகேட்டவனைப்பார்த்து அக்கேள்விகளில் ஜவாப்பளிக்கக்கூடியது ஒன்றேனும் இல்லையென்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லிவிட்டு அமர்ந்து விட்டார். பிறகும் அவன் தலைவரை வாயில் வந்தபடியெல்லாம், வைதுகொண்டு நின்றான். அருகிலிருந்த ஜனங்கள் சகிக்கமாட்டாமல் அவனை இழுத்து வெளியே கொண்டுபோய்ச்சேர்த்தனர். அவன் கோஷ்டியாரும் ஜனங்களுக்கிருந்த கட்டுப்பாட்டைப் பார்த்து மூலைக்கொருவராய் மெதுவாய் நழுவிவிட்டனர்.

இதன் பின்பு அந்நிய நாட்டுத்துணிகள் எரிக்கப்பட்டன. மேல் சட்டையையும் அங்கவஸ்திரத்தையும் அலட்சியமாய் ஒவ்வொருவரும் வீசியெறிந்தனர். ஜரிகை போட்ட அங்கவஸ்திரங்களும் வேஷ்டிகளும் அக்கினி பகவானுக்கு ஆகுதி கொடுக்க வந்து சேர்ந்தன. கூட்டத்தின் நடுவில் மேடை போட்டிருந்த இடத்திற்கு முன்னால் நெருப்பு ஜுவாலை மூண்டெழுந்து ஜனங்களை எட்டத்தள்ளிக்கொண்டே இருந்தது. சுற்றிலும் இருந்த ஜனங்கள் நெருப்புக் கொளுத்துவதைப்பார்க்கவேண்டுமென்று நெருப்புப்பக்கமாய்த்தள்ளிக் கொண்டிருந்தனர். இந்த இடைஞ்சலில் யாரேனும் நெருப்பில் விழுந்துவிடப் போகிறார்களே என்று, தொண்டர்கள் தடிகளைக்குறுக்கில் பிடித்துக்கொண்டு கூட்டத்தை வெளிப்புறமாகத்தள்ளி வேலி போட்டது போல் காத்திருந்தனர்.

இந்த சமயத்தில் தலைவர் எல்லோரையும் கலைந்து போகும்படி எவ்வளவோ கேட்டுக்கொண்டும் கூட்டம் குறைந்தபாடில்லாமலிருந்தது. தாம் இருக்குமட்டும் அவர்கள் கலையமாட்டார்கள் என்று எண்ணியவராய்த் தலைவர் தாமே வெளியில் செல்லப் புறப்பட்டார். சில தொண்டர்கள்

அவரோடு கூடச்சென்றனர். கூட்டத்திற்பாதி அவரைத் தொடர்ந்து போகவே கூட்டம் பெரும்பாலும் குறைந்தது போலாய்விட்டது. பாக்கியிருந்தக் கூட்டம் ஒருவரையொருவர் தள்ளிக்கொள்ளும் அவசியம் இன்றி சொச்சம் எரிந்து முடிந்ததும் தானே கலைந்து போயிற்று. கூட்டம் கலையவும், சொக்கப்பனையும் அவிந்து போகவே, பாக்கித் தொண்டர்கள் பந்துலு ஐயர் வீட்டிற்குத் திரும்பினர். அன்று அவர்கள் ரொம்பவும் களைப்படைந்திருந்தபடியால் கூட்டத்திலிருந்து வந்ததும் நித்திரா தேவியின் வயப்பட்டனர்.

மறுநாள் கருக்கலில் வழக்கம்போலத் தொண்டர்கள் எழுந்து காலைக்கடனை முடித்துக்கொண்டு, பிரார்த்தனை செய்தனர். சிற்றுண்டி அருந்தியதும் தொண்டர்படை ரயில்வேஸ்டேஷன் சமீபமுள்ள அரசலாற்று மணலில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பொதுக் கூட்டத்தில் கலந்து கொள்ளக் கிளம்பியது. கடலங்குடி ரஸ்தாவில் வேறொரு இடத்தில் அன்று போஜனத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததென்று தெரிவிக்கப்பட்டிருந்தபடியால், தொண்டர்கள் மீண்டும் பழைய ஜாகைக்கு வரவேண்டிய அவசியமில்லையென்று மூட்டைகளையுங்கூட எடுத்துக்கொண்டு புறப்பட்டனர். புறப்பட்டு தெற்குமுகமாய் நடந்து கும்பேஸ்வரர் ஆலயச்சந்நதியில் புகுந்து அங்கு ஓரிடத்தில் உபசரிக்கப்பட்டு அப்பால் பல தெருக்களின் வழியாய் அரசலாற்றுப் பக்கம் போய்க்கொண்டிருந்தனர். தலைவருக்கு வேறு அலுவல்கள் இருந்தபடியால் கூட்டத்திற்கே நேராக வந்துவிடுவதென்று பின்னால் தங்கி விட்டார். அதிகாலையானபடியால் கூட்டம் முந்தின நாள் இருந்தது போல் அவ்வளவு ஜாஸ்தியில்லாதிருந்தது. தொண்டர்கள் போய்ச் சேர்ந்த 5 நிமிஷத்திற்கெல்லாம் தலைவரும் வந்து சேர்ந்தார். பிரார்த்தனைக்குப் பின் மதுரை என். எம். கிருஷ்ணமாச்சாரி, மௌலானா சாஹிப் முதலியோர் முன்னால் சிறிது நேரம் முறையே சௌராஷ்டிர பாஷையிலும், தமிழிலும் உபந்நியாசம் நிகழ்த்தினார்கள். அதன் பின் ராஜாஜி பேசினார்.

காலை 9 மணிக்கு முன்னதாகக் கூட்டம் முடிந்து படை அவ்விடமிருந்து புறப்பட்டு கடலங்குடி ரஸ்தாவில் கீழண்டை முக்கில் இருந்த கட்டிடத்தில் ஏற்படுத்தப்பட்டிருந்த ஜாகையில் வந்து இறங்கியது. இந்தக்கட்டிடம் நல்ல கெட்டி மெத்தைக்கட்டிடம். தரைகளெல்லாம் தேய்ந்து போயிருந்ததைப் பார்க்க அது ஒரு கிடங்காக இருந்திருக்குமென்று நினைக்கத்தக்கதாயிருந்தது. இந்தக் கட்டிடத்துக் கொல்லைப்புறத்தில் ஒரு கிணறு இருந்தது. இந்த நகரத்தில் ஏறக்குறைய எல்லா வீடுகளிலும் பின் பக்கத்து முற்றம் சற்று விஸ்தாரமுள்ளதாகவே வைத்து நிறுவப்பட்ருந்தன.

நிற்க, தொண்டர்களில் பெரும்பாலோர் அந்த ஜாகையிலிருந்து இரண்டு பர்லாங்கு தூரத்திலிருந்த மஹாமகக் குளத்திற்குப்போய் ஸ்நானம் முடித்துக்கொண்டு வந்தனர். மணி 10-30 க்குப் போஜனத்திற்காக மணியும் அடிக்கப்பட்டு இலைகள் போடப்பட்டன. இடமுள்ளமட்டும் தொண்டர்கள் வரவர உட்கார்ந்துகொண்டே இருந்தனர். இலையில் சாதம் படைத்து நெய் போட்டாகவும் சில தொண்டர்கள் பிரார்த்தனை உண்டென்பதை மறந்தவர்களாய் கவளம் பண்ண ஆரம்பித்தனர். அடுத்திருந்தவர்கள் ஞாபகமூட்டவும் தவறுக்குப் பிராயச்சித்தமாக உதட்டைக் கடித்துக்கொண்டு பிரார்த்தனையில் கலந்து எல்லோரைக் காட்டிலும் உரக்க 'ரகுபதி ராகவ ராஜாராம்' என்று சொல்ல ஆரம்பித்தனர். பிரார்த்தனை முடிந்ததும் கால் மணியில் போஜனம் அருந்தினர். உடனே சாப்பிட்ட இடம் துப்புரவு செய்யப்பட்டது. இரண்டாவது பந்திக்காக எதிர்பார்த்திருந்தத் தொண்டர்கள் இலையில் வந்து உட்கார்ந்து, சாதம் இலையில் படைக்கப்பட்டதும், பிரார்த்தனையெல்லாம் முதல் பந்தியில் நடந்தாய்விட்டது என்று சொல்லிக்கொண்டே கவளங்கவளமாய்த் திரட்டி வாயிலிட்டுக்கொள்ள ஆரம்பித்தனர். மற்றும் சிலர் தங்கள் வழக்கத்தை நழுவவிடாமல் தங்கள் மட்டில் பிரார்த்தனை முடித்துக்கொண்டு சாப்பிட்டனர்.

சிதம்பரம் ந. தண்டபாணி பிள்ளை, ஆதியில் தீவிர காங்கிரஸ் வாதியாயிருந்து இடையில் பிரிந்து போயிருந்தவர், அன்றையதினம் சென்னையிலிருந்து நேரில் வந்து படை அந்த ஊருக்கு வருங்கால் உபசரிக்க வேண்டியது தமது கடமையென உணர்ந்தவராய் தொண்டர்களின் போஜன வகையறு செலவுக்காக ரூபாய் 25 தலைவரிடம் சமர்ப்பித்தார். விருந்து ஏற்பாடுகளெல்லாம் தாமிருந்து செய்ய வேண்டுமென்று நினைத்திருந்ததாகவும், அது முடியாமற் போய்விட்டபடியால் தொகையாகக் கொடுப்பதாகவும் சொன்னார். சாப்பாடு முடிந்ததும் தொண்டர்கள் இளைப்பாறி விட்டு வழக்கப் பிரகாரம் மௌனம், ஹிந்திபடிப்பு, நூல்நூற்றல், தினச்செய்தி அறிதல் ஆகியவற்றில் ஈடுபட்டனர். சேரிசுத்த வேலைக்கும் சில தொண்டர்கள் சென்று வந்தனர். மாலை 4 மணிக்கு வழக்கம்போல உண்டி முடிந்ததும் தொண்டர் படை அடுத்த கெடியாகிய வலங்கிமானுக்குப் புறப்படத்தயாரானது. அன்று மாலை தலைவர் ஏதோ விசேஷ அலுவலை முன்னிட்டு வெளியே போயிருந்தவர் திரும்பிவர நெடுநேரமாயிற்று. அதனால் புறப்படுவது சற்று தாமதமாகி மாலை 5-15 மணிக்குமேல் படை அங்கிருந்து புறப்பட்டது. சில முக்கிய தெருக்களின் வழியாய் மீண்டும் ஒரு முறை ஊர்வலம் போய்க்கொண்டே கடைசியாக, ஊர்க்கோடியை அடைந்து தெற்கு முகமாய்ப் போய்க்கொண்டிருந்த பாட்டையில் வலங்கிமானை நோக்கிப் படை மேலே செல்ல ஆரம்பித்தது.

## வலங்கிமான்

அன்று தாமதமாகப் புறப்பட்டபடியால் படை எவ்வளவு வேகமாய் நடந்தும் வலங்கிமான் சமீபம் போன சமயம் பொழுது பூராவும் சாய்ந்திருந்தது. அந்த ஊர்வாசிகள் வெகு தூரத்திற்கு முன்னால் வந்து வரவேற்புக்காகத் தயாராய் நின்றனர். தொண்டர்படை அவர்களை நெருங்கியதும் மேளதாளங்கள் ஆரம்பமாயின. அத்தோடு ஆதி திராவிடமக்கள் கொம்பு, தப்பட்டை முதலிய வாத்தியங்களை

வாசித்து வரவேற்பு வைபவத்தை இரட்டிப்பு விசேஷமாக் கினார்கள். அதிகௌரவ ஸ்ரீனிவாச சாஸ்திரியாரவர்களை உலகுக்களித்த அந்தப் புனிதவூர் மற்றைய ஊர்களைவிடத் தேசபக்தியில் எந்தவிதத்திலும் குறைந்ததல்லவென்பதை நிதர்சனமாக ருசுப்பித்துக் காட்டுவதுபோல் பெருந்திரளான ஹிந்துக்களும் முசல்மான்களும் வெகு குதூகலத்துடன் வரவேற்பளித்துத் தொண்டர்படையை ஊர்ப்பக்கமாய் ஊர்வலமாய் அழைத்துச் சென்றனர். தெருக்களில் கமான்வளைவுகள் நிறுத்தி அவற்றின் பேரில் உப்புச்சத்தியாக்கிரக வீரர்காள் வருக, தன்னலமற்றசாத்வீகத் தொண்டர்காள் வருக தென்னாட்டு வீரரே வருக என்றும் இன்னும் பலவாருன வாக்கியங்களை எழுதியிருந்தனர்.

அது சிறிய ஊராகையால் சிறிது நேரத்தில் தொண்டர் படை ஊர்க்கோடியை அடைந்து, அங்கிருந்து மீண்டும் மேல் நோக்கி ஊருக்கு வெளியிலேயே போய்க்கொண்டிருந்தது. ஏனெனில் ஜாகை ஏற்படுத்தியிருந்த இடம் ஊருக்கு வெளியிலேயே இருந்தது. முக்கால் மைல் தூரத்தில் ஒரு வடிகால் ஓடிக்கொண்டிருந்தது. அந்தக்கால்வாயைக் கடக்க ரஸ்தாவோடு ஒரு பாலமிருந்தது. பாலத்தண்டை வரவும் தொண்டர்படை பள்ளத்தில் இறங்கி அதன் இடது கரையில் சற்றுதூரம் போய் மணல் பரந்துகிடந்த ஓர் இடத்தில் நின்றுவிட்டது. அங்குதான் அன்று கூட்டம் கூட்டப்பட்டிருந்தது. சுற்றிலும் வெகுதூரம்வரை ஜனங்கள் உட்கார்ந்திருந்தனர். உபநியாச மேடை நடுவில் அமைக்கப் பட்டிருந்தது. அன்று கூட்டத்தில் பேசக்கூடியவர்கள் தலைவரல்லாது ஸ்ரீமான்கள் பந்துலு ஐயர், மதுரை மௌலானா சாஹிப், ந. தண்டபாணி பிள்ளை முதலானோர் இருந்தனர். கூட்ட ஆரம்பத்தில் ஹிந்துக்களின் சார்பாக ஒரு வரவேற்புப் பத்திரமும் பணமுடிப்பும் சமர்ப்பிக்கப் பட்டன. அவ்விதமே முசல்மான்கள் சார்பாகவும் பத்திரமும் பணமுடிப்பும் வழங்கப்பட்டன. தலைவர் எழுந்து

முக்கால் மணிநேரம்வரை வழக்கமாய்ச் சொல்லவேண்டிய முறைப்படி சொல்லி முடித்தார். மற்றவர்களும் இதை யனுசரித்தே பேசினர்கள். கூட்டம் முடிய 9 மணிக்குமேலா யிற்று. கூட்டம் கலைந்த பின்பு தொண்டர்கள் அடுத்துள்ள வெளியிடங்களுக்குப்போய் தேகபாதைகளைத் தீர்த்துக் கொண்டு திரும்பி வந்தனர். சிலர் தண்ணீர் சமீபத்தில் கிடைக்கவும் ஸ்நானம் பண்ணிவிட்டுத் தூங்கினல் சுகமாய்த் தூங்கலாமென்று எண்ணியவர்களாய், வேஷ்டிகளை அவிழ்த்து வைத்துவிட்டு அடுத்துள்ள வாய்க்காலில் ஸ்நானம் முடித்துக்கொண்டு திரும்பி வந்தனர். வடிகால் ஆனபடியால் மேலாக மட்டும் தண்ணீர் தெளிவாக இருந் ததேயல்லாமல் அடியில் பூராவும் சேறும் சகதியுமாகவே இருந்தது. ஊற்றுக் குழிபோட்டு இறைத்ததில் ஒருவிதத் துர்கந்தமுள்ள தண்ணீர் ஊறியதேயல்லாமல், நல்ல தண்ணீர் கிடைக்கவில்லை. வேறு சுத்த ஜலம் சமீபத்தில் இல்லாதபடியால் அதைக்கொண்டு தொண்டர்கள் திருப்தி யடைந்தனர். மணி 10-30 க்குமேல் எல்லோரும் அந்த மணற்றிடத்திலேயே படுக்கைகளை விரித்துக்கொண்டு சுகமாய்ப்படுத்துறங்கினர். தலைவரும் அன்று அங்கேயே படுத்திருந்தார். ஊர்வலத்திற்காக வருவிக்கப்பட்டிருந்த காந்த விளக்குகளையெல்லாம் கூட்டம் முடிந்ததும் கொண்டு போய்விட்டார்கள். ஆகையால் அங்கு வெளிச்சத்திற்காக ஹரிக்கேன் காந்த விளக்கு ஏற்றிவைக்கப்பட்டது. பொறுப் புள்ள இரண்டொருவர் மட்டும் பாதித் தூக்கத்திலும் பாதி விழிப்பிலுமாயிருந்தனர்.

அதிகாலை 4 மணிக்கு முன்னதாகச் சங்கூதி மணியடிக்கப் பட்டதும் எல்லாத் தொண்டர்களும் எழுந்து, காலைக்கடன் களை முடித்துக்கொண்டனர். காலைச் சிற்றுண்டிக் கஞ்சி தயாரித்து அந்த ஊரார் அந்த இடத்திற்கே கொண்டு வந்துவிட்டனர். இது மிகவும் சௌகரியமாயிருந்தது. இல்லையென்ருல் ஒரு மைல் நடந்து ஊருக்குள் போய் மீண்டும் திரும்பி வருவதென்ருல் மிகவும் சிரமமாகவே

இருந்திருக்கும். காலைப்பிரார்த்தனைக்குப்பின் சிற்றுண்டி யருந்தி 5-30 மணி சுமாருக்குத் தொண்டர்படை அங்கிருந்து புறப்பட்டு ரஸ்தாவையடைந்து வடிகால் பாலத்தைத் தாண்டி தெற்குத் திசையில் மேல்நோக்கிச்செல்ல ஆரம்பித்தது. இருட்டோடு குடிசைகளை விட்டுப்புறப்பட்ட கூலி வேலை செய்யும் ஏழைமக்கள் பொழுதுபுலர்ந்துவிட்டதில் தேகபாதைகளைத் தீர்த்துக்கொண்டும் தந்தசுத்தி செய்து கொண்டும் மீண்டும் நடக்கத் துவங்கி எதிரில் வந்து கொண்டிருந்தனர். அவசியம் தோன்றியவிடங்களில் தலைவர் வழியில் நேரிட்ட ஏழைமக்களுக்கு இரண்டொரு வார்த்தைகளில் உப்புசத்தியாக்கிரகத்தைப் பற்றியும் மதுவிலக்கைப் பற்றியும் உபதேசம் செய்துகொண்டே நடந்தார்.

## செம்மங்குடி

அடுத்தத் தங்குமிடம் ஆலங்குடி என்று பிரயாணக் கிரமத்தில் போடப்பட்டிருந்தது. ஆனால் அங்கு வரவேற்பு நடக்கவில்லை. அதற்குப்பதிலாக அந்த இடத்திற்கு இரண்டு மைலுக்கு முன்னால் செம்மங்குடி என்ற கிராமத்தில் வெகு குதூகலமாக வரவேற்பு நடந்தது. தொண்டர்படை செம்மங்குடி சமீபமாய் வந்தசமயம் காலை சுமார் 7 மணி ஆயிருந்தது. எதிர்கொண்டழைத்துச் செல்ல அந்த ஊர்வாசிகள் மேளவாத்தியங்கள் பஜனை கோஷ்டிகளோடு வந்திருந்தனர். ஆதித்திராவிடமக்கள் கொம்பூதிக்கொண்டும் தப்பட்டையடித்துக்கொண்டும் சின்ன மேளம் வாசித்துக் கொண்டும், காலுக்குச் சதங்கைமணிகள் கட்டிக்குதித்து ஆடிக்கொண்டும் தங்கள் வரவேற்புக் குதூகலத்தைக் காண்பித்து நின்றனர். இந்தக் கூட்டத்தைத் தொடர்ந்து தொண்டர்படை நடந்து சிறிது நேரத்தில் ஜாகை ஏற்படுத்தியிருந்த இடத்தை அடைந்தது. அந்த இடத்தில் ரஸ்தாவையடுத்து சுற்றிலும் தாழ்வாரமும் மத்தியில் கூடமும் அமைந்த ஒரே ஒரு கட்டிடம் மாத்திரம் நின்றது. அந்தக் கட்டிடத்திற்கு வலது பாரிசத்தில் பெரிய பந்தல் போடப்

பட்டிருந்தது. ஊர் அந்த இடத்திலிருந்து ஒரு பர்லாங்கு தள்ளியிருந்தது. தலைவர் இருந்து உபன்னியாசம் நடத்துவதற்கு மேஜை நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. ஸ்ரீமான்கள் பந்துலு ஐயர் (கும்பகோணம்) மதுரை மௌலானுசாஹிப், சீர்காழி சாமிநாத செட்டியார் முதலியோர் அங்கு வந்திருந்தனர். கூட்டத்திற்கு ஸ்ரீமான் பந்துலு ஐயர் தலைமை வகித்தார். பிரார்த்தனைக்குப்பின் தலைவர் எழுந்து சுமார் ஒரு மணி நேரம்வரை வழக்கம்போல் பேசினுர். அன்று காலை கூட்டம் முடிய 8 மணிக்கு மேலாயிற்று முடிந்ததும் தொண்டர்கள் ஸ்நானத்திற்குப்போக ஆரம்பித்தனர். அதற்குள் அந்த ஊரார் தொண்டர்கள் ஊருக்குள் அவசியம் வந்து போகவேண்டும். பின்னுல் சந்தர்ப்பம் ஏற்படுமோ ஏற்படாதோ என்று வற்புறுத்தி அழைத்தபடியால், அவர்களுடைய வேண்டுகோளை மறுக்க முடியாதவர்களாய்த் தொண்டர்கள் மீண்டும் ஜதை கூட்டி அழைத்துச்செல்லப்பட்டனர். அந்தச் சிறு ஊரை ஒரு சுற்று சுற்றி வந்துவிடுவதென்று போனபொழுது, அங்கு வீடுதோறும் பூரண கும்பங்கள் வைத்திருந்ததைப்பார்க்க அந்த ஊராருடைய சிரத்தை மேல் பூச்சாயில்லாது பக்தி விசுவாசத்தோடு கூடியதென்று விளங்கியது. தொண்டர்ப் படை ஏற்றுக்கொண்டிருக்கும் கஷ்டசாத்தியமான காரியத்தில் பூரண வெற்றி கிடைக்க வேண்டுமென்று பிரார்த்திப்பவர்களாய் அந்த ஊர் பெண்மணிகள் திருவிளக் கேற்றிவைத்துப் பூரணக்கும்பங்களை நிறுத்தியிருந்த காட்சியைக் கண்டால், எப்பேர்ப்பட்ட நாஸ்திகனுனுலும் அவனுடைய ஹிருதயத்தில் தேசபக்தியுடன் கூடிய தெய்வ பக்தி உடனே உதிக்குமென்பது நிச்சயம். பத்துப் பதினைந்து நிமிஷங்களுக்குள்ளாக அந்த ஊரைச்சுற்றி முடித்துத் தொண்டர்கள் ஜாகைக்கு வந்து சேர்ந்தனர். அதுசமயம் மணி 9-30 க்கு மேலாயிருந்தது. உடனே தொண்டர்கள் ஸ்நானஞ் செய்யப் புறப்பட்டனர். பெரும்பாலோர் அங்கிருந்து இரண்டு மூன்று பர்லாங்கு தூரத்திலிருந்த வெட்டாற்றுக்குப் போயினர். ஆற்றில் இரு ஓரத்திலும்

சிறிது தூரத்திற்குப் பாளமாக ஜலம் ஓடிக்கொண்டிருந்தது. நடுவில் மேடாயிருந்தது. ஆற்றின் அகலம் சுமார் அரை பர்லாங்கு இருக்கலாம். அரை மணி முக்கால் மணி நேரத்திற்குள்ளாக எல்லோரும் ஸ்நானம் முடித்துக் கொண்டவர்களாய் ஜாகைக்குத் திரும்பினர். ஒரு சிலர் வெகு சாவகாசமாக நேரம் கழித்துத் திரும்பி வந்தனர். இந்தக் கோஷ்டியிலேயே அன்று காப்டனும் கலந்திருந்தார். இவர்கள் வந்த சமயம் பந்தி ஏற்கனவே உட்கார்ந்து பிரார்த்தனை முடிந்து சாப்பிட்டுக்கொண்டிருந்தனர், காலி யாயிருந்த இரண்டொரு இலைகளை முன்னால் வந்தவர்கள் பூர்த்திசெய்து விட இவர்கள் இரண்டாவது பந்திக்கு எதிர்பார்த்திருந்தனர்.

அன்று 11-30 மணிக்குள்ளாக எல்லோரும் போஜனம் அருந்தியாய்விட்டது. அச்சமயம் பந்தலில் பெருந்திரளான ஜனங்கள் வந்து நிறைந்திருந்தனர். நடுவில் பஜனை கோஷ்டி ஒன்று ஹார்மோனியம் முதலிய ஜமாக்களுடன் கச்சேரி நடத்திக்கொண்டிருந்தது. மேன் மேலும் கூட்டம் வந்து நிரம்பிக்கொண்டே இருந்தது. பந்தலுக்கு வெளியில் ரஸ்தாவில் பெருந்திரளான ஆதித்திராவிடமக்கள் மதுவிலக்குப் பிரசாரப் படங்களைப் பார்ப்பதற்காகக் கூடியிருந்தனர். பஜனை ஒரு பக்கத்தில் நடந்துகொண்டே இருந்தது. மதுவிலக்குப் பிரசாரத்திற்கு அது தடையா யிருந்திராவிடில் இன்னும் பொழுது பூராவும் பஜனையிலேயே கழித்துவிட அந்தஊரார் தயாராயிருந்தார்கள். அபூர்வமாய்க் கிடைக்கும் இப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களைத் திருவிழாப் போல் கொண்டாடுவது ஜனங்களுக்கு ஏற்பட்ட சுபாவந் தானே! ஆனாலும் ஆரியக்கூத்தாடினாலும் காரியத்திலேயே கண் என்றபடி தலைவர் ஸ்ரீ ராஜாஜி மதுவிலக்குப் பிரசாரத்தின் அவசியத்தையும் முக்கியத்தையும் கருதி அதை நடத்துமாறு தமது காரியதரிசி ஸ்ரீமான் சுப்பய்யாவுக்கு உத்தரவிட்டார். அவர் ரஸ்தாவை யொட்டி பந்தல் கால்களோடு கட்டியிருந்த படங்களைக்காட்டி உபன்னியாசம் ஆரம்பித்தபோது அவருடைய தொண்டைச் சப்தம் பஜனை

கோஷத்தில் அமிழ்ந்து போய்விடவே அந்த சமயத்திற்குப் பஜனை பெரிய தடைபோலவே இருந்தது. இதனால் பஜனை சிறிது நேரத்திற்கு நிறுத்தி அப்புறம் வேண்டுமானால் துவக்கிக்கொள்ளலாம் என்று தலைவர் சொன்னதன்பேரில் சிறிதுநேரம் பஜனை நிறுத்தப்பட்டு ஜனங்களுடைய கவனமெல்லாம் படத்தின் பக்கமாய்த் திருப்பப்பட்டது. இத்தனை நாளும் பிரயாணத்தில் நடந்தேறிய மதுவிலக்குப் பிரசாரமெல்லாம் அநேகமாய்ப் பறைச்சேரி பக்கத்திலும், மதுவினால் கேட்டை விளைத்துக்கொள்ளும் ஒரு சாரார் மத்தியிலும்தான் செய்யப்பட்டு வந்ததற்குமாறாக அன்று அமைந்திருந்த இடவசதியினால் எல்லாத்தொண்டர்களும் எல்லா ஜனங்களும் எல்லா ஆதிதிராவிடமக்களும் தலைவரும் ஏககாலத்திலிருந்து கேட்க மிகவும் பொருத்தமாயிருந்தது. ஸ்ரீமான் சுப்பய்யா பிரதிதினமும் தலைவருக்கு அடுத்த படியாகத் தாமே மேற் சொன்ன பிரசாரத்தைச் செய்து வந்திருந்தாலும் அன்று தம்மை பலதிறப்பட்ட ஜனங்கள் கவனித்துக் கொண்டிருந்தபடியால் தமது முழுத் திறமையும் காட்டி அவர் செய்த உபன்னியாசமும் இடையிடையே பாடிய 'கள்ளு சாராயம் குடியாதே' என்ற பாட்டும் பன்னைப் பாட்டும் இத்தனை நாளும் இல்லாத உற்சாகமும் உருக்கும் உள்ளவையாயிருந்தன.

ஹிந்தி சொல்லிக்கொடுக்கும் உபாத்தியாயர் ஸ்ரீமான் கிருஷ்ணசாமி நாயுடுவுக்குக் கும்பகோணத்திலிருந்து ஜுரமாயிருந்தபடியால் ஹிந்தி வகுப்புகளும் நின்று போயிருந்தன. பாக்கி நின்ற அட்டவணை அலுவல்களில் மௌனவிரதம் ஒழுங்காய் அனுஷ்டிக்கப்பட்டது. பத்திரிகை விஷயம் அந்தக் கட்டத்தில் எடுத்துச் சொல்ல முடியவில்லை. ஆனாலும் தொண்டர்கள் பத்திரிகைகளைத் தாமாகவே ஆளுக்கொரு காகிதமாகப் படித்துக்கொண்டிருந்தனர். ஒரு சிலர் தக்ளி நூற்றுக் கொண்டிருந்தனர். பெரும்பாலோர் மதுவிலக்குப் பிரசாரத்தைக் கேட்டுக் கொண்டிருந்தனர். ஒரு சிலர் பக்கத்தில் போய் இளைப்பாற்றிக் கொண்டிருந்தனர்.

மாலை 4 மணிக்கெல்லாம் இரண்டாவது வேளை போஜனத்திற்காக மணியடிக்கப்பட்டது. தொண்டர்கள் எழுந்து போய் இலையில் அமர்ந்து பிரார்த்தனை செய்து போஜனத்தை முடித்துக்கொண்டதும் பிரயாணத்திற்குத் தயாராயினர். மாலை 5 மணி சுமாருக்குத் தொண்டர்படை அங்கிருந்து புறப்பட்டது.

## ஆலங்குடி

வழியில் 2 பர்லாங்குக்கப்பால் வெட்டாறு குறுக்கிட்டது. அதன் பாலத்தைத் தாண்டி மேலே செல்லுகையில் இரண்டாவது மைலில் ரஸ்தாவோடு அமைந்த ஆலங்குடி என்னும் ஊர் குறுக்கிட்டது. இந்த இடத்தில் தான் அன்று தங்குவதென்று பிரயாணக் கிரமத்தில் எழுதியிருந்தது. ஆனல் எக்காரணத்தாலோ அங்கு தங்குமாறு ஏற்படவில்லை. இந்த ஊர்வாசி ஸ்ரீமான் பாலகிருஷ்ணன் என்பவர் தொண்டர்படையில் வந்துகொண்டிருந்தார். அவருக்குத் தமது சொந்தவூர் அவ்வாறு தவறிவிட்ட விஷயத்தில் மனவருத்தமுண்டாகவே படை, செம்மங்குடியில் இருக்கும் பொழுது அவர்மட்டும் முன்னடி இந்த ஊருக்குப் போய் சிறிது உபசரிக்க ஏற்பாடு செய்து வைத்துத் தொண்டர் படைக்காக எதிர் பார்த்துக் கொண்டிருந்தனர். இளநீர் வெட்டித் தயாராய் வைக்கப்பட்டிருந்தன. தொண்டர்படை அந்த இடத்திற்கு வந்து சேர்ந்ததும், தொண்டர்கள் ரஸ்தாப்பக்கத்திலேயே வரிசையாக உட்கார்த்தப்பட்டு, ஆளுக்கொவ்வொரு இளநீர் வழங்கப்பட்டது. சாப்பிட்டு சற்று நேரந்தான் ஆகியிருந்தபடியால் தாகத்திற்காக இளநீரிலிருந்த நீரைமட்டும் பானம் செய்துவிட்டு மட்டையைத் தேங்காயோடு அங்கு நின்ற தொம்பர், ஆதித்திராவிட சிறுவர் சிறுமிகளுக்குக் கொடுத்து விட்டனர். இங்கு இது நடந்து கொண்டிருக்கையில் தலைவர் ஒரு புறத்தில் ஊர்வாசிகளுக்குச் சிறு உபன்னியாசம் நிகழ்த்திக் கொண்டிருந்தார். இரண்டு வேலையும் ஏக காலத்தில்

முடிவடைந்தன. உடனே தொண்டர்படை அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டது.

## நார்த்தங்குடி

அங்கிருந்து ஒரு மைல் தூரத்தில் நார்த்தங்குடி என்ற ஊர் ரஸ்தாவோடு அமைந்திருந்தது. இந்த ஊர் வாசிகளில் ஒருவர் அன்று காலே செம்மங்குடிக்கு வந்து தலைவர் உபன்னியாசத்தைக் கேட்டுக் கொண்டிருந்தார். அது முடிந்ததும் அவர் கூட்டத்தில் எழுந்து தலைவரிடம் ஒரு விண்ணப்பம் செய்து கொண்டார். அதாவது படை போகும் பொழுது நார்த்தங்குடியில் சிறிது தங்கி தம்மால் செய்யப் படும் சிறு விருந்தை உண்டு விட்டுப் போகவேண்டு மென்பதே. இதற்குத் தலைவர் சம்மதிக்கவில்லை. மாலை போஜனம் செம்மங்குடியிலேயே சாப்பிட்டுப் புறப்படப் போகிறபடியால் மூன்று மைல் தூரத்தில் மீண்டும் ஒரு இடத்தில் போஜனம் செய்வது முடியாத காரியம்; பசியுமிராது. வீண் காலதாமதம் செய்வதற்கு நேரமுமில்லை என்பதே அவர் சொல்லிக் காட்டிய சமாதானம். ஆனல் அந்தக் கனவான் தம்முடைய கோரிக்கையை மென்மேலும் வற்புறுத்திச் சொல்லி அளவு கடந்து ஆர்வம் காட்டி நின்ருர். அவருடைய திருப்தியை உத்தேசித்து ஒரு கஞ்சி மட்டும் தயாரித்துக் கொடுக்கலாமென்று அவருக்கு அனுமதி கொடுக்கப்பட்டது. அந்த மட்டும் தம் கோரிக்கை ஈடேறிற்று என்று அவர் சென்று எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டு தொண்டர்படைக்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். தொண்டர்படை அந்த இடத்தை அடைந்த பொழுது மாலை 6 மணிக்கு மேலாகவே இருக்கும். ஆளுக்கு இரண்டு வாழைப்பழங்களும் தொன்னையில் பாயசமும் அங்கு வழங்கப்பட்டன. தலைவர் ஒரு புறமாய் அங்கு கூடிய சிறு கூட்டத்தில் சிறிது சொற் பெருக்கு நிகழ்த்தினர். வெகு சீக்கிரத்தில் அங்கு ஜோலிகள் முடித்துக் கொண்டு அங்கிருந்து வெகுவேகமாய்ச் செல்ல ஆரம்பித்தது.

# நீடாமங்கலம்

அங்கிருந்து நீடாமங்கலம் சுமார் 1½ மைலிருக்கும். கார்த்தங்குடியை விட்ட பொழுதே மணி 6-15க்கு மேல் ஆகியிருந்தது. எவ்வளவு வேகமாய் நடந்துபோயும் இருட்டு முன் நீடாமங்கலத்தை அடைய முடியவில்லை. மாலை 6-45 இருக்கலாம். அப்பொழுது தொண்டர்படை நீடாமங்கலம் சுங்கச்சாவடி சமீபமாய் வந்துகொண்டிருந்தது. அந்த ஊர் வாசிகள் வரவேற்று அழைத்துச் செல்வதற்காக மேளதாள வைபவங்களுடன் காத்து நின்றனர். அவர்களைத் தொடர்ந்து படை பின்னால் நடந்துபோயிற்று. தஞ்சை மாநகரத்தில் தொண்டர்படையை விட்டுப் பிரிந்த வெண்ணாறு மீண்டும் அந்த இடத்தில் சந்தித்தது. அதன் பாலத்தைக் கடந்து படை ஊருக்குள் சென்றது. வழியில் வீடுகளிலும் கடை களிலும் எரிந்துகொண்டிருந்த விளக்குகளின் ஒளி ரஸ்தா வில் விழுந்திருந்தது. முனிசிபல் விளக்குகள் வெகுதூரத் திற் கொன்றாய்க் காணப்பட்டன. சற்றுதூரம் சென்றவுடன் ரஸ்தாவுக்கு வலதுபுறம் ரயில்வே ஸ்டேஷன் இருந்தது. ரஸ்தாவோடிருந்த ரயில் கேட்டைக் கடந்து தொண்டர் படை மேல்நோக்கிச் சென்றது. அங்கிருந்து 20கஜ தூரம் நடந்ததும் இடதுபுறமாய் ஒரு பெரிய ரஸ்தா திரும்பியது. அந்த ரஸ்தா ஆரம்பத்தில் இடது பாரிசத்தில் அந்த ஊர் ஸ்ரீனிவாச பிள்ளையவர்கள் சத்திரம் இருந்தது. ஊர்வலம் முடிந்தபின் அங்கு தான் தொண்டர்படை அழைத்துச் செல்லப்பட்டது. தொண்டர்கள் சத்திரத்திற்குள் சென்று மூட்டைகளை வைத்துவிட்டு வெளியே வந்து சத்திரத்துப் படிக்கட்டுகளிலும் தாழ்வாரத்திலும் வரிசையாய் உட்கார்ந்து கொண்டனர். ஐம்பது அறுபது அடி அகலம் நீண்டு இரண்டு தாக்குகளாய் அமைந்த மேல்வராந்தா கீழ்வராந்தா ஆகிய இரண்டிலும் திரளான ஜனங்கள் உட்கார்ந்திருந் தனர். தலைவர் இருந்து உபன்னியாசம் செய்வதற்காகச் சத்திரத்து வாசற்படிக்கு முன்னால் மேஜை நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. ஜனங்கள் எதிரில் வெகுதூரம் வரை

ரஸ்தாவில் பரவி வீற்றிருந்தனர். இவ்வூர் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் 13-4-30ல் கலெக்டருக்கு அனுப்பிய ஓர் அறிக்கையில் கலெக்டர் சத்தியாக்கிரகக் கோஷ்டி சட்ட விரோதமானதென்று கருதுவாராஞல், அக்கோஷ்டியைத் தம் தெருவழியாக வராமல் தடுக்கவேண்டுமென்றும் அப்படித் தடுக்காவிடின் அக்கூட்டத்தாருக்கு தாம் உபசாரம் செய்ய வேண்டியிருக்குமென்றும் குறிப்பிட்டிருந்தாராம். அன்றைய கூட்டத்தில் வெளியூரிலிருந்து வந்த பிரமுகர்கள் மதுரை ஜனுப் மௌலான சாஹிப்பும், ஸ்ரீமான் என். எம். கிருஷ்ணமாச்சாரியும் காணப்பட்டனர். பிராத்தனைக்குப்பின் தலைவர் எழுந்து சுமார் ஒருமணி நேரம் வரை உப்புச்சத்தியாக்கிரகத்தைப் பற்றியும், ஜனங்கள் உதவிசெய்யவேண்டிய அவசியத்தைப்பற்றியும், கலெக்டரின் அநீத உத்திரவைப் பற்றியும் இன்னும் பல விஷயங்களைப் பற்றியும் பேசினர்.

அன்று கூட்டம் முடிய 9-30மணி ஆகிவிட்டது. அங்கு ஒரு பணமுடிப்பு வழங்கப்பட்டது. உண்டி வசூலிலும் சிறிது தொகை கூடிற்று. கூட்டம் முடிந்து ஜனங்களெல்லாம் கலைந்துபோன பிற்பாடு தொண்டர்கள் மாலைக்கடன்களை முடித்துக்கொள்ள வெண்ணாற்றங்கரைக்குப்போய் அரை மணி முக்கால்மணி நேரத்திற்குள்ளாக எல்லோரும் திரும்பி வந்து நித்திரை போயினர்.

மறுநாள் புதன்கிழமை (23-4-30) அதிகாலை 4மணிக்கு முன்னதாகவே தொண்டர்கள் எழுப்பி விடப்பட்டனர். பிராத்தனையின்போது வழக்கமாய்ப் பாடிய கீதங்களோடு அன்று பாரதியாரின் 'பொழுது புலர்ந்தது' என்ற கீதம் பாடப்பட்டது, அச்சமயத்திற்கு மிகவும் பொருத்தமாயிருந் தது. பிராத்தனைக்குப்பின் வாழைப்பழமும் பாயசமும் வழங் கப்பட்டன. பின்பு ஹரிக்கேன் விளக்கேற்றிக்கொண்டு தொண்டர்படை வரிசையாய் வெளியே வந்து நின்றது. தேசீயக்கொடியும் டங்காவும் இருவரால் தாங்கப்பட்டு முன்னே செல்ல காப்டன் ஊதல் சப்தம் கொடுக்கப் படை

அங்கிருந்து புறப்பட்டது. அந்த ஊர்வாசிகள் இரண்டொருவர் வழித்துணைக்காகக் கூடவே வந்தனர். அவர்களைத் தொடர்ந்து தொண்டர்படை நடந்து கொண்டிருந்தது. ஒரு நாழிகை வழி நடந்ததும் வழக்கம்போலப் பொழுது புலர்ந்து விட்டது. அந்த இடத்தில் காவிரியாற்றின் பல கிளைநதிகளில் ஒன்றாகிய கோரையாறு குறுக்கிட்டது.

## பூவனூர்

அந்தப் பாலத்தைக் கடந்து காலைவாடையில் வெகு வேகமாய்ப் படை சென்றுகொண்டிருந்தது. சுமார் 6-30 மணியளவில் படை பூவனூர் சமீபமாய் வந்து கொண்டிருந்தது. அந்த ஊர் ரஸ்தாவுக்கு வலது புறமாய் ஒரு பர்லாங்கு தூரத்திற்கப்பால் இருந்தது. பாடல்பெற்ற பூவனூர் எலிக்கடிக்கு மந்திரரட்சை கட்டிக்கொள்ளும் தலமாகும். அந்த ஊருக்குப் போகவேண்டுமானால் ரஸ்தாவின் வலதுபுறமாய் அடுத்திருந்த பாமணியாற்றைத் தாண்டித்தான் போக வேண்டும். வெள்ளமுள்ள காலங்களில் அந்த ஆற்றைக் கடந்து செல்வதற்காக ஒரு சிறு பாலம் போடப்பட்டிருந்தது. தொண்டர்கள் மணலிலேயே இறங்கி அந்த ஆற்றைக் கடந்து பூவனூர்ப் பக்கமாய்ப் போயினர். பாதை வளைந்து வளைந்து சென்றது. வழிநெடுகக் கற்றாழைப் புதரும் திருகுக்கள்ளிப் புதருமாயிருந்தன. அவற்றையெல்லாம் தாண்டி ஊருக்குள் போனபொழுது அங்கு ஒருவித ஏற்பாடும் செய்யப் படவில்லையென்று தெரிந்தது. பிரயாணக்கிரமத்தில் அடுத்த தங்குமிடம் அந்த ஊர்தான் என்று பிரசுரித்திருந்தது. ஆனால் ஊர்ப்பிரமுகர்கள் ஒருவர் பாக்கியின்றி வெளியே நழுவிப்போயிருந்தனர். இதுவும் போலீசாரின் புண்ணியத்தில் நடந்திருக்கிறதென்று தொண்டர்கள் நினைத்துக் கொண்டவர்களாய் அந்த ஊரைச் சுற்றிமுடித்து ஒரு வெளியிடத்தில் சிறு கூட்டமும்போட்டுத் தலைவர் சிறிது உபன்னியாசமும் செய்து முடிந்ததும், படை அந்த இடத்தை விட்டு வந்த வழியாகவே திரும்பி நடந்து வெகு சீக்கிரம் ரஸ்தாவை அடைந்தது. குறிப்பிட்ட இடம் வெறுமையாய்ப்

போகவே தொண்டர்களுக்கு இனி எங்கேபோய்த் தங்கப் போகிறோமோ என்ற சந்தேகம் உண்டாயிற்று. ஆனால் அடுத்தாற்போல்வேறே தங்குமிடம் வசதியானது ஏற்கனவே தேர்ந்தெடுக்கப்பட்டு அங்கேயே சகல ஏற்பாடுகளும் நடந்துகொண்டிருந்ததென்கிற விஷயம் தலைவருக்கும் அவரோடு கூடவே எப்பொழுதும் இருக்கும் ஒரு சிலருக்கு மட்டும்தான் தெரிந்திருந்தது.

## இராஜப்பையன்சாவடி

இராஜப்பையன் சாவடி அருகில் படை வந்த சமயம் காலை 8-மணிக்கு மேலாகவேயிருந்தது. அவ்வூர் ராகவய்யர் குமாரன் 18 வயதுள்ள வாலிபன் அன்று படையை வரவேற்றான். ரஸ்தா ஓரமாய் ஒரு கூட்டம் கூட்டப்பட்டது. மன்னார்குடியிலிருந்து ஸ்ரீமான்கள் பி. இராமநாதபிள்ளை, பாலையூர் இராஜகோபாலய்யர் முதலியோர் அவ்விடத்திற்கு வந்திருந்தனர். தலைவர் எழுந்து தாம் வழக்கமாய் வழி நெடுகச் சொல்லிவரும் விஷயங்களையே சொல்லி அரைமணி நேரம் உபன்னியாசம் செய்தார்.

கூட்டம் முடிந்தபின்பு சுமார் 8-30மணிக்குப் படை அங்கிருந்து புறப்பட்டு ரஸ்தாவைக் கடந்து எதிர்வாடையிலிருந்த ஒரு தெருவழியாய் நடந்து 30கஜ தூரம் போனபின் வலதுபுறமாய்த் திரும்பி ராகவய்யர் ஜாகையை அடைந்தது. வெளி முற்றத்தில் பெரிய கீத்துக்கொட்டகை போடப்பட்டிருந்தது. அதில் இரண்டொரு சாய்மான நாற்காலிகளும் ஐந்தாறு விசிப்பலகைகளும் போடப்பட்டிருந்தன. அந்தக்கட்டிடம் மூன்று நான்கு பிரிவுகளாக இருந்தன. கீத்துக்கொட்டகையை அடுத்திருந்த பாகம் சுற்றி வர வராந்தா அமைக்கப்பட்ட ஒரு காரைக்கட்டு மெத்தைக் கட்டிடம். இந்த வராந்தாவைச் சுற்றிலும் தொண்டர்கள் தாங்கள் கொண்டுபோயிருந்த மூட்டைகளை வைத்துக் கொண்டு ஜாகை ஏற்படுத்திக் கொண்டனர். மெத்தை மேலிருந்த பெரிய கூடத்தில் தலைவருக்குப் பிரத்தியேக

மான ஜாகை அமைக்கப்பட்டது. இந்தக் கட்டிடத்திற்கு இடது புறத்தில் செங்கல் போட்டு சிமிண்டு பூசிய ஒரு முற்றம். அதற்கப்பாலிருந்த சமையல்அறை முதலிய பிற பாகங்களோடு இந்தக் கட்டிடத்தைச் சம்பந்தப்படுத்திக் கொண்டிருந்தது. தொண்டர்கள் ஜாகை ஏற்படுத்திக் கொண்டபாகமே எல்லாவற்றிலும் நடுநாயகமானது. இதன் வலது புறத்தில் மேற்கூரை போடாத இரண்டொரு பாகங்கள் மூங்கிற் பட்டைகளால் காக்கப்பட்ட முற்றங் களாயிருந்தன. இவற்றை மறைத்து நின்ற மதில்கள் காரை பூசப்படாமல் அரை குறைக் கட்டிடங்களாய் நின்றன. ஒரு முற்றத்தில் நெல் அடைத்து வைத்திருந்த சேருகள் ஓர் ஆள் உயர முள்ளவையாய் சக்கராகாரமாய் சுற்றிலும் வைக்கோல் பிரிகள் சுற்றப்பட்டு சுமார் 20 அல்லது 30அடி சுற்றளவில் வைக்கோல் பிரிகளுக்கு மேல் சாணம் பூசப்பட்டு எப்பேர்ப்பட்ட மழைக்கும் காற்றுக்கும் சிறிதும் பழுதுபடாத உறுதியான கட்டிடங்கள் எண்ணலாம்படி வைக்கோல் கூரை யால் வேயப்பட்டு நாலைந்து நின்றன. ஒவ்வொரு சேரிலும் 400, 500 கலம் கொள்ளும் போலிருந்தன. கீத்துக்கொட்ட கைக்கு எதிரில் பெரிய வெளியிடம் மரஞ்செடிகளோடு இருந்தது. அதன் இடது பாரிசத்தில் ஒரு மூலையில் கீத்துக் கொட்டகையால் காக்கப்பட்ட மாட்டுக் கொட்டில் ஒன்று இருந்தது. அதில் 40, 50 மாடுகள் கட்டத் தும்புக் கயிறு கள் இருந்தன. ஆனல் தொண்டர்கள் அங்கு போன நேரத்திற்குச் சில மாடுகள் தவிர மற்றவைகளெல்லாம் மேயப் போயிருந்தன.

நிற்க, அங்கு இறங்கிய தொண்டர்கள் ஸ்நானம் முடித்துக் கொள்வதற்காக ராகவய்யர் அவர்களுடைய வீட்டு எல்லைக்குள் இருந்த ஒரு பெரிய குளத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். இந்தக் குளம் கட்டிடத் திலிருந்து ஒரு பர்லாங்குத் தூரத்திலிருந்தது. தண்ணீர் தெளிவாக இருந்தது. சில தொண்டர்கள் அங்கு எண்ணெய் ஸ்நானம் முடித்துக் கொண்டனர். மற்றையோர் சாதாரணமாய் ஸ்நானம் முடித்துக்கொண்டனர். தொண்டர்

களில் ஒரு சிலர் தவிர மற்றவர்களெல்லோரும் நன்ருய் நீச்சலடிக்கப் பழகினவர்களாகவே இருந்தனர். அந்தக் குளத்தை ஒவ்வொரு தொண்டரும் அநேக முறை சுற்றி வந்து தங்களுக்குத் தெரிந்த பலவிதமான நீச்சு முறைகளைக் காட்டிக்கொண்டிருந்தனர். சிலர் ஜலத்தில் மல்லாந்து படுத்துக்கொண்டு யோகிகள் போல ஜலஸ்தம்பனம் பண்ணிக்கொண்டிருந்தனர். சிலர் தண்ணீரில் மூழ்கி வெகு தூரத்திற்கப்பால்போய் மேலே கிளம்பி வந்தனர். சிலர் இரண்டு கைகளையும் மேலே உயர்த்தி அதிக ஆழமுள்ள இடத்தை கழுத்தளவு ஆழமுள்ளதாய்க் காட்டிக் கொண்டிருந்தனர். சுருங்கச் சொல்லின் அன்று ஒவ்வொரு தொண்டரும் தண்ணீரே கதியாகக் கிடக்க ஆரம்பித்தனர். ஒவ்வொருவரும் ஒருமணி நேரத்திற்கு மேலாகவே ஜலத்தில் ஓடி ஆடிக் களைத்துப் பசி உபத்திரவம் துரத்தினதன் பேரில் தான் ஜலத்தை விட்டுக் கரையேறினர். அதுசமயம் மணி 10-30ஆயிருந்தபடியால் சாப்பாட்டிற்கு மணி அடித்தது. வரிசையாய் இலைகள் போட்டுத்தயாராயிருந்தன. ஏற்கனவே வந்து சேர்ந்த தொண்டர்கள் இலையில் உட்கார்ந்து கொண்டனர். மற்றையோரும் வரவரக் காலி இலைகளை நிரப்பிக் கொண்டிருந்தனர். இடம் பெரிதாயிருந்த படியால் இலைகள் ஜாஸ்தியாகவே போடப்பட்டிருந்தன. தலைவரும் சில தொண்டர்களும் தாழ்வாரத்தில் உட்கார்ந்து கொண்டனர். வெளியூர் கனவான்கள் சிலர் தலைவருக்குப் பக்கத்தில் காணப்பட்டனர். மற்றத் தொண்டர்களெல்லோரும் தாழ்வாரத்திலும் முற்றத்திலும் போட்டிருந்த இலைகளில் அமர்ந்து கொண்டனர். டஜன் கணக்கில் பரிமாறுகிறவர் ஓடி ஆடி சிறிது நேரத்தில் அன்னம், கறி பதார்த்தங்கள், அப்பளம் முதலிய பக்ஷணங்களால் இலைகளை நிரப்பிவிட்டனர். வாய் தெவிட்டும் அளவுக்கு நெய் வார்க்கப்பட்டு வந்தது. பிரார்த்தனை வழக்கம்போல் முடிந்தபிறகு தொண்டர்கள் சோற்றைக் கவளம் கவளமாய்த் திரட்டி வாயில் போட்டுப் பாழுங் குழியை நிரப்பலாயினர்.

அன்றைய விருந்து பலவித பதார்த்தம், பாயசம் பரமான்னத்துடன் படைக்கப்பட்டதை உண்ட தொண்டர்கள் எந்நாளும் இந்தச் சம்பவத்தை மறக்க முடியாத விதமாய் இருதயத்தில் பதிய வைத்துக் கொண்டனர். கடைசியாக மோர் சாதம் உண்ணும் பொழுது படைக்கப்பட்ட மாவடு ஊறுகாய் ஏற்கனவே நிறைந்துபோயிருந்த வயிற்றினுள்ளே மிச்சமிருந்த சாதத்தைக் கல்தா கொடுத்துத் தள்ளிய சம்பவத்தை ஒருநாளும் மறக்க முடியாது. இந்த விதமாக அன்று போஜனம் முடித்துக் கொண்ட தொண்டர்கள் எச்சிலைகளை யெடுத்துக் கொண்டு குழியில் சேர்த்துவிட்டு கைகால் அலம்பிக் கொண்டு வராந்தாவில் போயிருந்தனர்.

பத்திரிகை படிப்போரும், தக்ளி நூற்போரும், இளைப்பாறுவோருமாய்த் தொண்டர்கள் காலத்தைக் கடத்திக் கொண்டிருந்தனர். அட்டவணைக் கிரமப்படி அலுவல்களும் முறை தவருமல் நடந்தேறின. இடையில் தொண்டர்களில் ஒரு சிலர் குளத்திற்குப் போய் இரண்டாவது தடவை நீராட ஆரம்பித்தனர். பிரயாணத்தில் அபூர்வமாய்க் கிடைத்த அந்தக் குளத்தில் ஆசை தீருமட்டும் நீச்சடிப்பதே அவர்களுடைய நோக்கமாயிருந்தது. சிலர் ரஸ்தாப் பக்கமாய்ச் சென்று அந்த ஊர் எதுவரை பரந்து நீண்டிருக்கிறதென்று பார்த்துக் கொண்டிருந்தனர். சிலர் சேரிக்குப் போய், தெருக்களைச் சுத்தம் பண்ணிவிட்டு அங்கிருந்தவர்களை மதுவிலக்குப் பிரசாரம் நடக்கப்போகிற தென்று அழைத்து வந்தனர். அன்று மதுவிலக்குப் பிரசாரம் ஜாகை ஏற்படுத்தியிருந்த கட்டிடத்திற்குப் பக்கத்திலுள்ள, கூரையின்றி மதில்களால் காக்கப்பட்ட முற்றத்தின் உட் புறத்தில் ஒரு தாழ்வாரத்தில் நடந்தேறியது. ஸ்ரீமான் சுப்பையா ஒவ்வொரு படமாய் எடுத்து இரும்புக் கம்பியில் கோத்துத் தொங்கவிட்டு விளக்கிச் சொல்வதும் அது முடிந் ததும் சுருட்டி வைத்துவிட்டு வேறு படத்தை எடுத்துத் தொங்கவிட்டுக் காட்டுவதுமாய் எல்லாப் படங்களையும் ஒரு மணி நேரம் வரை காட்டி உபந்யாசித்து வந்தார். அதுசமயம் தலைவரும் அந்த இடத்திற்குப் போய்ப் பார்த்துக் கொண்டே

அவசியமாய்த் தோன்றிய இடங்களில் தாமும் சிறிது விவரமாய் விளக்கிச் சொல்லிக்கொண்டிருந்தார்.

மாலை 4 மணிக்கெல்லாம் இரண்டாவது வேளை போஜனத்திற்கு மணி அடிக்கப்பட்டது. காலை போஜனத்தைப் போலவே மாலையும் விசேஷமாகப் படைக்கப்பட்டது. மாலை 5 மணிக்கெல்லாம் தொண்டர்படை அங்கிருந்து புறப்படத் தயாராய் வெளியே வந்து நின்றுவிட்டது. வழக்கம்போல் தொண்டர்களின் தொகை சரி பார்க்கப்பட்டு படை அங்கிருந்து புறப்பட்டு இராஜபாட்டைக்கு வந்து தெற்குமுகமாய் மன்னார்குடியை நோக்கிச் செல்ல ஆரம்பித்தது.

சாலை நெடுக இருபுறங்களிலும் அறுவடையான வயல்களாகவே இருந்தன. தலைவர் கையில்லாச் சட்டையை அணிந்துகொண்டும் அங்கவஸ்திரத்தை ஒரு முழம் பின்னால் விரித்துத் தொங்கவிட்டுத் தலையில் கட்டிக்கொண்டும் கையில் பிரம்புத்தடி ஒன்றைப் பிடித்து ஊன்றிக்கொண்டும் வேகமாய் நடந்து போய்க்கொண்டிருந்தார். திருவையாற்றில் காலில் ஏற்பட்டிருந்த காயத்ினால் உண்டான புண் பூராவும் குணமாயிருந்தது. ஆகையால் அவருக்கமைந்த இயற்கை வேகத்தோடு நடந்து போனதில் தொண்டர்கள் பின்னால் ஓட்ட நடையிலேயே போக வேண்டியிருந்தது..

## மன்னார்குடி

மாலை நடக்கவேண்டிய தூரத்தில் சிறிதளவு பூவனூரிலிருந்து இராஜப்பையன்சாவடிக்கு வந்ததன் மூலமாய் காலையிலேயே நடந்தாயிருந்ததாகையால் நடக்கவேண்டிய தூரமும் குறைவாகவே இருந்தது. மன்னார்குடி சமீபம் பாமணி ஆற்றுப் பாலத்தண்டை வந்தபொழுது 6 மணிக்குள்ளாகத்தான் ஆகியிருந்தது. ஆற்றின் பாலத்தை இரண்டு மூன்று நிமிஷங்களில் கடந்த தொண்டர்படை இரு புறத்திலும் தண்டவாளங்களால் காக்கப்பட்ட ரஸ்தா இறக்கத்தில்

யாதொரு பிரயத்தனமுமின்றித் தனக்குத் தானே தள்ளப் பட்டு ஓட்ட நடையில் ஊர்ப்பக்கமாய் நடந்து போயிற்று. சிறிதுநேரத்தில் படை அந்த ஊர் ஆரம்பமாகும் மேலண்டை ரஸ்தாவை அடைந்தது. டாக்டர் ராஜன் அந்த இடத்தில் படையைச் சந்தித்தார். வரவேற்புக்காக ஊர் ஜனங்கள் எதிரில் வந்துகொண்டிருந்தபடியால் அங்கேயே அவர்கள் அணுகுமட்டும் படை நிற்கவேண்டியிருந்தது. அவ்வூர் மஹாஜனங்கள் செய்திருந்த ரெவேற்பு ஏற்பாடுகள் இது வரை நடந்த வரவேற்புகள் எல்லாவற்றிலும் வெகு சிறப் பாக இருந்தது. ஆரம்பத்தில் ஒரு கமான் தொண்டர்களை வரவேற்று நின்றது. வாலிபரும் முதியோரும் தேசீய ஜண்டாக்களை ஏந்திக்கொண்டும் ஜயகோஷம் செய்து கொண்டும் பாரதியாரின் தேசீய கீதங்களைப் பாடிக்கொண் டுமிருந்தனர். ஒழுங்குமுறை தவருமல் ஊர்வலம் நடத்திக் கொண்டுபோக இச்சாசேவகர்கள் நாலைந்து ஜதை இதற் காகவே நியமிக்கப்பட்டிருந்தனர். மேளதாளம் பூர்ண கும்பங்களோடு வந்த வரவேற்பாளர், தொண்டர்கள் நின்ற இடத்திற்கு வந்து தலைவரையும் தொண்டர்களையும் 'வருக வருக' என்று வரவேற்றனர்.

இதற்கிடையில் தொண்டர்கள் தாகசாந்தி செய்து கொள்வதற்காகக் குடங்களில் தண்ணீர் கொண்டுவந்து வழங்கினுர்கள். தொண்டர்களும் தலைவரும் பூமாலைகள் சூட்டப்பட்டனர். அந்த ஊர் சித்திரக்காரர் பரமேஸ்வரம் பிள்ளை என்பவரால் தொண்டர் படைக்கு அளிப்பதற் கென்றே எழுதப்பட்டிருந்த பாரதமாதா படமும், தேசீய ஜண்டாக்களும் வழிகாட்டிக் கொண்டு செல்ல, இச்சாசேவ கர்கள் படையின் இரு பாரிசத்திலும் ஒருவரோடொருவர் கைக்கோர்த்துக்கொண்டு பொதுஜனங்கள் வந்து மேலே விழாதபடி காபந்து பண்ணிக்கொண்டுவர, படை அந்த இடத்தை விட்டு மெதுவாக அழைத்துச் செல்லப்படலா யிது.

உற்சவாதிகள் நடப்பதற்குப் பொருத்தமான மைய மண்டப அலங்காரங்களோடு கூடிய பெரிய திருக்குளம்

ஒன்று அங்கு வழியில் காணப்பட்டது. அதைச்சுற்றிலும் நான்கு தெருக்களும் அமைக்கப்பட்டிருந்தன. படை அதன் வடவண்டைத் தெருவழியாக மேலே சென்றுகொண்டிருந்தது. ஜனங்கள் ஒருவரையொருவர் நெருக்கிக்கொண்டு பெருந்திரளாக முன்னும் பின்னும் ஒரு பர்லாங்கு வரை நீண்டு இரு பாரிசத்திலும் புடைசூழ்ந்துக்கொண்டு நடந்து வந்தனர். இச்சாசேவகர்கள் கூட்டம் கட்டுக்கடங்காது போவதைப் பார்த்து தொண்டர்படைக்கும் ஜனங்களுக்கும் நடுவில் தடித்தக் கயிறு பிடித்துக் கொண்டு வரலாயினர். அந்தத்தெருவையும் கடந்து மீண்டும் படை வலது பக்கமாய்த் திரும்பிச் செல்லலாயிற்று. அந்தத் தெருவில் சுமார் 30 கஜதூரம் போனபொழுது அங்கு ஒரு பந்தல் போடப்பட்டிருந்தது. அந்த இடத்திற்குத் தொண்டர்கள் அழைத்துச் செல்லப்பட்டனர். பந்தலில் வரிசையாய்ப் போடப்பட்டிருந்த விசிப்பலகைகளில் தொண்டர்கள் உட்கார்ந்து கொண்டார்கள். வேண்டியமட்டும் தொண்டர்களுக்குப் பால் வழங்கப்பட்டது. பாலில் குங்குமப்பூ முதலிய வாசனைத் திரவியங்கள் கலந்துவெகு சிரத்தையோடு பானம் தயாரிக்கப்பட்டிருந்தது. வாழைப்பழம், கற்கண்டு, பப்பளிமாஸ் கீத்துகள் வழங்கப்பட்டு வந்ததை தொண்டர்கள் சாப்பிடுவாரும், பையில் போட்டுக்கொள்வாருமாயிருந்தனர். பாலை மட்டும் ஒரு தடவைக்கிருதடவை தாகத்திற்கு வேண்டிய மட்டும் சிலர் பருகினர். அங்கு ஓர் அச்சடித்த வரவேற்புப் பத்திரம், ரூ. 150 பணமுடிப்புடன் வாசித்துக் கொடுக்கப்பட்டது. சிறிது நேரம் அங்கு தாமதித்திருந்த பிறகு அங்கிருந்து திரும்பி வந்த வழியாகவே சிறிதுதூரம் சென்று நகர்ப்பக்கமாய்ச் செல்ல ஆரம்பித்தது.

காந்த விளக்குகள் கூடவே வந்து கொண்டிருந்தன. வழி நெடுக வரவேற்புகள் நடந்தவண்ணமாகவே இருந்தன. கடைத்தெருவைக் கடந்து செல்லுங்கால் நடந்தேறிய வரவேற்பு உபசாரங்கள் என்றென்றைக்கும் மறக்க முடியாதவாறு இருந்தன. ஒவ்வொரு கடைக்கு முன்னாலும் பல நிறமுள்ள லேசுகாகிதங்கள் ஒட்டிய வர்ண விளக்குகள்

தொங்கிக் கொண்டிருந்தன. மேலே ஒன்றரை ஆள் உயரத்தில் காகிதத் துண்டுகள் மூலையாய் நறுக்கி ஒட்டப்பட்ட தோரணங்கள் தெருப்பூராவும் கட்டப் பட்டிருந்தன. ஒவ்வொரு கடைக்காரரும் தங்கள் தங்களுக்குத் தோன்றிய விதமாய் உபசாரங்களை நிகழ்த்தி வந்தார்கள். ஒரு கடைக்கு முன்னால் வெறும் தாமரை இதழ்களாகவே தூவினார்கள். ஒரு கடைக்கு முன்னால் வெறும் மல்லிகை மலர்களாகவே வருஷித்தார்கள்; ஒரு கடைக்கு முன்னால் ரோஜாபூக்களாகவே பொழிந்தார்கள்; ஒரு கடைக்கு முன்னால் வெறும் மாலைகளாகவே கொண்டுவந்து ஒவ்வொரு தொண்டருக்கும் சூட்டிக்கொண்டு போனார்கள்; ஒரு கடைக்கு முன்னால் பன்னீரைக் காந்தவிளக்கின் அடிக்குடத்தில் ஊற்றிக் காற்றடித்து வைத்துக்கொண்டு தொண்டர்கள் வந்தசமயம் கம்பியின் துவாரத்தைத் திறந்துவிட்டு பன்னீர் மழையாய்ச் சிதறினார்கள். எந்தத் தெருவில் போனாலும் தோரணங்கள் காணப்பட்டன. ஒவ்வொரு வீட்டின் முன்னால் வரும் பொழுதும் ஜனங்கள் ஊர்வலத்தில் புதிதாய் வந்து கலந்து கொண்டே இருந்தனர். கூட்டம் வரவர நெருக்கமாய்க் கொண்டே வந்ததல்லாமல் குறைந்த பாடில்லை. இடையிடையே காலோய்ந்து இரண்டொருவர் பிரிந்து வீட்டிற்குப் போவதாகக் காணப்பட்டாலும் கூட்டம் குறையாமல் வழி நெடுகக் கூடிக்கொண்டே இருந்தது. ஒரு பெருநதியினின்றும், விவசாயத்திற்காக சிறிது பாகம் வாய்க்கால்களின் மூலமாய் நிலங்களுக்குப் பாய்ச்சுவதால் அதன் வெள்ளம் எப்படிக் குறைய மாட்டாதோ அது போலவே வளர்ந்து கொண்டே போயிற்று. வரவேற்பு ஏற்பாடுகளில் முன்னணியில் நின்றவர்கள் அந்தவூர் டாக்டர் பி. வி. முத்துகிருஷ்ணய்யர், மஹாலிங்கம் பிள்ளை, என். ஜி. பொன்னுசாமி பிள்ளை குஞ்சு முதலியார், சோமசுந்தரம் முதலியோராவர்.

ஜாகை ஏற்படுத்தியிருந்த இடம் அந்த ஊருக்குக் கீழ் பாரிசத்தில் கோபிநங்குளத்தின் வடகரையில் அமைந்திருந்தது. ஊர்வலம் சுற்றிக்கொண்டு அந்த இடத்திற்குப் போன சமயம் இரவு 8 மணிக்கு மேல் ஆகியிருந்தது. அந்த இடத்

திற்கருகில் பாமணி ஆறு இருக்கிறது. ஜாகையிலிருந்து சற்று தூரத்தில் படித்துறை ஒன்று ஆற்றில் இறங்குகிறது. அதன் வழியாய்த் தொண்டர்கள் ஆற்றுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். 50 கஜ அகலமுள்ள அந்த ஆற்றின் அகலத்தில் பெரும்பாகம் ஜனங்கள் ஆவலே வடிவாய் அமர்ந்திருந்தனர். படித்துறையிலிருந்த 40, 50 படிக்கட்டு களில் பூராவும் அடுக்கடுக்காய் ஜனங்கள் உட்கார்ந்திருந் தனர். படித்துறைக்கு சற்று முன்னால் ஆற்றுப்படுகையில் தலைவர் இருந்து உபநியாசம் நடத்துவதற்கு மேஜை நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. தொண்டர்கள் அதன் வலது பாரிசத்தில் சற்றுத் தள்ளி உட்கார்ந்திருந்தனர். அந்த ஊர் முனிசிபல் தலைவர் ஸ்ரீமான் மஹாலிங்கம் பிள்ளை அக்கிராசனம் வகித்துக் கூட்டத்தை நடத்தி வைத்தார். பிராத்தனைக்குப்பின் தலைவர் எழுந்து அந்த ஊர் மஹா ஜனங்களின் உற்சாகத்தையும், வரவேற்பு ஏற்பாடுகளின் பெருமிதத்தையும் பற்றி வெகுவாகப் புகழ்ந்து சிறிதுநேரம் பேசியபின், உப்பு சத்தியாக்கிரக தத்துவத்தையும், முடிவு வரையில் ஜனங்கள் இதே உற்சாகத்துடன் தங்களை ஆதரிக்கவேண்டியதன் அவசியத்தையும் உபன்னியாசம் செய்து வந்தார்.

தலைவருடைய உபன்னியாசம் முடிந்தபின்பு அந்த ஊர் வாலிபர் ஸ்ரீமான் பாஷ்யம் என்பார் வைரக்கடுக்கனும், ஒரு பெண்மணி (சப்–ரிஜிஸ்டிரார் ராமகிருஷ்ண பிள்ளை மகள் என்று சொல்லிக்கொண்டார்கள்) கழுத்தில் அணிந்திருந்த பிரஞ்சு சங்கிலி மாலையையும் நிதிக்காக வழங்கினார்கள். இவையெல்லாம் ஏலம் கூறப்பட்டு விற்று முதல் செய்யப் பட்டன.

உபன்னியாசம் முடிந்தபிறகு மன்னார்குடி வாசிகளின் சார்பாக 723 ரூபாய் அடங்கிய பணப்பைக் கொடுக்கப் பட்டது. மூலங்குடி வாசிகள் சார்பாக ரூ. 250 தரப்பட்டது வடுவூர், புத்தகரம், வடபத்தூர் முதலிய இடங்களிலிருந்து பணமுடிப்புகள் தனித்தனியாக கொடுக்கப்பட்டன. சுமார்

ஆறு பேர் தங்கள் வைரக் கடுக்கன்களையும் சாதாரண கடுக்கன்களையும் தந்தனர். சித்திரம் எழுதும் பரமசிவன் தந்த பாரதமாதா படம் ஏலத்தில் ரூபாய் 125 க்கு விடப்பட்டது. ஸ்ரீமதி பாலாம்பாள் அம்மாள் பத்து பவுன் பெறுமான தங்கச் சங்கிலியொன்றைத் தந்தனர். சில நகைகளைத் தவிர்த்தது மன்னார்குடியில் மொத்தம் ரூபாய் 1500 வசூலாயிற்று.

இங்கு நன்னிலம் தாலூகா மிராசுதாரரான தலையூர் நாராயணசாமி ஐயர் இந்த முதலாவது தொண்டர் படையில் 102-வது தொண்டராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார். இவர் தம் தாலூகாவில் ரூ. 500-ம், 20 மூட்டை அரிசியும் சத்தியாக்கிரக இயக்கத்திற்கு வசூலித்து வந்தார். தொண்டர்கள் தங்கள் குல்லாய்களை ஏந்திக்கொண்டு உண்டி வசூல் செய்ததில் பெருந்தொகையாகவே சேர்ந்தது. எல்லாம் கூடி ஸ்ரீ க. சந்தானம் அவர்களை இப்படையில் அனுப்பியிருந்த அந்த ஊர்வாசிகளின் உற்சாகத்திற்கு எல்லை காணமுடியாது போலிருந்தது. கூட்டம் முடிய அன்றிரவு 10 மணி சமயமாயிற்று. கூட்டம் கலைந்துபோன பின்பு தொண்டர்கள் ஜாகைக்குச் சென்று மூட்டைகளை வைத்துவிட்டு கரண்டி கைப்பாத்திரங்களைக் கொண்டு தேகபாதை தீர்த்துக்கொள்ள வெளியிடங்களுக்குச் சென்று இரண்டொரு நாழிகைக்குள் திரும்பிவந்தனர். பதினொரு மணிக்கெல்லாம் எல்லோரும் படுக்கையை விரித்து நித்திரையில் மூழ்கினர்.

காலை 5-மணிக்குமேல் சங்கூதி மணியடித்ததும் தொண்டர்கள் எழுந்து காலைக்கடன்களை முடித்துக் கொண்டனர். பிரார்த்தனை வழக்கம் போல் நடந்தேறியது வழி நடக்கவேண்டிய அலுவல் அன்று கிடையாது. அதனால் சற்றுத் தாமதமாகவே எல்லோரும் எழுப்பிவிடப்பட்டிருந்தனர். எனவே பிரார்த்தனை முடிந்த நேரத்திற்குப் பொழுதும் நன்றாய்ப் புலர்ந்திருந்தது. இட்டிலி வாழைப்பழம் வகையராவுடன் சிற்றுண்டி தயாராக வந்தது. பதினைந்து

நிமிஷ நேரத்தில் சிற்றுண்டி ஜோலியும் முடிந்தது. சமையலுக்காக அந்தச் சத்திரத்தின் ஒருபாகத்தில் அடுப்புகள் மூட்டி அரிசி அரித்துப் போடப்பட்டுக்கொண்டிருந்தது. காய்கறிகள் நறுக்கி அம்பாரமாய்க் குவித்திருந்தனர்.

தொண்டர்களில் பெரும்பாலோர் அங்கு க்ஷவர ஜோலியை முடித்துக் கொள்ளலாயினர். பாத்திரத்தில் தண்ணீர் எடுத்துக்கொண்டு ஒவ்வொரு நாவிதனைச் சுற்றியும் டஜன் கணக்கில் உட்கார்ந்திருந்தனர். சிலர் அப்பொழுதே குளத்தில் இறங்கி ஸ்நானம் முடித்துக்கொள்ளலாயினர். முந்தினநாள் இராஜப்பையன்சாவடியில் கிடைத்த குளத்தைக் காட்டிலும் மூன்று நான்கு மடங்கு விஸ்தாரமுள்ள குளம் அடுத்த தங்குமிடத்திலேயே கிடைத்ததைக் குறித்துத் தொண்டர்கள் தாங்கள் அடைந்த சந்தோஷத்தின் பெருமிதத்தைத் தண்ணீரில் குதித்து ஆடி நீந்துவதன் மூலமாய் நன்ருய்க் காண்பித்துக்கொண்டிருந்தார்கள். க்ஷவரம் முடித்துக்கொண்டவர்களும் சிறுகச் சிறுக வந்து ஸ்நானம் பண்ண ஆரம்பித்தனர்.

சத்திரத்திற்கு எதிரில் நான்கு படித்துறைகள் இருந்தன. ஒவ்வொரு படித்துறையிலும் தொண்டர்களே நிறைந்திருந்தபடியால், வழக்கமாய் வந்து ஸ்நானம் பண்ணிப் போகும் அவ்வூராருக்கு சற்று இடைஞ்சலாகவே இருந்தது. என்ருலும் அவர்கள் அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் ஒதுக்கமாய் நின்று சீக்கிரம் ஸ்நானம் முடித்துக்கொண்டு, தொண்டர்களின் குதூகலத்தைக்கண்டு ஆனந்தமடைந்தவராய்க் கரையேறிச் சென்றுகொண்டிருந்தனர்.

மணியடிக்கும் கடமையைக் கடிகை தவருமல் அட்டவணைக் கிரமப்படி அனுசரித்து அடித்துவந்த ஸ்ரீமான் மணி, முதல் போஜனத்திற்கு மணியடித்துவிட்டார். உடனே எல்லோரும் எழுந்து பந்தியில் போய் அமர்ந்தனர். பின்னுடி வந்தவர்கள் காலியாய்க் கிடந்த இலைகளைப் பூர்த்தி செய்தனர். பிரார்த்தனை நடத்தவேண்டிய

ஸ்ரீ சுப்பையா பந்தியின் முகப்பில் உட்கார்ந்திருந்தார். இலைகளில் பதார்த்தங்களும் சாதமும் பரிமாறியானதும் நெய் போடப்பட்டு வந்தது. பிறகு பிரார்த்தனை ஆரம்பமாயிற்று. அது முடிந்ததும் எல்லோரும் போஜனம் அருந்தலாயினர். பலவித கறிவகைகள் படைத்திருந்த இலைகளைத் தொண்டர்கள் பார்த்துக்கொண்டே அறுசுவை ஒவ்வொன்றிலும் இரண்டு பதார்த்தங்கள் இருந்தபடியால் எதை முன்னே சாப்பிடுவது, எதைப் பின்னே சாப்பிடுவது என்று நிச்சயிக்க மாட்டாதவர்களாய் மெதுவாய்ச் சாப்பிட்டுக்கொண்டிருந்தனர். சிலர் ஒவ்வொரு கவளத்திற்கும் கைக்கு எட்டிய பதார்த்தங்களை வரிசையாயெடுத்து உண்டு ஒவ்வொன்ருய்க் காலிபண்ணிக்கொண்டே வந்தனர். சிலர் ஒருமுறையாக நெய்சாதத்தின் போது காரமுள்ள சட்னி வகையராக்களையும், சாம்பார் சாதத்தின்போது பருப்பு வகையராக்களையும் தொட்டுக்கொண்டு சாப்பிட்டவராயிருந்தனர். ஒரு சிலர் ‘அன்னம் ந நிந்த்யாத்’ என்ற நீதியை மறந்தவர்களாய் ஒவ்வொரு பதார்த்தத்தையும் கிண்டி அதிலுள்ள தங்கள் வாய்க்கு ருசியாய்த் தோன்றிய வஸ்துக்களை மாத்திரம் பொறுக்கிச் சாப்பிட்டுக்கொண்டு இலை பூராவும் பாக்கியை பரப்புவதாயிருந்தனர். சிலர் சந்தேகத்திற்குச் சாதம் வரும்பொழுது எதிரிலும் பக்கத்திலும் உள்ளவர்கள் போட்டுக்கொள்கிருர்களா இல்லையா என்று கவனித்துத் தாங்கள் சாதம் வைத்துக்கொள்வதாயிருந்தனர். சிலர் தங்கள் மீதூண் விருப்பமுடையவர்களல்ல என்பதைக் காட்டுவதுபோல் எந்தப் பதார்த்தம் வந்தாலும் கொஞ்சமாய்ப் போடுங்கள் என்று சொல்லிக்கொண்டே இருந்தனர். இந்தவிதமாக அரைமணி நேரத்திற்குள்ளாகவே ஒரு பந்தி முடிந்து தொண்டர்கள் இலைகளை எடுத்துக்கொண்டுபோய் அதற்கென்று தோண்டியிருந்த குழியில் போட்டு வந்தனர். இடம் சுத்தி செய்யப்பட்ட பின் இரண்டாவது பந்தியும் அமர்ந்து மீண்டும் கால்மணி நேரத்திற்குள்ளாக அதுவும் முடிவுற்றது.

இந்தச் சத்திரத்துக் கட்டிடம் ஒரு பாகம் நெடுக தாழ்வாரமாகவே இருந்தது. மற்றொரு பாகம் கட்டிடமாக இருந்தது. இங்குதான் சமையல் வகையரு காரியாதிகள் நடந்தன. போஜன ஜோலி முடிந்ததும் தொண்டர்கள் ஜாகைக்குப்போய் பத்திரிகை படிப்போரும் தக்ளி நூற் போரும் இளைப்பாறுவோருமாயிருந்தனர்.

அன்று 12 மணி சுமாருக்கு மதுவிலக்குப் பிரசாரத்திற் காகச் சில தொண்டர்கள் படங்களுடன் கடைத்தெருப் பக்கமாய் அனுப்பப்பட்டனர். அந்த ஊரில் உற்சவத் திற்காகப் போடப்பட்டிருந்த பந்தல்கள் மூலைக்கு மூலை காணப்பட்டன. மூன்றும் தெருவும் மற்றொரு தெருவும் சந்திக்குமிடத்தில் பெரிய பந்தல் போட்டு நிழல் மிகவும் குளிர்ச்சியாயிருந்தது. பிரசாரத்திற்காகப் போன ஐந்தாறு பேர்களும் அந்தப் பந்தலுக்கே போய்ச் சேர்ந்தார்கள். பந்தல் கால்களோடு வரிசையாகப் படங்கள் கட்டித் தொங்க விடப்பட்டன. அன்று பிரசாரத்திற்காக ஸ்ரீ டி. ஆர். பத்மநாபன் அனுப்பப்பட்டிருந்தார். திருச்செங்கோடு ஆசிரமவாசியான ஸ்ரீமான் வெங்கட்ராமனும் இவருக்குத் துணையாக அனுப்பப்பட்டிருந்தார். வழக்கம் போல் ஒவ் வொரு படங்களிலுமுள்ள தாத்பரியம் விளக்கிச் சொல்லப் பட்டது. நாலு தெருக்கள் கூடுமிடமாதலால் கூட்டம் ஏராளமாகக் கூடியிருந்தது. ஒருமணி நேரம் வரை அங்கு பிரசாரம் நடந்தேறிய பிற்பாடு தொண்டர்கள் படங்களை அவிழ்த்துச் சுருட்டிக் கொண்டு ஜாகைக்குத் திரும்பினர்.

இவர்கள் போய்ச் சேர்ந்த சமயம் ஜாகையில் மௌனம் ஆரம்பமாயிருந்தது. தலைவர் குளத்துப் படித்துறை மேட்டில் போடப்பட்டிருந்த சாய்மான நாற்காலியில் உட்கார்ந்து பத்திரிகை வாசித்துக் கொண்டிருந்தார். அரைமணி நேரத்திற்குள் மௌனம் சமாப்தியாயிற்று. பிறகு பத்திரிகை விஷயங்கள் முக்கியமானவை வாசிக்கப்பட்டன.

இதற்குள் மணி 4 ஆகிவிட்டது. இரண்டாவது போஜனத் திற்கு மணியடிக்கப்பட்டது. என்ன! இதற்குள் சாப்பாடு

ஞயாராய் விட்டதே என்று தொண்டர்கள் ஆச்சரியப் பட்டுக்கொண்டே எழுந்தனர். 'காலம் என்ன மாயமாய்ப் பறந்து கொண்டிருக்கிறது! பிரயாணம் புறப்பட்டது நேற்று போல் இருக்கிறது. இன்றைக்குப் பதினேரு நாள் ஆய் விட்டதே, எங்களையறியாமல் நாளும் போய்க்கொண்டிருக் கிறது. பிரயாணமும் ஆகிக்கொண்டிருக்கிறது. காலைச் சாப்பாடு 11 மணிக்குச் சாப்பிட்டோம்; உண்ட சாதம் ஜீரணமாவதற்கு வேலை நடப்பதைத் தவிர வேறொன்று மில்லை. பகலிலேயே இரண்டு வேளை போஜனமும் முடிந்து போக வேண்டுமென்று பிரயாணத்தில் திட்டம் செய்து விட்டார்கள். என்ன சங்கடமாயிருக்கிறது. போகுமிடங்களி லெல்லாம் பலமான விருந்துகளே நடந்தேறி வருகின்றன. இப்பொழுது மாலை போஜனத்திற்கு மணி அடித்திருக்கிறது. இலையில் போய் உட்கார்ந்தால் என்னென்ன பக்ஷணங்கள் படைக்கப் போகிறார்கள் என்று தெரியவில்லையே!' என்று இவ்வாறெல்லாம் நினைத்துக்கொண்டு தொண்டர்கள் போஜனத்திற்குப் போய் உட்கார்ந்தனர்.

தொண்டர்கள் பயந்துக்கொண்டே இலையில் போய் உட்கார்ந்ததற்கும் அப்பொழுது படைக்கப்பட்ட விருந்துக் கும் நிரம்பப் பொருத்தமிருந்தது. பழங்களில் மட்டும் மூன்று நான்கு தினுசுகள். பலாப்பழமென்ன, வாழைப்பழ மென்ன, பேரீச்சம்பழமென்ன, பக்ஷணங்களில் லட்டு, மிட்டாய், உருளைக்கிழங்கு பஜ்ஜி, வடை, அப்பளம், முதலியவை கறிபதார்த்தங்களில் பொரியல், வறுவல், பச்சடி, கூட்டு இன்னும் பலவித கறிவகைகள்; அகப்பை கொண்டு நெய்யைக் குழம்பு ரசம்போல் படைத்து வந்த நேர்மையென்ன; சித்திரான்னங்களென்ன: எல்லாம் கூடி அன்றைய விருந்தில் ஒவ்வொரு தொண்டரும் பசியில்லாம லும் பதார்த்தங்களைப் பார்த்தபின் சாப்பிடாதிருக்க மன மில்லாமலும் பட்டபாட்டை என்னவென்று சொல்லலாம். இவ்வாறெல்லாம் செய்யப்போகிறோம் என்று தெரிந்திருந் தால் தலைவர் அவசியம் வேண்டாமென்று சொல்லியிருப் பார்.

அன்று மாலை 5 மணிக்குள்ளாக எல்லோரும் சரிபார்க்கப்பட்டதும் படை அங்கிருந்து புறப்பட்டது. நகரத்தின் பல தெருக்களின் வழியாய்ச் சென்ற படை கடைசியாக ஊர்க்கோடியை அடைந்து தென்கிழக்கு முகமாய் மேலே நோக்கிச் செல்ல ஆரம்பித்தது. தொண்டர்களில் வயோதிகராயிருக்கப் பட்டவர்கள் நாலைந்து பேர் இருந்தனர். அவர்களில் திண்டுக்கல் ஸ்ரீமான் டி. ஆர் மஹாதேவய்யர் தமது மெல்லிய சரீரத்தோடு சிரமமென்பதே அறியாதவராய் நடந்து போய்க் கொண்டிருந்தார். இராஜபாளையம் ஸ்ரீமான் லெட்சுமண ராஜாவும் 55-க்கு மேல் சென்றவராயிருந்தும் வழிநடையினால் களைப்போ அசதியோ அடைபவராகக் காணப்படவில்லை. ஸ்ரீ மூப்பனாரும் நடப்பதற்குச் சிறிதும் பின்தங்காதவராகவே இருந்தார். ஆனால் இன்னொரு வயோதிகர் தொண்டராக வந்து சேர்ந்திருந்தார். இவரைப் பார்த்தபொழுதுதான் தொண்டர்களுக்கெல்லாம் இரக்கம் உண்டாய்க்கொண்டிருந்தது. இவர் காவி வேஷ்டியை உடுத்திக்கொண்டு உடம்பில் துவாதசநாமங்களுடன் ஒரு தடியில் சிறு தேசீயக்கொடியைத் தாங்கிக் கொண்டு வந்திருந்தார். இவரைப் பார்த்தால் அந்தநாளில் இராமானுஜாசாரியார் திக்விஜயம் செய்யப் புறப்பட்ட மாதிரியாகவே இருந்தது. மனதில் ஏற்பட்ட ஆவேசத்தினால் படையில் வந்து சேர்ந்திருந்தார். ஆனால் இவருடைய தேகம் இந்தப்பிரயாணத்திற்குச் சிறிதும் ஏற்றதாயில்லாதிருந்தது. வலது குதிகாலில் இவருக்கிருந்த வலி உபத்திரவத்தால் நொண்டி நொண்டி மெதுவாய் நடந்து வருவதில் மற்ற தொண்டர்களுக்கும் இடைஞ்சலாகவே இருந்து வந்தது. ஆகையால் இவர் சாமான் வண்டியில் ஏற்றிவிடப்பட்டு அதிலேயே பிரயாணஞ் செய்துவந்தார். இவரைத் தவிர ஓர் இளஞ்சிறுவன் அழகர்சாமி என்பவனும் படையில் வந்து கொண்டிருந்தான். அவனும் சில இடங்களில் வண்டியேறுவதும் சில இடங்களில் நடந்து வருவதுமாயிருந்தான்.

## தட்டாங்கோவில்

நிற்க படை புறப்பட்ட ஒரு நாழிகை நேரத்திற்குப்பின் வழியில் தட்டாங்கோவில் என்ற ஊர் குறுக்கிட்டது. அங்கு முள்ளியாற்றுப் படுகையில் நீண்ட பந்தல் ஒன்று அந்த ஊர்வாசிகளால் வரவேற்புக்காகப் போடப்பட்டிருந்தது. அங்கு அழைத்துச் செல்லப்பட்ட தொண்டர்கள் பந்தலில் விசிப்பலகைகளின் மேல் உட்கார்ந்துகொண்டனர். பாலும் பப்ளிமாஸ் கீற்றுகளும் கற்கண்டும் அங்கு வழங்கப்பட்டன. ஏற்கனவே மன்னார்குடியில் வயிறுகொண்டமட்டும் உண்டு தெவிட்டிப் போயிருந்தாலும் அந்த ஊராரின் உபசரிப்பை ஊதாசீனம் பண்ணுவது போல் ஆகிவிடுமோ என்ற பயத்தால் பாலைமட்டும் பானம் செய்துவிட்டு மற்றவையெல்லாம் பத்திரமாய்ப் பையில் போட்டுக்கொண்டனர். இதற்கிடையில் தலைவர் ஒருப்பக்கமாய்ச் சென்று அந்த ஊர்வாசிகளுக்குச் சிறிது உபன்னியாசம் நிகழ்த்தினர். அவர் திரும்பியதும் படை அந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டது. அப்பொழுது பூராவும் இருள் சூழ்ந்திருந்தது. ஹரிக்கேன் விளக்கு ஒளியில் படைமேல் நோக்கிச் சென்றுகொண்டிருந்தது.

புறப்பட்ட அரைமைல் தூரத்தில் மீண்டும் இரண்டு ஊர்கள் குறுக்கிட்டன. ரஸ்தாவோடமைந்த சேரி என்ற ஊரில் பந்தல் போட்டுக்கொண்டு அந்த ஊர் ஜனங்கள் ஆதித்திராவிடர் சகிதமாக வரவேற்கக் காத்திருந்தனர். சிறு பையன்கள் கூட்டமாய்க் கூடி தேசீய கீதங்களைப் பாடிக்கொண்டும் குதூகலமாய் ஆடிக்கொண்டும் வரவேற்றனர். அங்கு படை சிறிது நேரம் தாமதிக்கப்பட்டது. சற்று தூரம் தள்ளியிருந்த கண்டமங்கலம் ஊர்வாசிகள் எல்லோரும் ஆண் பெண் குழந்தைகள் படையைக் காண ரஸ்தாவுக்கு வந்து நின்று வரவேற்பில் கலந்துகொண்டிருந்தனர். படை மீண்டும் அந்த இடத்திலிருந்து புறப்பட்டு வெகு வேகமாக நடந்து செல்லலாயிற்று.

## ஆதிச்சபுரம்

அடுத்த தங்குமிடம் ஆதிச்சபுரம். மன்னார்குடிவரை கும்பகோணத்திலிருந்து தெற்குமுகமாகவே வந்த இராஜபாட்டை, மன்னார்குடியிலிருந்து கிழக்குமுகமாய்த் திருப்பியிருந்தது. தங்குமிடங்கள் ஒன்றுக்கும் மற்றொன்றுக்கும் உள்ள தூரம் சற்றேறக்குறைய 5மைலாகவே இருக்கும்படியமைக்கப்பட்டிருந்தது. எனவே மன்னார்குடிக்கும் ஆதிச்சபுரத்திற்கும் இடையில் உள்ள தூரம் சுமார் 5மைல்தானிருக்கும். வேகமாய் நடந்து சென்றால் 3¾நாழிகை வழிக்குமேல் இராது. ஆனால் வழியில் நடந்தேறிய மண்டகப்படிகளிலெல்லாம் தங்கித்தங்கிப் போகவேண்டியிருந்தபடியால் வழிநடை தாமதப்பட்டுக்கொண்டே பாதி தூரம் நடப்பதற்குள்ளாகப் பூராவும் இருண்டுபோயிருந்தது. குறித்த நேரத்திற்குள் குறிப்பிட்ட இடங்களுக்குப் போய்ச் சேரவேண்டுமென்பதே தலைவருடைய நோக்கமாயிருந்தாலும் உற்சாகமுள்ள ஜனங்களை அலட்சியம் பண்ணிவிட்டுப் போவதும் உசிதமாய்த் தோன்றவில்லை. அன்று சேரி என்னும் ஊரிலிருந்து படை புறப்பட்டபொழுது இரவு சுமார் 7-30மணி சமயமாயிருந்தது. படை வெகு வேகமாய்ப் பாதங்கள் தரையில் படுமோ படாதோ என்ற முறையில் போய்க்கொண்டிருந்தது. இதோ வந்துவிட்டது அதோ வந்துவிட்டது என்று சொல்லிக்கொண்டே படை நடந்து போய்க் கொண்டிருந்தது. இருள் நேரமானபடியால் பூச்சி பொட்டுக்கள் ரஸ்தாவின் ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்திற்கு ஓடிக்கொண்டிருந்தன. தொண்டர்களின் கால்கள் தரையில் படும் சப்தத்தைத் தவிர வேறு சப்தமின்றி படை போய்க் கொண்டிருந்தது. காப்டனும் படையை ஒழுங்குபடுத்திக் கொண்டே போகும் அலுவலை நிறுத்தி விட்டு படையில் கலந்து போய்க் கொண்டிருந்தார். தொண்டர்கள் தோளோடு இருந்த தடிகளை ஒரு தோளிலிருந்து மறுதோளுக்கு மாற்றிக்கொண்டே நடந்து போயினர். காலில் செருப்பு மாட்டியிருந்தவர்கள் கல் தடுக்கிய

இடங்களில் காலிலிருந்து செருப்பு நழுவிவிட அதை எடுத்துக் கொள்வதற்காகப் படையிலிருந்து சற்று விலகி மீண்டும் படையில்வந்து சேர்ந்து கொண்டிருந்தனர். அங்கங்கே தொண்டர்கள் தோளோடு மாட்டியிருந்த செம்பு முதலான பாத்திரங்கள் தரையில் விழுந்து உருண்டு போய்க் கொண்டிருந்தன. அவற்றைத்தேடி எடுத்துக் கொண்டு தொண்டர்கள் ஓடோடியும் வந்து படையில் சேர்ந்து கொண்டிருந்தனர். கனமான மூட்டை சுமந்து வந்தவர்கள் தங்கள் மூட்டையை அடுத்திருந்த சிநேகிதர் கையில் கொடுத்து அவர்களிடமிருந்த லேசான மூட்டையைத் தாங்கள் மாற்றிக் கொண்டிருந்தனர். இந்த விதமாக வியாழக் கிழமை மாலைவேளை கழிந்து வெகு நேரமான பிற்பாடும் தொண்டர்படை பிரயாணத்திலேயே இருந்தது.

அரைமணி நேரத்திற்குள்ளாக ஆதிச்சபுரமும் நெருங்கி விட்டது. அந்த ஊர்ப்பிரமுகர்கள் வரவேற்புக்காக ஊர் தொடக்கத்தில் வந்திருந்தனர். ஆதித்திராவிட மக்களும் கொம்பு தப்பட்டைகளுடன் வந்திருந்தனர். படை அவர்களை நெருங்கியதும் பல தினுசு வாத்தியங்களும் சேர்ந்த கலம்பகமான ஓசை அங்கு துவக்கமாயிற்று. முள்ளியாற்றுப் படுகையிலேயே தொண்டர்கள் இரவில் தங்குவதற்காகப் பெரிய பந்தல் ஒன்று போடப்பட்டிருந்தது. வரவேற்பு அளிப்பதில் பங்கேற்றுக் கொண்டிருந்த அந்த ஊர் பிரமுகர்கள் ஸ்ரீமான் கல்யாணம் முதலியோர் ஆவர். அவர் படையை ஊர்வலமாக அழைத்துச் சென்று முள்ளியாற்றுக்கேப் போயினர். அந்த ஆற்றின் அகலம் பூராவிலும் கரையின் பேரிலும் ஜனங்கள் கூட்டமாய்த் திரண்டு உட்கார்ந்திருந்தனர். தலைவர் இருந்து உபன்னியாசம் செய்வதற்காக ஆற்றின் வலதுகரையில் மேடை தயாரிக்கப் பட்டிருந்தது. ஊர்வலத்திற்காக வந்திருந்த விளக்குகள் கூட்டத்தில் அங்கங்கே வைக்கப்பட்டன. தொண்டர்கள் சற்று தள்ளி ஆற்றுப் படுகையிலேயே வரிசையாய் உட்கார்ந்து கொண்டனர். உட்கார்ந்ததும் சில தொண்டர்கள் நடந்துவந்த அலுப்பினுலும் வயிற்றிலிருந்த கனத்தினுலும் மெதுவாகத் தூங்க

ஆரம்பித்தனர். அந்த ஆறு ஒரு வாய்க்காலின் அளவுதான் இருந்தது. அதில் தண்ணீர் ஒரு சொட்டுக்கூட கிடையாது. மணலில் வெகு ஆழம் தோண்டினலல்லாது ஜலம் கிடைக்காது போலிருந்தது. தொண்டர்களோ தாகத்தினல் தவித்துக்கொண்டிருந்தனர். சிறிது நேரத்தில் நாலைந்து குடங்களில் தண்ணீர் கொண்டுவரப் பட்டது. தொண்டர்கள் தாகசாந்தி செய்து கொண்டவர்களாய் அங்கே உட்கார்ந்திருப்போரும் இளைப்பாறுவோருமாயிருந்தனர்.

இதற்கிடையில் ஆற்றங்கரையில் அந்த ஊர்ப்பிரமுகர்கள் வரவேற்புப் பத்திரம் வாசித்துக் கொண்டிருந்தனர். அது முடிந்ததும் பிரார்த்தனை நடந்தேறியது. பிறகு தலைவர் எழுந்து வழக்கமாய் வழிநெடுகச் சொல்லி வந்த விஷயங்களையே எடுத்து முக்கால்மணி நேரம்வரை உபன்னியாசம் செய்தார்.

அன்று கூட்டம் முடிய இரவு பத்து மணி சமயமாயிருக்கும். ஜனங்களெல்லோரும் கலைந்துபோய்விட்டனர். தலைவரும் எழுந்து சற்றுதூரம் தள்ளியிருந்த பந்தலுக்குப் போனர். தொண்டர்கள் ஆற்றுப்படுகையிலேயே நன்ருகத் தூங்க ஆரம்பித்திருந்தனர். அப்பொழுது காப்டன் வந்து எல்லோரும் எழுந்து பந்தலுக்கு வந்துவிடவேண்டுமென்று தலைவர் அழைப்பதாகக் கூப்பிட வந்தார். தொண்டர்கள் பெரும்பாலோர் ஆற்றில் படுத்துக்கொள்ளுகிறேமென்று சொல்லிப்பார்த்தனர். ஜாகை வெகுதூரத்திலிருக்கும்; தூக்கவேளையில் நடந்துபோவதென்ருல் யாரால் முடியுமென்று அவர்கள் அப்படிச் சொன்னர்களானலும் தலைவர் அழைக்கிருர் என்று சொல்லவும் பெரும்பாலோர் எழுந்து செல்ல ஆரம்பித்தனர். மற்றவர்களும் அவர்களைத் தொடர்ந்து சென்றனர்.

அவர்கள் பயந்ததுபோல் ஜாகை வெகு தூரமாய்த் தள்ளி அமைக்கப்படவில்லை. கரையின்மேல் ஏறியதும் பந்தல் தென்பட்டது. அங்கு போய் எல்லாத் தொண்டர்களும்

முட்டைகளைத் தலைமாட்டில் வைத்துக்கொண்டு அன்றிரவைக் கழித்தனர்.

மறுநாள் அதிகாலை 4 மணிக்கு முன்னதாகவே வழக்கம் போல் சங்கூதி மணியடிக்கப்பட்டதும் தொண்டர்கள் எழுந்து கைப்பாத்திரங்களையும் கரண்டிகளையும் ஏந்திக்கொண்டு வெளியே சென்றனர். அமாவாசை இன்னும் மூன்று நாட்களே இருந்தபடியால் அந்நேரத்திற்கும் சந்திரன் உதிக்கவில்லை. நட்சத்திரங்களின் ஒளியிலேயே தடவிக்கொண்டு போயினர். அந்த ஊர்வாசி ஒருவர் தண்ணீர் இருந்த இடத்திற்குச் சமீபமாய் அழைத்துக்கொண்டு போனார். அந்த இடம் ஜாகையிலிருந்து சுமார் ஒரு பர்லாங்கு தூரத்திலிருந்தது. தொண்டர்கள் அங்கிருந்த குளத்திலிருந்து தண்ணீர் மொண்டுகொண்டு பக்கத்து வயற்காடுகளில் வெளிக்குப் போயினர். பிறகு அந்தக் குளத்திற்கே போய்க் கையோடு கொண்டுவந்திருந்த தந்தசூரணத்தால் பல்துலக்கி முகம் கைகால் கழுவிக்கொண்டு ஜாகைக்குத் திரும்பினர்.

அங்கு காலைப் பிரார்த்தனைக்காக எல்லோரும் வரிசையாக உட்கார்ந்துகொண்டனர். அப்பொழுது வழக்கமாய் ஆஜர்பட்டி அழைத்து வந்த ஸ்ரீமான் கிருஷ்ணமூர்த்தி பட்டியுடன் வந்து உட்கார்ந்தார். தொண்டர்கள் நம்பர் சொல்லிக்கொண்டே வந்தனர். ஒரு நெ. வந்த சமயம் அதற்கடுத்த நம்பர் உள்ளவர் அந்தப் பேர்வழி கல்லணையில் வீட்டுக்குப் போய்விட்டார் என்றும், இன்னொரு நெ. வந்த சமயம் தண்டாங்கோரையில் வீட்டிற்குச் சென்றார் என்றும் வேறு ஒரு நெ. வந்த சமயம் ஜுரமாகக் கும்பகோணத்தில் தங்கிவிட்டார் என்றும், பிறிதொரு நெ. வந்த சமயம் செம்மங்குடியில் ஜுரமாகி மோட்டார் பஸ்ஸில் ஏற்றி மன்னார்குடிக்கு அனுப்பப்பட்டார் என்றும் சொல்லிக் கொண்டேவர 10 நிமிஷ நேரத்தில் ஆஜர்பட்டி ஜோலி முடிந்தது. பிறகு பிரார்த்தனை ஆரம்பமாயிற்று. 15நிமிஷம் வரை பிரார்த்தனை நடந்தேறியபின் லேசான சிற்றுண்டி பாசிப்பயறு கஞ்சியும் வாழைப்பழமும் அங்கு வழங்கப்

பட்டன. இவற்றை அருந்தியானதும் தொண்டர்படை அங்கிருந்து புறப்பட்டு அடுத்த கெடிக்குச் செல்ல ஆரம்பித்தது.

## விளக்குடி

புறப்பட்டு ஊரைத்தாண்டி ஊர்க்கோடியில் வருவதற்குள்ளாகப் பொழுது புலரும் சின்னங்கள் காணப்படலாயின. வீட்டுத் திண்ணைகளில் படுத்திருந்தோர் விழித்துக்கொண்டு படை செல்வதைப் பார்த்துக் கொண்டிருந்தனர். மேலே மரத்தின் இலைகள் காற்றால் அசைந்து சலசலவென்று ஒலித்துக்கொண்டிருந்தன. பறவை இனங்கள் காலைத் துயிலெழுவதில் தொண்டர்கள் தங்களை முந்திவிட்டார்கள் என்ற வெட்கத்தினால் அவசரமாக எழுந்து சிறகுகளை அடித்துக்கொண்டு கிளை மாறிக் கிளை உட்கார்ந்து கொண்டிருந்தன. வெளியே வயற்காட்டுக்குப் போவோர் இரண்டொருவர் எழுந்து முக்காடிட்டுக் கொண்டு நடந்துபோயினர். நாய்கள் ஒருபுறம் "நாங்கள் சரியானபடி ஜாக்கிரதையாகக் காவல் காத்து வருகிறோம்" என்று காட்டுவது போலத் தொண்டர்களின் காலடிச் சத்தத்தைக் கேட்டு 'லொள் லொள்' ளென்று குரைக்கத் தொடங்கின. பின்னால் வந்த தொண்டர்கள் தடிகளால் அவற்றை விரட்டவும் வெகு தூரத்திற்கப்பால் போய் நின்று குரைக்க ஆரம்பித்தன. இவையெல்லாம் பார்த்துக்கொண்டே படை கிழக்கு முகமாய் விளக்குடியை நோக்கி வேகமாய்ச் சென்று கொண்டிருந்தது. சற்று தூரம் நடந்தான பின் பொழுது நன்றாய்ப் புலர்ந்து விட்டது. தூரத்துக் காட்சியெல்லாம் செவ்வையாய்ப் புலனாயின. மட்டத்தரை, மேடுபள்ளம், மரஞ்செடி, குடிசை, குளங்குட்டை நான்குமைல் சுற்றளவுக்குள் இருந்தனவெல்லாம் பார்த்துக்கொண்டு தொண்டர்படை விடிந்த நேரத்திற்கு 'கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று நடக்குது' என்ற நாமக்கல் தேசபக்தர் வெ. ரா. அவர்களின் பத்தியத்தை எல்லோரும் சேர்ந்து பாடிக்கொண்டே நடந்து போய்க்கொண்டிருந்தது. நடக்க முடியாத இரண்டொரு

தொண்டர்கள் பின்னால் வந்த சாமான்வண்டியில் ஏற்றி விடப்பட்டிருந்தனர். படை புறப்பட்ட பின்புதான் அங்குள்ள சாமான்களையெல்லாம் ஏற்றி அடுக்கிக்கொண்டு புறப்பட்டு வருவது வழக்கமாகையால் அது படைக்குப் பின்னால் கண்படு தூரத்திற்கப்பாலே இருந்து வந்தது. படை அதற்காக எதிர்பார்த்து நடக்கும்படியாகவும் வைத்துக் கொள்ளவில்லை. ஒவ்வொரு இடத்திலும் படை போய்ச் சேர்ந்த ஒரு நாழிகைக்குப் பின்தான் வண்டி வந்து சேர்ந்து கொண்டிருந்தது. ஏனென்றால் வண்டி எப்பொழுதும் ரஸ்தாப்பாதைகளையே அனுசரித்து சுற்றிக்கொண்டு வந்தது. படையோ அப்படியல்ல; அவசியம் ஏற்பட்டபொழுதெல்லாம் ஒற்றையடிப் பாதையிலும், வயல்களிலும் இறங்கி நடந்து செல்லும்.

அன்று காலைப் பிரயாணத்தைப் படை ஆரம்பித்து விளக்குடி சமீபம் வந்தபொழுது காலை 6-30 மணி இருக்க லாம். அன்று வெள்ளிக்கிழமை. விளக்குடி வாசிகள் ஒருவ ராவது வரவேற்புக்காக அங்கு வரவில்லை. இவ்வாறு நடக்குமென்பது ஏற்கனவே எதிர்பார்க்கப்பட்ட விஷயமா தலால் மன்னார்குடியிலிருந்து சில பிரமுகர்கள் டாக்டர் முத்துகிருஷ்ணய்யர் முதலியோர் அங்கு வந்து சமையலுக் கான ஏற்பாடுகளை செய்திருந்தார்கள். அங்கு ஈசனக்குடி அப்பாசாமி பிள்ளை வகையறுவைச் சேர்ந்த ராயநல்லூர் சத்திரம் ஒன்று ரஸ்தாவோடிருந்தது. அதில்தான் தொண்டர்களுக்கு ஜாகை ஏற்பாடாயிருந்தது. அந்தச் சத்திரத்திற்கு எதிர்வாடையில் சில கடைகளும் இருந்தன. ஆனால் வெகு நேரமாயும் அவை திறக்கப்படவில்லை. தொண்டர்கள் தங்கள் ஊருக்கு வருங்கால் பண்டிகையாகக் கொண்டாட வேண்டுமென்று கடைக்காரர்கள் அவ்வாறு செய்தார்களோ அல்லது போலீசாருக்குப் பயந்து அவ்வாறு செய்திருந்தார்களோ என்பது சொல்லக்கூடாத தாயிருந்தது.

நிற்க, தொண்டர்கள் இறங்கியிருந்த அந்தச் சத்திரத் திற்கு இடது பாரிசத்தில் பெரிய குளமொன்று இருந்தது.

அதில்தான் அன்று தொண்டர்கள் ஸ்நானம் முடித்துக் கொண்டனர்.

அன்றைத்தினம் சொந்த சமையல் ஆனதனால் சற்றுத் தாமதமாகவே சமையல்வேலை ஆயிற்று. சாப்பிடும் இடம் சிறிய கட்டிடம் ஆனபடியால் தொண்டர்கள் முதல் பந்தியில் உட்கார்ந்துகொள்ள வேண்டுமென்று அவசரமாய்ப் போய்க் கொண்டிருந்தனர். கூடம், மாடம், நடை, பின் வராந்தா எல்லாம் இரண்டொரு நிமிஷத்தில் நிரம்பிவிட்டது. சற்றுத் தாமதித்துப் போனவர்கள் இடமில்லாமல் திரும்பிவந்து ஜாகையில் இருந்தனர். ஒருசிலர் பரிமாறும் வேலையில் இழுத்துக்கொள்ளப்பட்டனர். 15 நிமிஷங்களுக்குள்ளாக ஒரு பந்தி சாப்பிட்டு முடிந்து விட்டது. உடனே இடம் பூராவும் சுத்தம் செய்யப்பட்டு மீண்டும் ஐந்து நிமிஷங் களுக்குள்ளாக இரண்டாவது பந்தியும் உட்கார்ந்து அடுத்த 15 நிமிஷங்களுக்குள் அதுவும் முடிந்துவிட்டது. அன்று தாமதம் ஏற்பட்டதற்குப் பர்த்தியாக, சாப்பிட்டு முடிவது வெகுசீக்கிரம் ஆகிவிட்டதால் என்றைக்கும்போலவே 11-30 மணிக்குள்ளாக எல்லோரும் போஜன வேலையை முடித்துக் கொண்டு ஜாகைக்கு வந்து சேர்ந்தனர். தலைவர் ஒரு பக்கத்தில் தம் படுக்கையில் உட்கார்ந்து பத்திரிகை வாசிப் பதும் நூற்பதுமாயிருந்தனர். தொண்டர்களும் பெரும் பாலோர் தக்ளியும் கையுமாய் இருந்தனர். ஒரு சிலர் இளைப்பாறிக்கொண்டிருந்தனர்.

அன்றைத் தினமும் வழக்கம்போல் அட்டவணை அலுவல் கள் குந்தகமின்றி நடந்தேறின. 12-30 மணி சுமாருக்கு மதுவிலக்குப் பிரசாரம் ஆரம்பமாயிற்று. தொண்டர்கள் ஜாகை ஏற்படுத்தியிருந்த இடத்திற்கு இடது பாரிசத்தில் பெரிய முற்றமிருந்தது. பெரிய மரங்கள் இரண்டொன்று அங்கு நிழல்கொடுத்து நின்றன. மரத்து நிழலில் நீண்ட கயிற்றில் படங்களைத் தொங்கவிட்டு ஒரு நுனி அடிமரத் தோடும் மற்றொரு நுனி தொண்டர்கள் உட்கார்ந்திருந்த இடத்திலுள்ள தூணோடும் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தன.

ஆதித்திராவிடரும் மற்றையோரும் ஆண், பெண், குழந்தை கள் படத்தைப் பார்த்துக்கொண்டு நின்றனர். அன்று ஸ்ரீமான் சுப்பையாவுக்கு வேறு அலுவல் இருந்தபடியால் ஸ்ரீ பத்பநாபன் பிரசார வேலையை ஒப்புக்கொண்டிருந்தார். அவருக்குத் துணையாக இராஜபாளையம் ஸ்ரீமான் ரங்கசாமி ராஜாவும் அன்று அந்த வேலையில் கலந்திருந்தார். சுமார் ஒருமணி நேரம்வரை பிரசாரம் நடந்து கடைசியாக ஜனங் களிடமிருந்து குடிப்பதில்லை என்ற பிரமாணம் வாங்கப்பட்ட பின் பிரசாரவேலை சமாப்தியாயிற்று. அதன் பிறகு தொடர்ச்சியாக மௌனவிரதமும், பத்திரிகை விஷயமும் நடந்தேறின.

மாலை 4 மணி சுமாருக்கு இரண்டாவது வேளை போஜனத் திற்கு மணியடிக்கப்பட்டது. மாலையில் பொங்கல் மாத்திரம் தயார் செய்யப்பட்டிருந்தது. அன்று போஜனத்திற்காக ஏற்பட்ட செலவு ரோக்கா போட்டு அந்த பில்லுக்கு, பொக்கிஷதார் மதுரை பி. கே. ராமாச்சாரி பணம்கொடுத்த போது அவருக்கே மிகவும் ஆச்சரியமாக இருந்தது. ஹோட்டலில் போய்ச் சாப்பிட்டிருந்தால் எவ்வளவு தொகை செலவாயிருக்குமோ அவ்வளவு தொகை அன்று சாப்பாட்டுச் செலவுக்குச் சென்றிருந்தது. தோட்டத்தில் முக்கால் பங்கு கிணறு என்பதுபோல் சமையல் செய்தவர்களுக்கு ஏற்பட்ட வர்த்தனை மட்டும், பெரும்பகுதித் தொகையாகக் கணக்கிடப் பட்டிருந்தது. சமையல் செய்தவர்கள் இந்த இயக்கத்திற்குத் தாங்கள் வேறு எத்தகைய உதவியும் செய்யச் சாத்திய மில்லையென்றாலும் வழக்கமாய் ஏற்பட்ட கூலியைப் பெற்றுக் கொண்டு சமையல் செய்திருந்தால் எவ்வளவோ மேன்மை யாய் இருந்திருக்கும். இதுதான் சமயம் என்று அவர்கள் இரட்டிப்புக் கூலி வாங்க முற்பட்டது அவர்கள் பேரில் பெரிய களங்கமே உண்டாக்குவதாயிருந்தது. பொதுக் காரியங்களுக்காக வசூலிக்கப்படும் தொகையிலிருந்து எட்டின மட்டிலும் பறிப்பதென்ற கொள்கையைக் கொண்டுள்ளவர்களின் செயலைக் கண்டிக்கவேண்டியது

அவசியமாய்த்தான் இருக்கிறது. அவரவர் தம்தம் சக்தி யனுசாரம் தங்கள் தனத்தாலும் மனத்தாலும் சேவை செய்ய வேண்டுமென்பது நியதியாயிருக்க அதை விட்டு ஒருசிலர் பொதுப்பணத்திலிருந்து நியாயத்திற்கு மிஞ்சிய, பிரயோஜனத்தை அடைந்துகொள்ள வேண்டுமென்று நினைப்பது, அவரவர் புத்திக்குறைவையே காட்டுகிறது. பொதுப்பணமென்றால் நெருப்புக்குச் சமானமென்பதும் அஜாக்கிரதையாக அதைக் கையாடினால் சுட்டு எரித்து விடும் என்பதும் இவர்கள் உணர்ந்துகொள்ளாமலிருப்பது, மிகவும் பரிதாபகரமான விஷயமாகும். கூலிக்குச் செய்யும் வேலையெல்லாம் அதனால் கிடைப்பதாயுள்ள பழுத்த பிரயோஜனத்தைப் பாழாக்கி விடுகிறதென்ற விஷயம் இவர்கள் மறந்திருப்பது பெரிய குற்றமாகும். மேடை மேலேறிப் பிரசங்கம் செய்யும் பொழுது மட்டும் உடல், பொருள் ஆவி மூன்றையும் நாட்டிற்கு அர்ப்பணம் செய்கிறோ மென்று வாயலங்காரமாகப் பேசுவோர் வார்த்தையெல்லாம் "கற்றுப் பிறர்க்குரைத்துத்தாம் நில்லார் வாயப்படு ஊம் வெற்றுரை" ஆகிப் போகும் சம்பவங்கள் ஒன்றிரண்டல்ல.

வெள்ளிக்கிழமையாகிய அன்று மாலை இரண்டாவது போஜனம் முடிந்து புறப்படத் தயாராயிருந்தத் தொண்டர் படை வெளியே ரஸ்தாவில் வந்து நின்று தொண்டர்களின் தொகை சரிபார்க்கப்பட்டதும் அந்த இடத்தை விட்டு நகர்ந்தது. தேசிய கீதம் பாடுவதை அனுசரித்து டங்கா நாதம் தாளம் அமைத்தாற்போல் அடிக்கப்பட்டு வழியை அலங்கரித்துக் கொண்டு போயிற்று. சாலையின் இரு புறங்களிலும் குட்டைகளும் அதற்கப்பால் நெடுக அறுவடை யான வயல்களும் நெடுகத் தென்னந் தோப்புகளும் இருந்தன. வியர்வைக் கஷ்டமென்பதே அறியாமல் தொண்டர்கள் நடந்து போய்க் கொண்டிருந்தனர். சற்றுத்தூரம் போனதும் ரஸ்தாவோடிருந்த ஒரு சிற்றூர் வந்தது. அதுதான் விளக்குடி. ஜாகை ஏற்படுத்தியிருந்த இடமும் அந்த ஊரைச் சேர்ந்தது தான் என்றாலும் கிரமமாக வரவேற்பு நடக்கவேண்டிய இடம் அதுதான்.

அவ்வூர்ப் பிரமுகர் ஒருவர் மாத்திரம் தமது சொந்தச் செலவில் தொண்டர்படை புறப்பட்டு அங்குவரும் சமயம் உபசரித்தனுப்புவதென்று சகலவித ஏற்பாடுகளும் செய்து விட்டு, படைக்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். ரஸ்தாப் பக்கமாய் அழகான பந்தலொன்றைப் போட்டு பலவித வர்ணக்காகிதங்களால் தோரணங்கள் ஜோடித்து இளநீர்க் காய்களைச் சீவி அம்பாரமாய்க் குவித்திருந்தார். படை அங்கு போய்ச் சேர்ந்ததும் அவர் சீவி வைத்திருந்த இளநீர்களை உடைத்து ஒவ்வொரு தொண்டருக்கும் இரண்டு மூன்று கொடுத்துக்கொண்டே வந்தார். ஒரு தட்டில் கற்கண்டு வைத்து வழங்கப்பட்டு வந்தது. இந்த வரவேற்பு ஏற்பாடு செய்திருந்தவர் சர்க்காருடைய செயலைக் கண்டித்து, தாம் தண்டனை அடைந்தாலும் தம்முடைய கடமையைச் செய்யப் பின்வாங்கப் போவதில்லை என்றார். அந்த ஊரார் அங்கு பெருந்திரளாகக் கூடியிருந்தனர். அவர்களுக்குத் தலைவர் சிறிதுநேரம் சொற்பெருக்கு நிகழ்த்தியான பின் படை மீண்டும் அங்கிருந்து புறப்பட்டது.

மேலே சொன்ன இடத்தில் தாமதம் செய்தது பதினைந்து நிமிஷத்திற்கு மேலாகவே இருக்கும். பிரயாணத்தில் 15 நிமிஷம் தாமதமென்றால் ஒரு மைல் நடப்பது கெட்டுப் போகும். ஆதலால், இந்தத் தூரத்தைச் சரிக்கட்ட வேண்டுமென்று படை வெகு வேகமாய்ச் சென்று கொண்டிருந்தது. சில இடங்களில் வழி மணற்பாங்காக இருந்தபடியால் தொண்டர்களுக்குக் கொஞ்சம் சிரமமாகத் தோன்றிக்கொண்டே போயிற்று. ஆயினும் தலைவர் நடக்கும் விசையைப் பார்த்து அவருக்குப் பின்னால் தொண்டர்கள் ஓட்டமும் நடையுமாய்ப் போய்க்கொண்டிருந்தார்கள். வழியில் ரஸ்தாப் பக்கத்தில் ஒரு கருவேலமரமிருந்தது. அதனடியில் ஒரு ஸ்திரீ முந்தானையைத் தொட்டிலாக்கி அதில் தனது கைக்குழந்தையை வைத்து இடுப்போடு அணைத்து நின்றாள். அப்பொழுது மணி 5-30 சமயம் இருக்கலாம். பக்கத்துக் கிராமத்திலிருந்து புல் வெட்டிக் கொண்டு போவதற்காக வந்திருந்த அந்த ஸ்திரி

படை போய்க்கொண்டிருந்த நோக்கத்தைக் குறிப்பாக அறிந்து கொண்டவளாகவே இருந்தாள். படை அவளருகில் போனபொழுது அவள் ரஸ்தாவுக்கு வந்து ராஜாஜியை நமஸ்கரித்து, 'சாமி, எல்லாருக்கும் ஒவகாரம் பண்ணிட்டே போறிங்கோ; எனக்கு யாதாச்சிலும் சொல்லறதில்லியா?" என்று கேட்டாள். இவளுக்காகச் சிறிது நேரம் படை அங்கு நிற்க வேண்டியதாயிற்று. தலைவர் அவளிடம் யோக க்ஷேமமெல்லாம் விசாரித்தார். "உன் புருஷன் தின மொன்றுக்கு என்ன சம்பாதிப்பான்? நீ எவ்வளவு சம்பாதிப்பாய்" முதலான கேள்விகளைக் கேட்டுக்கொண்டே வந்து கடைசியாக, "உன் புருஷன் குடிப்பதை நிறுத்தி விட்டால் நீங்கள் சுகமாய் வாழலாம். இது தான் மஹாத்மா காந்தியின் உபதேசம். இதை நீ உன் புருஷனிடம் சொல்லி இனிமேல் குடிக்காமல் இருக்கும்படி செய்துவிடு. உனக்கும் குழந்தைகளுக்கும் க்ஷேமகாலம் அன்றைக்கே வந்துவிடும்", என்று மறுமொழி சொல்லிவிட்டுப் போய்வருகிறேனென்று கேட்டுக்கொண்டு மேலே புறப்பட்டார். அந்த ஸ்த்ரீக்குத் தெலுங்கு பாஷை தெரிந்திருந்தது. ஆகையால் சம்பாஷணை தெலுங்கில்தான் நடைபெற்றது. அந்த இடத்தில் படை 5 நிமிஷம் தாமதித்திருக்கும். சூரியன் தொண்டர்களுக்குச் சிரமம் கொடுக்கக் கூடாது என்று எண்ணினவனைப் மேற்றிசையில் இறங்கிக் கொண்டிருந்தான். படையும் வெகு வேகமாய்ப் போய்க் கொண்டிருந்தது.

## திருத்தருப்பூண்டி

அடுத்தத் தங்குமிடம் திருத்தருப்பூண்டி. பிரயாணப் பாட்டையில் குறுக்கிட்ட பெரிய ஊர்களில் இது ஆறுவதாகும். மற்ற ஐந்தும் திருவையாறு, தஞ்சாவூர், கும்பகோணம், நீடாமங்கலம், மன்னார்குடி ஆகும். விளக்குடி என்ற சிற்றூருக்கும் இதற்கும் சுமார் 5 மைல் தூரமிருக்கும். விளக்குடியிலிருந்து புறப்பட்ட தொண்டர்படை தென்கிழக்கு முகமாகவே திருத்தருப்பூண்டிக்குச் சென்று கொண்டிருந்தது. இடையில் ஏற்பட்ட தாமதங்களால் படை திருத்தருப்பூண்டியை

நெருங்கின சமயம் பொழுது சாயும் சமயமாயிருந்தது. திருத்தருப்பூண்டி வாசிகள் வரவேற்பு ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்து படைக்காக எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். படை நெருங்கியதும் சற்று நிறுத்தப்பட்டு, எதிர்சேவை வரவேற்பு நடந்தேறியதும், படை அவர்களைத் தொடர்ந்து ஊர்ப்பக்கமாய்ச் செல்ல ஆரம்பித்தது.

இந்த ஊரில் ஜாகை ஏற்படுத்தியிருந்த இடம் ஊர் ஆரம்பத்திலேயே அமைந்திருந்தது. அது ஒரு பெரிய சத்திரம். அது இந்த ஊரிலிருந்து இரண்டாவது மைலிலுள்ள தென்பாதியைச் சேர்ந்த பிரபல மிராசுதார் ஸ்ரீ டி. எஸ். ராமச்சந்திர நாயுடு வகையராவைச் சேர்ந்ததாகும். இவருக்கு வயது சுமார் இருபத்தைந்துக்குள் தானிருக்கும்.

அந்தச் சத்திரம் ஊர் தொடக்கத்தில் இடது பக்கமாய்ப் பிரிந்த ரஸ்தாவில் அமைந்திருந்தது. தெரு ஆரம்பத்தில் ஒரு கமான் வளைவு தொண்டர்களை வரவேற்று நின்றது. அங்கு அழைத்துச் செல்லப்பட்ட தொண்டர்கள் சற்றுநேரம் அதன் திண்ணையில் தங்கியிருந்தனர். அதற்குள் தொண்டர்களுக்காகக் காய்ச்சித் தயாராய் வைத்திருந்த பாலை லோட்டாக்களில் கொண்டுவந்து ஒவ்வொரு தொண்டருக்கும் கொடுத்துவர ஆரம்பித்தனர். பாதிப்பேர் சாப்பிட்டும் பாதிப்பேர் சாப்பிடாமலும் இருக்கும் சமயத்தில் கூட்டம் நடைபெறும் இடத்திற்குப் புறப்பட்டுச் செல்ல வேண்டுமென்று தொண்டர்கள் கட்டளையிடப்பட்டனர். படை அங்கிருந்து புறப்பட்டு, சுமார் முக்கால் மைல் தூரத்திலிருந்த (முள்ளியாற்றுக்கு) பெருமாள் கோவிலுக்கு அருகில் வந்து சேர்ந்தது.

இந்த ஆற்றுப் படுகைக்குச் செல்லும் வழி ஒரு குறுகிய சந்தின் வழியாய் அமைந்திருந்தது. ரஸ்தாவிலிருந்து அந்தச்சந்தில் திரும்பினவுடன் இரண்டிரண்டு பேராய்ச் சென்றால்தான் சௌகரிகமாய்ச் செல்ல முடியும். இந்த ஆற்றின் அகலம் சுமார் 30 கஜமிருக்கும். தொண்டர்கள்

அங்கு போய்ச் சேர்ந்த நேரத்திற்கு ஏராளமாய்க் கூட்டம் கூடியிருந்தது. ஆற்றின் வலது கரையில் புளியமரத்தடியில் மேடையும் அதன்பேரில் மேஜை நாற்காலிகளும் போடப் பட்டிருந்தன. அச்சடித்த வரவேற்புப் பத்திரமொன்று ஸ்ரீ ராமசந்திர நாயுடுவால் ரூ. 300 பணமுடிப்புடன் வாசித்துக் கொடுக்கப்பட்டது. பிரார்த்தனைக்குப் பின் தலைவர் எழுந்து பேச ஆரம்பித்தார்.

## போலீசார் கரடி

உபந்நியாசம் ஆரம்பமாகிச் சரியாகப் பத்து நிமிஷங்கள் கூட ஆகவில்லை. அதற்குள் கூட்டத்தில் ஒரு போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் இரண்டு ஜவான்களுடன் மேடையருகில் வந்து கொண்டிருந்தார். தலைவர் கல்லணையில் கைது செய்யப்படுவர் என்றெண்ணியதெல்லாம் தவறாய்ப் போய், கடைசியாகத் திருத்தருப்பூண்டியில் சர்க்கார் அவரைக் கைது செய்ய நினைத்தார்கள் போலிருக்கிறது என்று தொண்டர்கள் எல்லோரும் நினைத்திருந்தனர்.

தலைவர் ஜனங்களைப் பார்த்துக் கையை அமர்த்தி ஒருவரும் எழுந்திருக்கக்கூடாது என்று சொல்லிக் கொண்டே இருந்தார். ஜனங்களும் அவருடைய வார்த்தைக்குக் கட்டுப் பட்டவராய் மாறி மாறித் தலைவரையும் போலீஸ் உத்தியோகஸ்தரையும் பார்த்த வண்ணமாயிருந்தனர்.

மேஜை, நாற்காலிகள் மேடையின் நடுவில் போடப் பட்டிருந்தன. அன்றைய அக்கிராசனர் ஒரு நாற்காலியில் வீற்றிருந்தார். அதற்கு வலதுபுறமாய் மற்றொரு நாற்காலிக்கும் மேஜைக்கும் இடையில் தலைவர் நின்று உபந்யாசம் செய்துகொண்டிருந்தார். அதற்கு வலது புறமாய் மேடையின் பேரில் அந்த ஊர்ப்பிரமுகர்களெல்லோரும் வீற்றிருந்தனர். சற்று நேரத்திற்கு முன்பு வரவேற்புப்பத்திரம் வாசித்துக் கொடுத்த ஸ்ரீ ராமச்சந்திர நாயுடு அந்தக் கூட்டத்தில் முதல் வரிசையில் அமர்ந்திருந்தார். போலீஸ்

உத்தியோகஸ்தர் தலைவரிடம் போகவில்லை. மேடையை அடுத்து வந்து முன்வரிசையில் உட்கார்ந்திருந்த ஸ்ரீ ராமச்சந்திரநாயுடுவிடம் போய், "நீர் கைது செய்யப்பட்டிருக்கிறீர். எழுந்திரும், எழுந்திரும்" என்று ஆங்கிலத்தில் அதிகாரத் தொனியோடு பொழிய ஆரம்பித்தார். இந்தச் சம்பவத்தைத் தலைவராவது தொண்டர்களாவது ஜனங்களாவது சிறிதும் எதிர்பார்த்தவர்களல்ல. தலைவரே கைது செய்யப்படுவார் என்று அவரும் தொண்டர்களும், கூடியிருந்த ஜனங்களும் நினைத்திருந்ததற்கு மாருக ஸ்ரீ ராமச்சந்திர நாயுடு கைதியாக்கப்படுகிருர் என்ற விஷயம் எல்லோரையும் திக்பிரமை கொள்ளும்படி செய்துவிட்டது. அவர் கைது செய்யப்படுவது அந்தச் சமயத்திற்குச் சிறிதும் ஒவ்வாததாகத் தோன்றியது.

'எய்தவன் அம்பு' என்ற நியாயத்தை அனுசரித்துப் பார்த்தால் ஸ்ரீ ராமச்சந்திர நாயுடு அம்பு என்ற வகையில் சேர்க்கப்படவேண்டியவரேயல்லாது வேறல்ல. அப்படியிருக்க அவரை ஏன் கைது செய்கிருர்கள் என்ற ஆத்திரத்தோடு ஒவ்வொருவரும் எழுந்து நிற்க ஆரம்பித்தார்கள். போலீஸாரின் தந்திரத்தையும் சூழ்ச்சியையும் தலைவர் உடனே கிரகித்துக் கொண்டார். கூட்டத்தில் குழப்பத்தை உண்டாக்கி அதைத் தடியடியில் கொண்டு வந்து விடவேண்டுமென்ற நோக்கங் கொண்டே இவ்வாறு நடு யாகத்தில் கரடி ஓட்டுகிருர்கள் என்பது சந்தேகமறத் தெரிந்துவிட்டது. சமாதானமாக அவர் (தலைவர்) போலீஸ் அதிகாரியைப் பார்த்து, "ஐயா ஏன் அவசரப் படுகிறீர்கள்? சற்று நேரம் பொறுத்துக் கைதுசெய்யலாம். அதற்குள் என்ன அவர் ஓடிப்போய்விடக்கூடியவரா?" என்று சொன்ஞர். அவ்வார்த்தையைச் சிறிதும் பொருட்படுத்தாதவராய் அந்த உத்தியோகஸ்தர் ஸ்ரீ ராமச்சந்திர நாயுடுவின் கையைப் பிடித்து, "நேரமாகிறது; எழுந்திரும்" என்று இழுக்க ஆரம்பித்தார். அவரும் சற்றுப் பொறுத்திருக்கும்படி எவ்வளவோ கேட்டுக்கொண்டும் சிறிதும் இரக்கமென்பதே காட்டாமல், "என்ஞல் பொறுத்திருக்க முடியாது. வரு

கிறீரா இல்லையா, என்ன சொல்லுகிறீர்? தாமதம் செய்தால் ஜவான்களை விட்டு இழுத்துக்கொண்டு போகச் சொல்லு வேன்" என்று அமர்த்தலாகவும் அதிகாரமாகவும் பேசி அவருடைய கையைப் பிடித்து உலுப்ப ஆரம்பித்தார். அதற் குள் தலைவர் ராஜாஜி உத்தியோகஸ்தரைப் பார்த்து, "ஐயா! நீர் அனுவசியமாக ஒரு பெரிய மனிதரை அவமானப் படுத்த வேண்டுமென்று கங்கணங் கட்டிக்கொண்டு வந்திருப் பதாகத் தெரிகிறது. அப்பேர்ப்பட்ட பிரமாதமான குற்றம் அவர் என்ன செய்துவிட்டார்? சற்றுப் பொறுத்திருந்தால் அவர் தாமாக எழுந்துவரக் காத்துக்கொண்டிருக்கிறாரே! இதற்காக இவ்வளவு ஆர்ப்பாட்டமும் அமலும் நடத்தி அழைத்துக்கொண்டு போகவேண்டிய அவசியமில்லையே" என்றார். அதற்கு அந்த உத்தியோகஸ்தர், "என்னுடைய கடமையை நான் செய்வதில் உம்முடைய யோசனை தேவை யில்லை. எல்லாம் எனக்குத் தெரியும். அவர் தானாக வந்தாலாச்சு; இல்லாவிட்டால் அவரைக் கொண்டுபோகும் விதத்தில் கொண்டுபோகிறேன்" என்று உரத்த சப்தத் துடன் கூட்டம் பூராவும் கேட்கும்படியாகப் பேசி நின்றார். அப்பொழுது தலைவர் ஜனங்களைப் பார்த்து, "இதைக் கண்டு நீங்கள் ஒன்றும் பீதி கொள்ள வேண்டாம். நீங்கள் அவரை அழைத்துச் செல்லுங்கால் அமைதியாக உட்கார்ந்து கொண்டிருப்பீர்களானால் அவர்கள் எந்த நோக்கத்தோடு வந்திருக்கிறார்களோ அந்த நோக்கம் பூர்த்தியாகாமற் செய் தவர்களாவீர்கள்" என்று சொல்லிக்கொண்டிருக்கையில் போலீஸார் ஸ்ரீ ராமச்சந்திர நாயுடுவை இழுத்துக்கொண்டு போகத் தலைப்பட்டனர். அதைப் பார்த்த ஜனங்கள் தம்மை யறியாமல் மூலைக்குமூலை எழுந்திருக்க ஆரம்பித்தனர். தலைவர் ராஜாஜிக்கு மிகுந்த கவலை உண்டாய் விட்டது. கும்பகோணத்தில் எதிர்கட்சியினரால் ஏற்பட்ட தொல்லைக் குப் பின் இந்த இடத்தில் போலீஸாரால் இரண்டாவது தடவை தொல்லை ஏற்பட்டிருந்தது. கூட்டம் அடக்க முடி யாததாய் ஆத்திரமே வடிவாய் அமர்க்களம் போலிருந்தது. எங்கே கூட்டத்தில் கலவரம் அடிதடி உண்டாகும், அதைச்

சாக்கிட்டுத் துப்பாக்கிப் பிரயோகம் செய்துவிடலாம் என்று எதிர்பார்த்து ரிசர்வ் போலீஸ் படை அந்தக் குறுகிய சந்தில் பதுங்கிக்கொண்டிருந்தது. கூட்டமும் ஏறக்குறைய அப்பேர்ப்பட்ட நிலைக்கே வந்திருந்தது. ஜனங்கள் ஆவேசமே வடிவாய் போலீஸார்மேல் பாய்ந்து நொறுக்கி விடுவோமா என்று தத்தளித்து நின்றூர்கள். அந்தச்சமயத்தில் ஜனங்கள் போனபடி விட்டிருந்தால் பஞ்சாப் படுகொலை போன்ற இரண்டாவது கோரக் காட்சி அன்று நிச்சயம் ஏற்பட்டிருக்கும். ஆயிரக்கணக்கான ஸ்த்ரி, புருஷர், குழந்தைகள் அநாதரவாய்த் துப்பாக்கி ரவைகளுக்கு இரையாகி, தண்ணீரில்லாமல் காய்ந்து கிடந்த முள்ளியாறு ரத்த வெள்ளத்தைக் குடித்திருக்கும். அந்தச் சமயத்தில் உணர்ச்சி இல்லாத எப்பேர்ப்பட்ட மந்தமுள்ள மனிதனுலும் தன்னை யறியாமல் பலாத்காரத்தில் இறங்கிவிடுவான். சிறிது அவர்கள் அவ்வழி திரும்பிவிடுவார்களாஞல் அதையே ஒரு காரணமாக வைத்துக்கொண்டு ஒரு கை பார்த்து விடலாம் என்று அன்றைத்தினம் போலீஸார் ஒவ்வொரு நிமிஷமும் குழப்பத்தில் கூட்டம் முடியாதா, சண்டை உண்டாகாதா, அடிதடி உண்டாகாதா, தம் மேல் ஜனங்கள் கைவைத்து விடமாட்டார்களா என்று எதிர்பார்த்தவர்களாய் இருந்தனர்.

ஸ்ரீ ராமச்சந்திர நாயுடுவை இழுத்துப் போன போலீஸார் கூட்டத்தைத் தாண்டி வெளியே போய்விடப் போகிறூர்கள்! தங்களால் நன்கு மதிக்கப்பட்ட கனவானை இவ்வாறு அநியாயமாய் இழுத்துக் கொண்டு போகிறூர்களே என்று ஜனங்களெல்லாரும் இன்று இரண்டிலொன்று பார்த்துத்தான் விடுவது என்ற ஆவேசத்துடன் எழுந்து நின்றூர்கள்! கூட்டத்தில் ஒழுங்கு, முறை எல்லாம் பறந்து போனது. மேடையிலிருந்து பேசும் வார்த்தைகள் அடுத்தாற்போல் இருப்பவருக்கும் கேட்பது அரிதானது. கலகத்தையே எதிர்பார்த்துக் கொண்டு ரிசர்வ் போலீஸ் ஒருபுறம் பதுங்கிக் கொண்டிருந்தது. இதற்கிடையில் கூட்டத்தில் ஒருவன் எழுந்து தலைவரைப் பார்த்து, "ஒன்று மறியாத

என் எஜமானனைப் போலீஸார் வசம் ஒப்புவித்துவிட்டு வெகு சம்பிரதாயமாகக் கூட்டத்தை நடத்திக் கொண்டிருக்கிறீர்களே? முதலில் அவரை விடுவித்து விட்டு மறு ஜோலி பாருங்கள். இல்லாவிட்டால் நான் பொல்லாதவனாயிருப்பேன்" என்று பயமுறுத்திக் கொண்டிருந்தான். அவனைச் சமாதானப்படுத்தி நாயுடுவை விடுவிக்க ஏற்பாடு செய்யப்படுமென்று தலைவர் சொன்னார். அந்த ஆசாமி ஸ்ரீ ராமச்சந்திர நாயுடுவுக்காகப் பரிந்து பேசியது உண்மையாய் இருக்குமென்றாலும், அவனுடைய நடவடிக்கை வெகு விபரீதமாகவே இருந்தது. போலீஸாருடைய பல சூழ்ச்சிகளில் அதுவும் ஒன்றோ என்று நினைக்கக்கூடியதாய் இருந்தது. ஏனென்றால் அந்த மனிதன் தான் சொன்னதையே ஓயாமல் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டே இருந்தான். இத்தனை சங்கடங்களுக்கிடையில் கூட்டத்தைச் சமாப்தி பண்ணியாக வேண்டும். சற்றுத்தவறினால் குற்றமெல்லாம் சத்தியாக்கிரகத் தலைவர் பேரில் சுமத்தப்படுமென்பது நிச்சயம். இப்பேர்ப்பட்ட நெருக்கடியான நிலைமையில் தலைவர் தம்மால் ஆன மட்டும் உரத்துப் பேசினார். ஒருவர் காதுக்கும் எட்டாதபடி கூட்டத்தில் கூச்சல் மிகுந்திருந்தது. அந்த சமயத்தில் தொண்டர்களில் ஒருவர் "மஹாத்மா காந்திக்கு ஜே" என்று கோஷித்தார். அதைத் தொடர்ந்து கூட்டத்தில் ஜெய கோஷம் பிரதிபலித்தது. ஆஹா! இந்தப் பெயரின் மஹா சக்தியை என்னென்று சொல்வது! அடுத்த கடிகையிலேயே இதனால் எல்லா ஜனங்களும் வசீகரமாயினர். கூட்டத்தில் ஒழுங்கு நிலைநாட்ட முடியுமா என்ற பயமும் அதோடு ஒழிந்தது. அலை ஓய்ந்த சமுத்திரம் போல் அங்கு நிச்சப்தம் ஏற்பட்டது.

அதன் பிறகு தலைவர் மீண்டும் 20 நிமிஷத்திற்கு மேலாகவே பழையபடி உபந்யாசத்தை நடத்தினார். கூட்டம் கட்டுக்கடங்காது போகும்போல் தோன்றிய பொழுதே கீழே நின்றிருந்த அவர் மேஜைமேல் ஏறி நின்றார். அங்கு நின்றபடியே பாக்கியையும் பேசினார். அப்போது தலைவர் சொன்னதாவது:

"மஹா ஜனங்களே! உங்களுடைய பொறுமையையும், தைரியத்தையும், ஒழுங்கு முறையையும், கட்டுப்பாட்டையும், நான் மிகுதியும் சிலாகிக்கிறேன். தேச மானத்தையும், இயக்கத்தின் பெருமையையும், தென்னாட்டின் கீர்த்தியையும், பழுதுபடாமல் காப்பாற்றியதான பெரும்பேற்றைத் திருத்தருப்பூண்டி வாசிகளாகிய நீங்கள் இன்று பெற்றுவிட்டீர்கள். இந்த விஷயத்தில் நீங்கள் தென்னாட்டுக்கெல்லாம் வழி காட்டியாகவும் ஆகி விட்டீர்கள். மஹாத்மாவின் ஆசீர்வாதத்தாலும், கடவுளின் கிருபையாலும், உங்களுக்கு இந்த மகத்தான பொறுமையும், கட்டுப்பாடான ஒழுக்கமும் சித்தித்திருப்பது சுயராஜ்யம் அடைந்ததைக் காட்டிலும் மேலாகக் கருதுங்கள். உங்களுக்கு இருக்கும் ஒற்றுமையையும், பொறுமையையும் ஒழுங்கு முறையையும் குலைத்து விட வேண்டுமென்றுதான் இன்று போலீசார் பிரயத்தனப் பட்டார்கள். இந்தப் பரீக்ஷையில் நீங்கள் 100-க்கு 100 மார்க்குகள் வாங்கித் தேறும் மாணுக்கனைப் போன்று தேறியிருக்கிறீர்கள். இன்று சர்க்காருக்கு ஏற்பட்டது பெரிய தோல்வி என்பதற்குச் சிறிதும் சந்தேகமில்லை.

"நிற்க. கூட்டத்தில் ஒரு கனவான் ஸ்ரீ ராமச்சந்திர நாயுடுவை விடுதலை செய்துவிட்டு மறுகாரியம் பார்க்கும்படி என்னிடம் சொல்லியிருக்கிறுர். அவருக்கு ஸ்ரீ நாயுடு அவர்களின் பேரில் உள்ள அன்பும் ஆர்வமுமே இவ்வாறு சொல்லும்படி அவரைத் தூண்டியிருக்கின்றன. ஸ்ரீ நாயுடு அவர்களின் பேரில் அவருக்கு எவ்வளவு அன்பு இருக்கிறதோ அதைப் போன்றும் அதற்கு மேலும் நமக்கும் அவர் பேரில் அன்பு இருக்கிறதென்பதை நான் அவருக்குத் தெரியப்படுத்த வேண்டியவனுயிருக்கிறேன். கூட்டம் முடிந்தவுடன் நானே நேரில் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் எல்லா விஷயங்களையும் விசாரித்துத் தெரிந்து கொண்டு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்கிறேன் என்று அவருக்கு நான் உறுதி சொல்லுகிறேன். அவர் இது விஷயத்தில் ஒரு சிறிதும் கவலைப்பட வேண்டியதில்லை. அவரைப் போன்ற அன்பே கூட்டத்தில் கூடியுள்ள நீங்க

ளெல்லோரும் ஸ்ரீ நாயுடு அவர்கள் பேரில் கொண்டிருக்கிறீர்கள் என்பதையும் நான் மறந்துவிடவில்லை. எல்லோருமே அவரைப்பற்றித் தெரிந்து கொள்ளப் பேராவல் கொண்டிருக்கிறீர்களென்பதை நான் நன்கு அறிவேன். இதற்காகவே நாளைத்தினம் காலை 8 மணிக்கு இதே இடத்தில் இன்னொரு கூட்டம் கூட்டலாமென உத்தேசித்திருக்கிறேன். அப்பொழுது எல்லா விஷயங்களும் உங்களுக்கு அறிவிக்கப்படும். எல்லோரும் நாளை காலை இவ்விடத்திற்கு வந்தால் விஷயம் தெரிந்து கொள்ளலாம்'' என்று சொன்ன பின் தலைவர் ஆசனத்தில் அமர்ந்தார். பிறகு அக்கிராசனர் கூட்டத்தைக் கலைத்துவிட்டார்.

ஜனங்களெல்லோரும் தம்தம் வீடுகளுக்குப் போயினர். தொண்டர்களும் புறப்பட்டு 'ராமச்சந்திர நாயுடுக்கு ஜே' என்ற கோஷத்துடன் ஜாகைக்குச் செல்ல ஆரம்பித்தனர். சற்றுத் தூரம் நடந்திருப்பார்கள். அதற்குள் எதிரில் ஒரு மோட்டார் வண்டி வெகு வேகமாய் வந்துகொண்டிருந்தது. படைக்குச் சமீபமாய் வரவும் வண்டி சட்டென்று நின்றது. ஸ்ரீ ராமச்சந்திர நாயுடு வண்டியை விட்டுக் கீழே இறங்கி எல்லோரையும் நமஸ்காரம் பண்ணினார். தொண்டர்களும் பிரதி நமஸ்காரம் பண்ணினர். அவர் கழுத்தில் பூமாலைகள் நிறைந்திருந்தன. போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப்பட்டவர் இதற்குள் எப்படித் திரும்பிவந்தார் என்று எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். அவர் விசாரணை வேதாரண்யத்தில் நடப்பதாய்ப் போடப்பட்டிருக்கிறதென்றும் வாய்தா போட்டு ஆனதும் விட்டுவிட்டார்களென்றும் தெரிவித்தார். இதுவும் ஒரு புதுமைதான். அவசரக் கோர்ட்டுக்கு அர்த்த ராத்திரியிலும் தீர்ப்பு என்பதுபோலிருக்கிறது என்று சொல்லிக் கொண்டு, அவர் மோட்டாரில் ஏறிச் செல்ல, தொண்டர்கள் ஜாகை நோக்கிப் புறப்பட்டனர். கால்நாழிகைக்குள் ஜாகையை அடைந்தனர். வெளித்திண்ணையில் வரிசையாக மூட்டைகளையும் தடிகளையும் வைத்துக்கொண்டு அவரவர் படுக்க

இடம் தயாரித்துக்கொண்டு, பிறகு கைப்பாத்திரங்களையும் கரண்டியும் எடுத்துக்கொண்டு தேகபாதைகளைத் தீர்த்துக் கொள்ள வெளியே சென்றனர். சத்திரத்துக்கு முன்னால் பெரிய மைதானமும், சத்திரத்து ரஸ்தாவில் வலதுபுற மாய்ச் சிறிது தூரம் போனால் ராஜபாட்டையும் இருக் கின்றன. இந்தப் பாட்டைக்கு வலதுபுறத்தில் ஒரு குளம் உண்டு. அதிலிருந்து தண்ணீர் மொண்டு கொண்டு சுற்றுப் பக்கங்களிலிருந்த வயல்களில் போய் தேகபாதைகளைத் தீர்த்துக்கொண்ட தொண்டர்கள், ஒரு நாழிகைக்குள்ளாக எல்லோரும் ஜாகைக்குத் திரும்பினர். அதுசமயம் மணி 10-க்கு மேலிருக்கலாம். வெளிமுற்றத்தில் தலைவர் ஸ்ரீ ராஜாஜி உட்கார்ந்திருந்தார். அவருக்கு எதிரில் நாற்காலியில் திருத்தருப்பூண்டி வீரர் ஸ்ரீ ராமச்சந்திர நாயுடு உட்கார்ந்திருந்தார். அவருக்குப் பக்கத்தில் அந்த ஊர் வக்கீல்கள் இரண்டொருவர் உட்கார்ந்திருந்தனர். அவர்களுக்குள் அன்று நடந்த சம்பவங்களைப் பற்றியே சம்பாஷணைகள் நடந்துகொண்டிருந்தன. தொண்டர்களில் ஒரு சிலர் அந்தச் சம்பாஷணைகளைக் கவனித்துக் கொண் டிருந்தனர். பெரும்பாலோர் படுக்கையை விரித்து நடந்த அலுப்பினால் நன்றாய் நித்திரை செய்ய ஆரம்பித்தனர்.

அதிகாலை 5 மணிக்கு முன்னதாகத் தொண்டர்கள் எழுப்பிவிடப்பட்டனர். உடனே காலைக் கடன்களை முடித்துக் கொள்ள, குளத்தின் பக்கமாய்ப் போய், சிறிது நேரத்தில் திரும்பி வந்தனர். சிலர் அதிகாலையிலேயே ஸ்நானம் முடித்துக்கொண்டு திரும்பினர். வழக்கம்போல் பிரார்த்தனை நடந்தேறியது. அதற்குப்பின் சிற்றுண்டியும் ஆயிற்று. அன்றைத்தினம் சனிக்கிழமை காலை 8 மணிக்கு முள்ளியாற் றில் மீண்டும் ஒரு கூட்டம் கூட ஏற்பாடு செய்திருந்தபடி யால் தொண்டர்கள் எங்கும் செல்லப்படாதென்று தாக்கீது செய்யப்பட்டிருந்தனர். காலை 7 மணிக்கு மேல் தொண்டர்கள் வெளியே ரஸ்தாவில் வரிசையாய் வந்து நிற்க உத்திரவாயிற்று. சிறிது நேரத்தில் படை அங்கிருந்து

புறப்பட்டது. வலது புறமாய் சத்திரத்து ரஸ்தாவில் சென்று ராஜபாட்டையை அடைந்ததும், இடதுபுறமாய்த் திரும்பி மேல்நோக்கிச் செல்ல ஆரம்பித்தது.

இந்த ரஸ்தா முள்ளியாற்றை அனுசரித்தே சிறிது தூரம் சென்று இடையில் குறுக்கிட்ட ஒரு பாலத்தால் அந்த ஆற்றைத்தாண்டி ஊருக்குள் செல்ல ஆரம்பித்தது. அங்கங்கே ஒவ்வொரு வாயிற்படிக்கும் முன்னல் தொங்கிக் கொண்டிருந்த விலாசப் பலகைகள் அந்தந்த வீட்டுக்குடையவர் வக்கீலென்றும் டாக்டர் என்றும் தெரிவித்துக்கொண்டிருந்தன. வேதாரண்யத்திற்குக் கிளைப்பாதை போடப்பட்ட பின் ஜங்ஷனய் மாறிவிட்ட திருத்தருப்பூண்டி ரயில்வே ஸ்டேஷன் அடுத்திருந்தது. நாலைந்து தெருக்கள் சுற்றிக் கடைசியாக முந்தின நாள் சென்ற ரஸ்தாவை அடைந்து, நெடுக நடந்து போய், சிறு சந்தின் வழியாக முள்ளியாற்றுப் படுகையைத் தொண்டர்கள் அடைந்தனர்.

ஆற்றின் வலது கரையில் ஒரு புளியமரத்தடியில் தொண்டர்கள் கரையின் வாட்டத்தை அனுசரித்து மேலிருந்து கீழாக நாலைந்து வரிசைகள் அமைத்து உட்கார்ந்து கொண்டனர். உபன்னியாசத்திற்காக நாற்காலி மேஜைகள் போட்டுத் தயாராயிருந்தன. ஜனங்கள் சிறுகச்சிறுக வந்து நிழலுள்ள இடமாகப் பார்த்து உட்கார்ந்து கொண்டிருந்தனர். இதனல் கூட்டம் நெருக்கமின்றி வெகுதூரம் வரையில் பரவியிருந்தது.

கூட்டம் சரியாக 8 மணிக்கு ஆரம்பமாயிற்று. தலைவர் உபன்னியாசம் செய்ய ஆரம்பித்தார். முந்தினநாள் ஸ்ரீ ராமச்சந்திர நாயுடு திரும்பி வந்துவிட்டார் என்ற விஷயம் ஏற்கனவே ஜனங்களுக்குத் தெரிந்திருந்தாலும், அதன்பேரில் சர்க்கார் அபிப்பிராயம் என்னவென்பதை எடுத்துக்காட்டிக் கண்டிப்பதற்காக அதுவும் சொல்லவேண்டியது அவசியமாயிற்று. மேலும் அன்று கூட்டம் ஸ்ரீ நாயுடு அவர்களைப் பற்றித் தெரிவிக்கவே கூட்டப்பட்டதாகையால், விஷயம்

பூராவுக்கும் அதுவே அஸ்திவாரமான சங்கதியாகவும் இருந்தது. அதை அடிப்படையாக வைத்துக்கொண்டு தலைவர் அன்று பேசியதாவது:

"சகோதரர்களே! நேற்று இந்த இடத்தில் கூட்டம் நடைபெறும் சமயத்திலே, போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப்பட்ட ஸ்ரீ ராமச்சந்திர நாயுடு கூட்டம் முடிவடையும் முன்னமே விடுவிக்கப்பட்டு, நாங்கள் இவ்விடமிருந்து புறப்பட்டுபோன சமயம் திரும்பி வந்துகொண்டிருந்தார். ஒரு பெரிய மனிதரை அவமானம் பண்ணி அதன் மூலம் உங்கள் மனதில் கொதிப்பை உண்டாக்கி வைக்கச் சர்க்கார் பிரயத்தனம் பண்ணினார்கள். எனவே பொது ஜனங்களைப் பயமுறுத்துவதே அவர்களுடைய முழுநோக்கமும் முக்கிய நோக்கமுமாயிருந்திருக்கிறதென்பது செவ்வையாய்த் தெரிகிறது. இது பலிக்காத விதமாய் நீங்கள் உஷார்ப்பட்டு வெகுபுத்திசாலித்தனமாய் நடந்து கொண்டீர்கள். சர்க்கார் நேற்று பெரிய ஏமாற்றத்தை அடைந்துவிட்டார்கள். ஆகையால்தான் ஸ்ரீ நாயுடு அவர்களையும் அவ்வளவு அவசரமாய் விட்டு விட்டார்கள். நேற்று அவரைக் கைது செய்தது இ. பி. கோ 157 நெ. செக்ஷன் படிக்காகும். இது கலகக் கூட்டத்தாரை, சட்டவிரோதமான கூட்டத்தாரை ஆதரிப்பவர்களைக் கைது செய்யப்பட வேண்டியதற்காக ஏற்பட்ட சட்டம். எங்களை இந்தச் சர்க்காரும் கலகக்காரர்கள் என்ற வகுப்பில் சேர்த்துக் கொண்டு எங்களுக்கு இடவசதி செய்து கொடுத்தக் குற்றத்திற்காக ஸ்ரீ நாயுடு அவர்களை நேற்று கைது செய்தார்கள். நாங்கள் இவ்விடத்தில் செய்த கலகம் என்னவென்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். கலகம் ஏற்படுவதாயிருந்ததைத் தடுத்து, சர்க்கார் வீணாய் ரத்தக்களம் உண்டாக்கத் தயாராக இருந்ததை நிறுத்தியதே நாங்கள்செய்த கலகம்! அதுதான் நாங்கள் புரிந்த சட்ட விரோதமான காரியம்! இதற்காகவே நாங்கள் சட்ட விரோதமான கலகக்காரர்களென்று சர்க்காரால் கணிக்கப்பட்டு எங்களை ஆதரித்த ஸ்ரீ நாயுடுவைக் கைதியாக்கினர். இதற்குச் சரியான

முறையில் பதில் அளிக்கவேண்டியது நீங்கள்தான். நேற்று உங்கள் நடவடிக்கையால் எப்படி அவர்கள் நோக்கத்தைப் பூர்த்தியாக்காமல் செய்துவிட்டீர்களோ அது போலவே இன்றும் நீங்கள் செய்ய வேண்டியது அவசியமாகும். ஸ்ரீ நாயுடு எங்கள் விஷயத்தில் செய்திருக்கும் காரியம் நியாயமென்று நீங்கள் அபிப்பிராயப்பட்டால் அதுபோன்ற நியாயமான காரியத்தையே நீங்களும் தைரியமாகச் செய்து காட்டி சர்க்கார் நினைத்திருப்பது சரியல்லவென்று ருசுப்பிக்க வேண்டும்.'' இவ்வாறு தலைவர் சொல்லி வருகையில் கூட்டத்தில் நாலைந்துபேர் எழுந்திருந்து "என் சொந்த செலவில் நான் 10 தொண்டர்களுக்கு விருந்தளிக்கிறேன். நான் பத்துபேர்! நான் பத்துபேர்" என்று பங்கிட்டுக் கொள்ள முன்வந்து விட்டார்கள். ஸ்ரீ நாயுடு செய்த குற்றத்தையே தாங்களும் செய்யப்போவதாகவும் அவருக்கு வந்த தண்டனை தங்களுக்கும் கிடைக்கட்டும் என்றும் தைரியமாய்ச் சொல்லி நின்றார்கள். இதைச் சர்க்கார் சி. ஐ. டி. ரிப்போர்ட்டர்களும் குறித்துக்கொண்டே தான் இருந்தார்கள். இந்த அழைப்புகளெல்லாம் தலைவரால் ஒப்புக்கொள்ளப்பட்டன. அன்று பகல் போஜனத்திற்குத் தொண்டர்களைச் சேர்த்து அனுப்புவதாய் தலைவர் ஒப்புக்கொண்டார். அதன் பிறகு சிறிது நேரம் உபன்னியாசம் நடந்தபின் கூட்டம் சமாப்தியாயிற்று. ஜனங்கள் கலைந்து போயினர். தொண்டர்களும் புறப்பட்டு ஜாகைக்கு வந்து சேர்ந்தனர்.

ஸ்நானம்முடிக்காமல் இருந்த பெரும்பாலான தொண்டர்கள் அடுத்திருந்த குளத்திற்குச் சென்று ஸ்நானத்தை முடித்துக்கொண்டு திரும்பினர். மணி 10-30 ஆனதும் போஜனத்திற்கு மணியடிக்கப்பட்டது. தொண்டர்கள் பாத்திரங்களை ஏந்திக்கொண்டு உள்ளே போடப்பட்டிருந்த இலைகளில் போய் உட்கார்ந்து கொண்டனர். அன்று காலை விருந்து அரைமணி நேரத்திற்குள்ளாக முடிந்து விட்டது. சில தொண்டர்கள் அன்று விருந்துக்கு அழைத்திருந்த கனவான்கள் வீட்டிற்கு அனுப்பப்பட்டு விருந்துண்டு வந்த

னர். பாக்கி நின்ற தொண்டர்கள் இரண்டாவது பந்தியில் அமர்ந்து சாப்பிட்டு முடித்தனர். எல்லோரும் சாப்பிட்டு முடிய 11-30மணி ஆகிவிட்டது. தொண்டர்கள் வழக்கம் போல் தக்ளி நூற்பதும் பத்திரிகை வாசிப்பதுமாயிருந் தனர்.

## சன்மார்க்க சோதனை

பிரயாணம் ஆரம்பித்து அன்றோடு 14 நாட்கள் ஆகி விட்டன. இன்னும் இரண்டு நாட்கள் பிரயாணத்தில் பாக்கி. வேதாரண்யம் குறுகுவதாயிருந்தது. இந்த இடத்தில் தலைவர், தொண்டர்கள் தங்களுக்கு விதிக்கப் பட்டிருந்த நிபந்தனைகளின்படி சரிவர நடந்து வருகிறார் களா என்று ஒருமுறை பரீக்ஷை செய்ய விரும்பினார். ஆகையால் அன்று பிற்பகல் மௌனநேரம் முடிந்தவுடன் 2மணி சுமாருக்குச் சத்திரத்தின் உட்புறத்தில் ஒரு கூட்டம் கூட்டப்பட்டது. அதில் தொண்டர்கள் மட்டும் அனுமதிக்கப் பட்டனர். பொடி போடுவதும், பீடி பிடிப்பதும், வெற்றிலை புகையிலை உபயோகிப்பதும் பிரயாணத்தில் கூடாதென்று ஆரம்பத்திலிருந்தே விலக்கப் பட்டிருந்தன. விலக்க முடி யாத ஒரு சிலர் பொடிமட்டைகளை ரகசியமாய் இடுப்பில் செருகிக்கொண்டே வந்து கொண்டிருந்தனர். போகுமிடங் களில் இரண்டொருவர் ரகசியமாய் வெளியே போனது போல்போய், பீடி வாங்கிப் பிடித்து வந்து கொண்டிருந் தனர். தொண்டர்கள் கையில் பணம் விட்டுவைத்தால் இந்தச் சேஷ்டைகளெல்லாம் நடைபெறுமென்பதற்காகவே பிரயாணம் புறப்படுவதற்கு முன் திருச்சியிலேயே அவரவர் களிடமிருந்த பணமெல்லாம் கேட்டுவாங்கி பொக்கிஷதார் ஸ்ரீமான் பி. கே. ராமாச்சாரி வசம் ஒப்புவித்து அவரவர் பேரால் வரவு வைத்துக் கொள்ளப்பட்டிருந்தது. என்றா லும் அங்கங்கே ஒரு சிலர் சிறு தொகைகளைக் கையில் வைத்துக்கொண்டே இருந்தார்களென்பது பின்னால் பொடி யும் புகையிலையும் உபயோகமாய் வந்ததிலிருந்து தெரிய வந்தது. வெற்றிலை விலக்கப்பட்டதால் சிலர் நிபந்தனைக்கு

கட்டுப்பட்டவர்களெனக் காட்டிக் கொள்வதற்கு வெற்றிலை நிறுத்தி விட்டு வெறும் புகையிலையை வாயில் போட்டு மெல்லும் வழக்கம் கொண்டிருந்தார்கள். இந்த விஷயங்களெல்லாம் தொண்டர்களுடனேயே பழகும் காப்டனுக்குத் தெரிந்திருந்தன. அவர் மூலமாய்த் தலைவருக்குத் தெரிந்து இவற்றையெல்லாம் மீண்டுமொருமுறை நிறுத்தும்படி செய்வதற்காகவே அன்று பரீக்ஷை ஏற்பாடாயிருந்தது. மொத்தம் தொண்டர்கள் நூற்றுச் சொச்சம் பேரில் மேலே சொன்ன பழக்கங்களை விடாது கைக்கொண்டு வந்தவர்கள் ஒரு பத்து பேருக்கு மேல் இருக்க மாட்டார்கள்.

அந்தக் கூட்டத்தில் தலைவர் யார், யார் பொடி போட்டு வருகிறுர்களென்று கேட்ட சமயம் மூன்று நான்கு பேர்கள் எழுந்திருந்தனர். அவர்களிடம் பிரயாண நிபந்தனைகளை ஞாபகமூட்டி, தலைவர் பொடி மட்டைகளைக் கேட்டு வாங்கி கூரைமேல் எறிந்துவிட்டு, இனிமேல் உபயோகிக்கக் கூடாதென்று எச்சரிக்கை செய்து விட்டார். அது போலவே ரகசியமாய்ப் பீடி உபயோகிப்பவர்களையும் எழுந்திருக்கும்படி கேட்டார். கூட்டத்தில் எழுந்திருக்க வெட்கப்பட்டுக் கொண்டு ஒருவரும் எழுந்திருக்கவில்லை. இதற்குள் காப்டன் தான் பார்த்த ஆசாமிகளைக் காண்பித்தார். அதன் பிறகு அவர்கள் எழுந்து தமக்கு ஒன்றும் வழக்கமில்லை யென்றும் தவறுதலாக அன்று உபயோகித்து விட்டதாகவும், மன்னிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டதின் பேரில் இனிமேல் அவ்வாறு செய்வதாகப் புலன் கிடைத்தால் படையிலிருந்து நீக்கப்படுவார்கள் என்று தலைவர் எச்சரிக்கை செய்தார். ஆனல் புகையிலை விஷயம் மட்டும் ரகசியத்திலேயே அடங்கி விட்டது. அதைப் பற்றி கூட்டத்தில் ஒன்றும் பிரஸ்தாபம் உண்டாகவில்லை.

நிற்க, அந்தக் கூட்டத்திலேயே தலைவர் ஒரு தொண்டரைப் படையிலிருந்து நீக்கி வீட்டிற்கு அனுப்பி விட்டதாகவும் ஒரு சமாசாரம் தெரிவித்தார். மன்னிக்கக் கூடாத குற்றம் செய்ததற்காக அவர் விலக்கப்பட்டிருக்கிறுர்

என்று தலைவர் சொன்னதன் மேல் தொண்டர்கள் அதைப் பற்றி மேற்கொண்டு தெரிந்துகொள்ள எண்ணவில்லை.

அன்று மாலை 4 மணிக்கு இரண்டாவது வேளை போஜனத்திற்கு மணி அடித்துவிட்டது. தொண்டர்களெல்லோரும் ஒரு மணி நேரத்திற்குள்ளாகப் போஜன ஜோலி முடித்துக் கொண்டனர். மாலை 5 மணிக்குப் படை அங்கிருந்து புறப்பட்டது. அந்த ஊர்க்கடைத்தெருப் பக்கமாய் வந்தபொழுது படை அநேக இடங்களில் நிறுத்தப் பட்டு உபசரிக்கப்படலாயிற்று. முந்தினநாள் கூட்டத்தில் போலீஸார் பண்ணின அட்டகாசங்களைக் கண்டு ஜனங்கள் பயப்படுவதற்குப் பதிலாக 'ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்' என்பது போல் முன்னிருந்த உற்சாகத்திற்கு இரட்டிப்பு உற்சாகத்துடனும் ஆவேசத்துடனும் விளங்கிக் கொண்டிருந்தார்கள். ஒவ்வொருவரும் உபசரிப்பு நிகழ்த்தியதோடு தங்கள் பெயர் விலாசங்களையும் சர்க்காருக்குத் தெரியும்படியாய் பகிரங்கப் படுத்தலாம் என்றும் தைரியத்தோடு சொல்லி நின்றார்கள்.

முதன்முதல் ஒரு ஜவுளிக் கடைக்கெதிரில் படை நிறுத்தப் பட்டது. அக்கடைக்காரர் தொண்டர்களுக்கு இளநீர்களை வெட்டிக்கொடுத்துக் கொண்டே வந்தார். இது முடிந்ததும் படை அங்கிருந்து புறப்பட்டு சற்றுதூரம் சென்று இடது பக்கமாய்த் திரும்பியது. இந்தத் தெருவில் ஷாப்புக் கடைகள் வரிசையாயிருந்தன. ஒவ்வொரு கடையிலும் பெப்பர்மெண்டு மிட்டாய்களைத் தொண்டர்களுக்கு வழங்கி அநேக டின்களைக் காலி செய்து விட்டார்கள். இந்தத் தெருவைத்தாண்டிப் படை மேலும் சற்று தூரம் போன பின் வலது புறமாய் ஒரு தெருவில் திரும்பியது. இந்தத் தெருவில் பழக்கடைகள் காணப்பட்டன. கடைகளின் முன்னால் தெருப் பூராவும் சாக்குகளும் கித்தான் துணிகளும் விரிக்கப் பட்டிருந்தன. தொண்டர்கள் அவற்றின் பேரில் உட்கார்ந்து கொண்ட பின்பு, ஒவ்வொரு தினுசுப் பழமாக வழங்கப்பட்டு வந்தன. ஆரஞ்சுப்பழமென்ன, வாழைப்பழமென்ன, பலாப்

பழமென்ன, தட்டுக்குப் பின்னால் தட்டுகளாய் ஒவ்வொரு தொண்டருக்கும் வழங்கப்பட்டுக்கொண்டே போயின. இந்தத் தெருவோடு வரவேற்புகளெல்லாம் முடிவடைந்து படை பிரயாணத்தை ஆரம்பித்து மேல் நோக்கி மேல மருதூர்பக்கமாய் நடக்க ஆரம்பித்தது. அப்பொழுது மாலை 5-30 மணிக்கு மேலேயே இருக்கலாம். திருத்தருப்பூண்டி வரை மருத நிலமாக வந்த தஞ்சை ஜில்லா அதற்கப்பால் பூராவும் நெய்தல் நிலமாகவே வர ஆரம்பித்து விட்டது.

## மேலமருதூர்

சமுத்திரக்கரை சமீபித்துள்ளதைக் காட்டி நின்ற இந்த நிலத்தில் நடந்துபோவது தொண்டர்களுக்கு மிகவும் கஷ்டமாயிருந்தது. பூராவும் மணலில் நடப்பதென்றால் பிரயாணம் தாமதமாய் மணிக்கு ஒருமைல் வேகத்திலேயே போக முடியும். ஊரில் நடந்த எதிர்பாராத உபசரிப்பு களால் ஏற்கனவே தாமதமாயிருந்தபடியால் மாலைப் பொழுது அன்று வெகுவேகமாய் மறைந்து போவதுபோல் தோன்றியது. ஒவ்வொரு ஊருக்கும் இடையில் உள்ள தூரம் இதுவரை இருந்து வந்தது போல் 5 மைலாகவே இருந் திருந்தால் சிரமம் இன்னும் ஜாஸ்தியாயிருக்கும். மணலுள்ள பாதை என்பதை அறிந்தே நடக்கவேண்டிய தூரம் கம்மி யாகவே ஏற்படுத்தப்பட்டிருந்தது, இது தொண்டர்களுக்குச் சற்று ஆறுதல் தரக்கூடிய விஷயமாயிருந்தது. அன்று மாலை மேலமருதூரை அடைந்த சமயம் மணி 6-30 க்கு மேலேயே ஆகியிருந்தது. அந்த ஊர் ஜனங்கள் பெருந்திரளாகக் கூடி வரவேற்புக்காகக் காத்திருந்தனர். அவர்களைத் தொடர்ந்து தொண்டர்படை ஒரு மடத்திற் கருகில் அழைத்துச் செல்லப் பட்டது. அங்கு மடத்திற்கு முன்னால் தொண்டர்கள் தங்கு வதற்குப் பெரிய பந்தல் போடப்பட்டிருந்தது. அன்றைக் கூட்டம் அந்த மடத்திற்கு இடது பாரிசத்தில் அறுவடை யான வயலில் கூட்டப்பட்டிருந்தது. அந்த வட்டகையில் பிரசாரம் செய்திருந்த ஸ்ரீமான் சி. வி. ராஜகோபாலாசாரி யாரும் அன்றைக் கூட்டத்தில் காணப்பட்டார். பிரார்த்தனைக்

குப் பின் தலைவர் எழுந்து வழக்கமாய்ப் போகுமிடங்களிலெல் லாம் சொல்லிவரும் உப்புசத்தியாக்கிரகத் தத்துவத்தையும் பொது ஜனங்கள் இதற்கு ஆதரவளிக்க வேண்டியதன் அவசியத்தைப் பற்றியும் தீண்டாமை மதுவிலக்கு முதலான விஷயங்களைப் பற்றியும் சுமார் ஒரு மணி நேரம் வரை உபன்னியாசம் பண்ணினர்.

அன்று கூட்டம் முடிய இரவு சுமார் 8-30 மணி ஆகி யிருக்கும். கூட்டம் கலைந்து போனதும் தொண்டர்கள் எழுந்து மூட்டைகளைப் பந்தலில் கொண்டுபோய் வைத் தனர். அந்த ஊரார் இரவில் தொண்டர்களுக்கு ஏதேனும் ஆகாரம் செய்து வைக்கவேண்டுமென்று சர்க்கரைப் பொங்கல் தயாரித்திருந்தனர். தொண்டர்களுக்கு அது சமயம் சாப்பிட வேண்டுமென்ற அவசியமே இல்லாதிருந் தாலும் அந்த ஊர் மஹாஜனங்கள் அன்போடு அளித்ததை மறுக்கமாட்டாதவராய் சொற்பமாய் ஆகாரம் பண்ணிக் கொண்டனர் பிறகு சற்று நேரம் எல்லோரும் பேசிக் கொண்டிருந்து மணி 10-30 அளவில் நித்திரை போயினர்.

நள்ளிரவில் ஸ்ரீமான் ராஜாராம் கொம்டா என்பவர் மதுரையிலிருந்து படையில் சேருவதற்காக அந்த இடத் திற்கு வந்து சேர்ந்தார். அவர் மதுரை ஸ்ரீமான் அ. வைத்தியநாதய்யரிடமிருந்து பலமான சிபார்சுக் கடித மொன்று கொண்டுவந்திருந்தார். அதில் கண்ட விஷயங் களில் முக்கியமானது என்னவென்ருல் ஸ்ரீமான் ராஜாராம் சபர்மதி ஆசிரமத்தில் இருந்து பழகியவர் என்பதுதான். இந்த யோக்கியதாம்சம் காரணமாகத் தலைவரால் அவர் படையில் வெகு பிரியத்தோடு சேர்த்துக் கொள்ளப் பட்டார்.

அதிகாலை 4 மணிக்கு முன்னதாக வழக்கம் போல் மணி யடித்து சங்கூதப்பட்டது. தொண்டர்களெல்லோரும் கைப் பாத்திரங்களையும் கரண்டிகளையும் எடுத்துக் கொண்டு வெளியிடங்களுக்குச் சென்று காலைக் கடன்களை முடித்துக்

கொண்டு திரும்பி வந்து சேர்ந்தனர். புதிதாய்ச் சேர்ந்த தொண்டர் பெயரும் கடைசியில் அன்று முதலே பதிவு செய்யப்பட்டது. பிறகு பிரார்த்தனை நடந்தது. அதன் பிறகு சிற்றுண்டி வழங்கி எல்லோரும் அருந்தியானபின்பு, பிரயாணப்படுவதற்காகத் தொண்டர்கள் வரிசையாக வெளியே வந்து நின்றனர். சற்று நேரத்தில் படை அங்கிருந்து புறப்பட்டது. இந்த இடத்தில் ஒரு தொண்டர் திருத்தருப்பூண்டியில் செய்த எச்சரிக்கையை மீறி ரகசியத்தில் பீடி பற்ற வைத்தார் என்பதற்காகப் படையிலிருந்து நீக்கப்பட்டார். நீக்கியதுதான் தாமதம்; ஆள் காணப்படவில்லை. எல்லோருக்கும் முன்னால் புறப்பட்டிருந்தார். ஆனால் இந்த விஷயம் யாருக்கும் தெரியாது. படையோடு தான் அவர் வந்து கொண்டிருக்கலாமென்று நினைத்தவராய்த் தொண்டர்கள் நடந்தனர். தொண்டர்கள் மணலில் கால்கள் பதிய வெகு கஷ்டத்தோடு அடியெடுத்து வைத்துக்கொண்டு நடந்து போய்க்கொண்டிருந்தனர். அரை நாழிகை வழி நடந்ததும் பொழுது புலர ஆரம்பித்தது. வழிநெடுகத் தாழைப் புதர்கள் நிறைந்திருந்தன. கண்படு மிடங்களிலெல்லாம் கருவேல மரங்கள் காணப்பட்டன. வேதாரண்யம் என்னும் பேரை அனுசரித்து அந்த வட்டகை பூராவும் தாவர வர்க்கத்துக்குத் தாயகமாய் விளங்கியது.

## தகட்டூர்

பொழுது புலர்ந்து வெகுநேரமாகியும் இடைவழியில் மனிதர் போக்கு வரத்து காணப்படவில்லை. காலை 7 மணிக்குப் படை தகட்டூரை நெருங்கிக் கொண்டிருந்தது. அந்த ஊரார் வரவேற்புக்காக ஒருவரும் வரவில்லை. இந்தப் பக்கங்களில் ரஸ்தாவும் பக்கங்களும் எல்லாம் ஒரே மணற் பாங்காக இருந்தபடியால் ரஸ்தாவென்று அழைக்கக் கூடிய பாகம் இரு புறத்திலும் தாழைப்புதர் இருப்பதைப் பார்த்தே தெரிந்து கொள்ளவேண்டும். ரஸ்தாவிலிருந்து ஊர் வெகு தூரத்திற்கப்பாலிருந்தது. ரஸ்தாவை யடுத்து அந்தக் காட்டில் ஓர் ஊருணிக்கரையில் ஒரே ஒரு கட்டிடம் மட்டும்

கின்றது. இது பூராவும் தாழ்வாரமாகவே இருந்தது. இதில் நுழையவேண்டுமானால் குனிந்து முதுகு வளைந்து கொண்டு தான் போகவேண்டும். இல்லையென்றால் அஜாக்கிரதைக் காக உடனே அபராதம் விதித்துவிடும். அப்பேர்ப்பட்ட இடத்தில் அன்றைய ஜாகை ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆனால் அந்தக் கட்டிடத்திற்கு முன்னால் பெரிய பந்தலொன்று போடப்பட்டிருந்தது. இதுவும் அந்தக் கட்டிடமும் கூடி அன்று தொண்டர்களுக்குச் சௌகரியக் குறை வில்லாத ஜாகையாகவே அமைந்திருந்தது. போலீசாரால் பய முறுத்தப்பட்ட கிராமங்களில் இவ்வளவு நல்ல ஜாகை கிடைத்தது பற்றித் தொண்டர்களும் தலைவரும் வெகு திருப்தி கொண்டவர்களாய் அன்றைப் பொழுது அங்கு தங்கியிருந்தனர். அந்தக் கட்டிடத்திற்கு ஒட்டினாற்போல் சமையலிடமும் கீற்றுகளால் நிர்மாணிக்கப்பட்டுச் சமையலுக் கான ஏற்பாடுகளும் நடந்து கொண்டிருந்தன.

நிற்க, இந்த இடத்திற்கு வந்த பின்புதான் மேலமருதூரில் படையினின்று நீக்கப்பட்ட தொண்டர் படை யோடு வரவில்லையென்று தெரிந்தது. அவனைத் தேடுமாறு மேலமருதூருக்கு ஆளை அனுப்புவதென்று எண்ணிக் கொண்டிருந்த சமயம், ஒருவர் வேதாரண்யத்திற்குப் போகும் ரயில் பாதை வழியாய் மேற்சொன்னத் தொண்டர் போய்க்கொண்டிருந்ததைப் பார்த்ததாகத் தகவல் சொன்ன பின்பு அவனைப் பற்றிய கவலை சிறிது ஒழிந்தது.

தொண்டர்கள் ஜாகைக்குள் மூட்டைகளை வைத்து விட்டுப் பாத்திரம் கரண்டிகளைக்கொண்டு வெளியே போயி னர். அங்கு பார்க்குமிடமெல்லாம் தாழைப் புதர்களே காணப்பட்டன. தரையெல்லாம் மணல் தரையே அல்லா மல் வேறு கெட்டித் தரையே கிடையா. இவற்றிலேயே புன்செய் வயல்கள் தாழைப் புதர்களால் வேலியிடப்பட்டு சதுரம் சதுரமாய் ஒதுக்கப்பட்டிருந்தன. இவைகளில் சணல் முதலிய மணல் தரையில் அபிவிருத்தியாகும் பயிர் கள் காணப்பட்டன. ஜாகை ஏற்படுத்தியிருந்த இடத்திற்கு

அடுத்து இடது பாரிசத்தில் ஒரு சுனையிருந்தது. இதனுடைய தண்ணீர் அன்று சமையலுக்கு உபயோகிப்பதென ஒதுக்கப்பட்டிருந்தபடியால் அதில் எவரும் ஸ்நானம் செய்யக்கூடாதென்று உத்திரவிடப்பட்டிருந்தது. அதன் தண்ணீர் அவ்வளவு தெளிவாகக் காணப்படவில்லையென்றாலும், சமீபத்தில் இருந்ததென்ற காரணத்தால் அதனுடைய தண்ணீரையே வடிகட்டி எடுப்பதென ஏற்பாடாயிருந்தது. ஆனால் ஒரு பர்லாங்கு தூரத்தில் வேறொரு சுனையும் அங்கிருந்து மீண்டும் அரை பர்லாங்கு நடந்தால் மீண்டும் ஒரு சுனையும் இருந்தன. வெளியே சென்ற தொண்டர்கள் தேக பாதைகளைத் தீர்த்துக்கொண்டு இரண்டாவது சுனைக்கே நீராடப்போயினர். இதனுடைய தண்ணீர் தெளிவாகவும் குடிப்பதற்கு ருசியாகவும் இருந்தது. கொடிகளால் நிறைந்த இந்தச் சுனையின் கரையில் புங்கமரங்களும் பிறமரங்களும் வளர்ந்திருந்தன. ஆடு மாடு மேய்க்கும் இடைப்பையன்கள் வெள்ளாடுகளைப் பற்றிக்கொண்டு அந்த இடத்திற்கு வந்திருந்தனர். அடுத்திருந்த புல்தரைகளில் ஆடுகள் நன்றாய் மேய்ந்து கொண்டும் செடி கொடிகளைத் தின்றுகொண்டும் இருந்தன. எருமை மாடுகள் தண்ணீர் கலங்கிச் சேராயிருந்த இடங்களில் சுகமாய்ப் படுத்துக் கொண்டிருந்தன. இந்தச் சுனைக்குப் போன தொண்டர்கள் சிலர் அப்பொழுதே ஸ்நானம் முடித்துக் கொண்டனர். சிலர் தண்ணீர் வசதியைப் பார்த்து எண்ணெய் ஸ்நானம் அவ்விடத்தில் முடித்துக்கொண்டால் நலமாயிருக்குமென்று பக்கத்து ஊர்களுக்குப் போய் எண்ணெய் வாங்கி வந்து ஸ்நானம் செய்தனர். நீந்தக் கூடியவர்களெல்லாம் தண்ணீரே கதியாய்க் கிடந்து சாப்பாட்டு நேரத்திற்கே கரையேறுவதெனத் தீர்மானித்திருந்தனர். சிறுகச் சிறுக ஸ்நானம் முடித்துக் கொண்ட தொண்டர்கள் ஜாகைக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தனர்.

ஜாகையிருந்த இடத்திற்கு முன்னால் இருந்த பரந்த முற்றத்தில் சுற்றிலும் பெரிய மரங்கள் நிழல் கொடுத்துக் கொண்டிருந்தன. வலது பாரிசத்திலிருந்த மரங்களோடு

நீண்ட கயிறுகள் கட்டி ஈர வேஷ்டிகளைத் தொண்டர்கள் காயப்போட்டிருந்தனர். இடது பாரிசத்திலுள்ள மரங்களோடு நீண்ட கயிறுகளில் மதுவிலக்குப் பிரசாரப்படங்கள், சாப்பிட்டானதும் பிரசாரம் நடத்துவதற்காகத் தொங்க விடப்பட்டிருந்தன. அதைப் பார்த்துக் கொண்டே அநேக ஜனங்கள் ஆதித்திராவிடர்களும் மற்றையோரும் பிரசாரத்தை எதிர்பார்த்தவர்களாயிருந்தனர்.

அன்று 11 மணிக்குள்ளாக முதலாவது போஜனத்திற்கு மணியடிக்கப்பட்டதும், தொண்டர்கள் பந்தலில் போடப்பட்டிருந்த இலைகளில் போய் உட்கார்ந்தனர். அன்றைய விருந்தும் சொந்தச் செலவில் ஆனபடியால் சுருக்கமாக இரண்டு கறிவகை, ஒரு சாம்பார் மோருடன் தயாரிக்கப்பட்டிருந்தது. ரசமில்லாத குறையால் எவரும் சாப்பிடக்கூடிய அளவைக் குறைத்துக் கொண்டதாகக் காணப்படவில்லை. அன்று வெகு சீக்கிரம் போஜன ஜோலி முடிந்துவிட்டது. பகல் 12 மணி சுமாருக்கு மதுவிலக்கு பிரசாரம் ஆரம்பமாயிற்று. அன்று பிரசாரம் செய்தவர் தொண்டர்களில் ஒருவராகிய ஸ்ரீமான் காமாக்ஷிபாரதி ஆவர். இவர் அன்றைய தினமே புதிதாகப் பிரசார வேலை ஏற்றுக்கொண்டிருந்தாராலும் நன்ருகப் பழகியவர் போலவே விளக்கிக் காட்டி வந்தார். சுமார் ஒரு மணி நேரம்வரை அன்று பிரசாரம் நடந்திருக்கும். அதற்குப் பின் அட்டவணைக் கிரமப்படி மற்றைய அலுவல்களும் வழக்கம் போல் நடந்தேறின. மௌனவிரதம் வெகு ஒழுங்காக அனுசரிக்கப்பட்டது. தலைவர் பந்தலில் வலது புறமாய் படுக்கையை விரித்து உட்கார்ந்து கொண்டு தக்ளி நூற்றுக்கொண்டிருந்தார். தொண்டர்கள் பந்தலிலும் கட்டிடத்திற்குள்ளேயும் தக்ளி நூற்போரும், பத்திரிகை படிப்போருமாயிருந்தார்கள். தொடர்ந்தாற் போல பத்திரிகை விஷயத்தை ஸ்ரீமான் கே. வி. ராமன் ஆங்கிலத்தில் சொல்லி வந்தார். அதையே தமிழிலும் டி. ஆர். பத்மநாபன் தர்ஜமா செய்து வந்தார்.

அன்று மாலை 4 மணிக்கெல்லாம் இரண்டாவது வேளை போஜனத்திற்கு மணியடிக்கப்பட்டது. தொண்டர்கள்

எழுந்து போய் இலையில் அமர்ந்தனர். இரண்டு கறிவகை ரசம் மோருடன் அளிக்கப்பட்ட போஜனத்தை திருப்தியா யுண்ட தொண்டர்கள் எழுந்து இலைகளை ஒதுக்கிடத்தில் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டு கைகால் முகங் கழுவிக் கொண்டு புறப்படத் தயாராயினர். மாலை 5 மணிக்கெல்லாம் படை அங்கிருந்து புறப்பட்டு மணற்பாதை வழியாகவே ஆயக்காரன்புலத்தை நோக்கிச் செல்லலாயிற்று.

சற்று தூரம் போனபின்பு அங்கங்கே கொடிப் புதர் களோடு கூடிய தண்ணீர் தேங்கிக் கிடந்த பல பள்ளங்களால் நிறைந்த ஒரு சிற்ருறு தென்பட்டது. அதன் இரு கரைகளிலும் சவுக்கு, கருவேல மரங்கள் அடர்த்தியாய் வளர்ந்திருந்தன. அந்தக் கரையின்மேல் அமைந்திருந்த ஒற்றையடிப் பாதை வழியாய் படை நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. வெகு தூரத்திற்கப்பால் சிற்றூர்கள் இலைமறைகாய் போல மரஞ் செடிகளால் மறைவுண்டிருந்தன. சற்று தூரம் அந்த ஆற்றின் கரையிலேயே போனபின் அங்கோர் இடத்தில் ஒருதோப்பில் ஒரு வீடு காணப்பட்டது. அங்கு வரவேற்புக்காக அழைத்துச் செல்லப்பட்ட படை, அங்கு வழங்கப்பட்ட பாயசம் அருந்திய பின்பு அங்கிருந்து மீண்டும் பிரயாணத்தை அந்த ஆற்றின் கரையிலேயே மேல் நோக்கி நடத்திக்கொண்டு போயிற்று.

## ஆயக்காரன்புலம்

அந்த ஆறு வரவர அகலமாய்க்கொண்டே பெரிய ஆற்றுப் படுகை உருவமாய்க் கொண்டே வந்தது. அதன் இடது கரையில் ரஸ்தாவும் அகலமாய்க் கொண்டே வந்தது. இரு புறங்களிலும் தாழைப்புதர்களால் மறைக்கப்பட்ட அந்த ரஸ்தா வழியே அந்த வேளையில் ஆயக்காரன்புலம் என்ற ஊரின் எல்லையிலேயே போய்க் கொண்டிருந்தது. ஆயக்காரன்புலம் என்பது நான்கு மைல் சுற்றளவிலுள்ள பல சிற்றூர்களுக்கும் மொத்தமாயிடப்பட்ட பெயராகும். தங்கவேண்டிய இடம் அந்த இடத்திலிருந்து ஒன்றரை மைல் தூரத்திலிருந்தது. பக்கத்துச் சிற்றூர்களிலிருந்து வயது

முதிர்ந்த பெரியவர்கள் சிலர் ரஸ்தாவில் வந்து படைக்காக எதிர் பார்த்துக் கொண்டிருந்தனர். படை அருகில் வரவும் அவர்களெல்லோரும் படைக்கு முன்னல் வந்து நிலத்தில் விழுந்து நமஸ்காரம் பண்ணி எழுந்தார்கள். அந்தப் பக்கத்திலுள்ளவர்கள் படையின் வரவை எத்தகைய பெரும் பாக்கியமாகக் கருதியிருந்தார்களென்பதற்கு அது ஒரு அத்தாட்சியா யிருந்தது. அவர்களுக்குச் சொல்ல வேண்டிய வார்த்தைகளை உப்பு சத்தியாக்கிரகச் சம்பந்தமாகச் சொல்லியான பின்பு படை மீண்டும் அந்த இடத்திலிருந்து புறப்பட்டு மேல் நோக்கிச் சென்று கொண்டிருந்தது. இடையில் மேலும் சிற்றூர்கள் வந்து கொண்டிருந்தன. சி. ஐ. டி. உத்தியோகஸ்தர்கள் இரட்டை மாட்டு வண்டியில் தங்கள் சாமான்களை யெல்லாம் ஏற்றிக்கொண்டு மெதுவாக முன்னல் நடந்து போய்க்கொண்டிருந்தனர். இந்த மணற் பிரதேசங்களில் குடிசைகள் மதிலில்லாமல் தரைவரை கீற்றுக் கூரை அப்படியே கவிழ்த்து வைத்தது போல் அமைக்கப் பட்டிருக்கின்றன. கூரையில் அங்கங்கே சிறு சிறு துவாரங்கள் விட்டு வேண்டும் போது திறக்கவும் மூடவுமாக அமைந் திருந்தன. இந்த இடங்களில் ஜாஸ்தி தொகை செலவு செய்து கெட்டி அஸ்திவாரம் போட்டு வீடு கட்டிக் கொள்ள முடியாத ஏழை ஜனங்கள் பெரும்பாலும் இந்த மாதிரி குடிசைகளையே கட்டிக்கொண்டு வாழ்ந்து வருகிறார்கள். பெருங் காற்று அடித்து குடிசை முறிந்து விழுந்தாலும் உயிருக்குச் சேதமோ மற்ற தொந்திரவோ இப்பேர்ப்பட்ட குடிசைகளில் ஏற்படாதாகையால் இவ்வாறு அமைக்கப் படுவது மணற் பிரதேசமான இந்த வட்டகைகளில் ஏற்பட்ட வழக்கமாகும்.

அன்று மாலை 6-15 மணி சுமாருக்குத் தொண்டர்படை வேறெங்கும் காணமுடியாத அந்த ஸ்தலத்திற்கே உரியதான காட்சிகளைக்கண்டு ஆனந்தித்துக்கொண்டு நடந்து போன பொழுது அந்த இடத்தில் அந்த ஆற்றுக்கு அக்கரையிலிருந்த மாரியம்மன் கோவில் என்ற ஊரிலிருந்து பிரமுகர்கள் கூடி

வரவேற்புக்காக ரஸ்தாவில் வந்து படைக்காக எதிர் பார்த்துக்கொண்டிருந்தனர். படை அவர்களை நெருங்கியதும் நிறுத்தப்பட்டு ஆற்றுப் படுகைக்கு அழைத்துச் செல்லப் பட்டது. அங்கேயே அன்றைக் கூட்டம் கூடிற்று.

கூட்டம் ஆரம்பமான பொழுது சிறிது வெளிச்சமிருந்தது. அப்பொழுதே காந்த விளக்குகளும் வந்துவிட்டன. கூட்டம் முடிந்தபின் பூராவும் இருட்டிப் போயிருந்தது. கூட்டம் முடிந்ததும் படை ஜாகை ஏற்பாடாயிருந்த மாரியம்மன் கோவிலுக்கு அழைத்துச் செல்லப்பட வேண்டியிருந்தது. எனவே அந்த கூட்டத்தோடேயே அங்கிருந்து புறப்பட்டு ஆற்றைக் கடந்து அக்கரை ஏறி படை ஊர்ப்பக்கமாய்ச் செல்ல ஆரம்பித்தது. ஆற்றுக்கும் ஊருக்கும் இரண்டு பர்லாங்கு தூரமிருக்கும். தாழைப் புதர்களால் அணைக்கப் பட்ட குறுகிய பாதை வழியாய் வளைந்து வளைந்து புன் செய்களைத் தாண்டிக் கடைசியாக ஜாகை ஏற்படுத்தியிருந்த இடமாகிய மாரியம்மன் கோவிலை அடைந்தது.

இந்த இடத்தில் அந்த ஊரார் எல்லோரும் அன்று உபன்னியாசம் நடைபெறுமென்று காத்துக்கொண்டிருந்தார்கள். ஆகையால் இரண்டாம்முறை அங்கு உபன்னியாசம் நடத்த வேண்டும்போல் இருந்தது. ஆனாலும் மதுவிலக்குப் பிரசாரம் நடைபெற வேண்டியது பாக்கியாயிருந்தபடியால் அந்த வேலை அங்கு வைத்துக்கொள்ளப் பட்டது.

அங்கு மாரியம்மன் சந்நிதியிலேயே கூட்டம் கூடியிருந்தது. மேடை கோவிலை நோக்கியவாறே அமைக்கப்பட்டிருந்தது. மேடைக்கும் கோவிலுக்கும் இடையில் ஜனங்கள் உட்கார்ந்திருந்தனர். ஒவ்வொரு படமாக எடுத்து ஸ்ரீமான் சுப்பய்யா தொங்க விடுவதும், மடித்து வைப்பதுமாயிருந்தார். தலைவர் மேடையிலிருந்தவாறே ஒவ்வொரு படமும் தொங்கவிடும் பொழுதும் அதன் தாத்பரியங்களை எடுத்து உபன்னியாசம் செய்து கொண்டே இருந்தார். அங்கு வெகு நேரம் வரையில் பிரசாரம் நடந்தது. பின்னர் கூட்டம் கலைந்து போயிற்று.

அங்கு தொண்டர்களுக்காக உப்புமா கிண்டி வைக்கப் பட்டிருந்தது. ஒவ்வொரு தொண்டருக்கும் வழங்கப்பட்டது. பானத்திற்காகப் பாலும் வழங்கப்பட்டது. எதிர்பாராது கிடைத்த அந்தச் சிற்றுண்டியைப் பெரு மகிழ்ச்சியோடு உண்ட தொண்டர்கள், சிற்றுண்டி முடிந்து சிறிது நேரம் வரை பேசிக்கொண்டிருந்தவர்களாய் அப்படியே பந்தலிலும் வெளியிலும் படுத்துறங்கலாயினர்.

அதிகாலை 4மணிக்கு முன்னதாகவே தொண்டர்கள் எழுப்பிவிடப் பட்டனர் எழுந்து காலைக் கடன்களை முடித்துக் கொண்டு பிராத்தனைக்காக வரிசையாய் வந்து உட்கார்ந்து கொண்டனர். ஆஜர்ப்பட்டி அழைத்தானதும் கால்மணி நேரம் வழக்கம்போல் பிரார்த்தனை நடந்தேறிய பின் சிற்றுண்டிக்காகத் தயாரித்திருந்த கஞ்சி தொண்டர்களுக்கு வழங்கப்பட்டது எல்லோரும் அருந்தியானபின் படை அன்றைப் பிரயாணத்தை ஆரம்பித்தது.

அன்று திங்கட்கிழமை அமாவாசையும் கூடிய புண்ணிய தினமாயிருந்தது. பிரயாணம் புறப்பட்டு சரியாக ஒரு பக்ஷம் கழிந்து பதினைருவது நாள் உதயமாயிருந்தது. அன்று காலையிலேயே வேதாரண்யம் போய்ச் சேர்ந்து விடத்தக்க தாயிருந்தாலும், இடைவழியில் ஓர் இடத்தில் ஒரு கனவான் அவசியம் தங்கிவிட்டுத் தான் போக வேண்டுமென்று தலைவரிடம் கேட்டுக்கொண்டிருந்தபடியால், நடக்கவேண்டிய தூரமும் வெகு குறைவாகவே இருந்தது. ஆகையால் அன்றைப் பிரயாணமும் பொழுதுபுலரும் சமயத்திற்கே ஆரம்பிக்கப்பட்டிருந்தது. மணற்பாதையில் முந்தினநாள் மாடுகள் வெகு கஷ்டப்பட்டு சாமான் வண்டியை இழுத்து வரவேண்டியிருந்தபடியால், அன்றைத்தினம் வண்டிக்கு ஒத்தாசையாகக் கூடவே இருந்து தள்ளிக்கொண்டு வரும் படி சில தொண்டர்கள் ஏவப்பட்டனர். இவர்கள் தவிர மற்ற தொண்டர்கள் பிரயாணத்தை நடத்திக்கொண்டே போயினர்.

சற்று தூரத்தில் நான்கு பாதைகள் வந்து சந்திக்கு மிடத்தில் ஒரு வழிகாட்டி மரம் நின்றது. அதில் நேராகச் சென்ற பாதை வேதாரண்யத்திற்கும் வலது புறமாய்ச் சென்ற பாதை முத்துப்பேட்டைக்கும் போவது தெரிந்தது. நேர்ப் பாதையைப் பின்பற்றி தொண்டர்கள் மேலே நடந்து போயினர். சுமார் ஒருமைல் தூரம் போனபொழுது அங்கு ரஸ்தாவில் ஒரு கனவான் இளநீர்களை வெட்டி வைத்துக் கொண்டு படைக்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். தொண்டர்கள் வெகு சிரமத்தோடு மெதுவாக நடந்து போய்க் கொண்டிருந்தபடியால் அந்த இடத்திற்குப் போன சமயம் காலை $7\frac{1}{2}$ மணி ஆயிருந்தது. பலருக்கு நல்ல தாகம். அப்பேர்ப்பட்ட சமயத்தில் ஒருவர் இளநீர்களோடு காத்துக் கொண்டிருந்தாரென்றால் அதைப் பார்க்கிலும் சிரேஷ்டமான உபகாரம் வேறு எதைச் சொல்லலாம்? அந்த இடத்தில் படை சற்று தாமதித்தது. அங்கு வழங்கப்பட்ட இளநீரை ஆளுக்கு ஒன்று இரண்டு வேண்டியமட்டும் பெற்று தாக சாந்தி செய்து கொண்டனர். சற்று முன்னால் போய்க் கொண்டிருந்த சி. ஐ. டி. உத்தியோகஸ்தர்களுக்காக ஜவான் கள் அவரை இளநீர் கேட்டதாகவும், அவர்களுக்குக் கொடுப்பதில்லை என்று மறுத்து விட்டதாகவும் அவரே சொன்னார்.

அங்கிருந்து ஒருமைல் நடந்தானதும் தங்கவேண்டிய இடம் வந்து விட்டது. ஆயக்காரன்புலத்துக்கும் வேதாரண்யத்திற்கும் அந்த இடம் ஏறக்குறைய சமதூரத் திலிருக்கும். அந்த இடத்தில் ரஸ்தாவை யடுத்து ஒரு மணல் மேட்டில் ஒரு பந்தல் போடப்பட்டிருந்தது. படை நேராக பந்தலுக்குச் சென்று மூட்டைகளையெல்லாம் வைத்து விட்டுத் திரும்பவும் ரஸ்தாப் பக்கமாகவே வந்தது. இந்தப் பக்கங்களில் வண்டித் தடம் விழுந்துள்ள பாகம்தான் ரஸ்தா வென்று நாம் குறிக்கிறோம். இந்த ரஸ்தா ஓரமாய்த்தான் வந்து தொண்டர்கள் வரிசையாய் உட்கார்ந்து கொண்ட னர். பக்கத்து ஊர் ஜனங்கள் சிறு கூட்டமாய் அங்கு கூடி

யிருந்தனர். தலைவர் அவர்களுக்குச் சிறிது நேரம் உபன்னி யாசம் நிகழ்த்தினுர். இது முடிந்ததும் கூட்டம் கலைந்தது. தொண்டர்கள் எழுந்து போய்க் காலைக் கடன்கள், ஸ்நானம் முதலானவைகளைக் கவனிக்கலாயினர்.

பந்தல் போடப்பட்டிருந்த இடத்திற்குப் பக்கத்தில் தாமரைக் கொடி படர்ந்த சுனையொன்று இருந்தது. அத னுடைய ஜலம் சமையலுக்காக உபயோகப்படுவதென்றும் அங்கே ஸ்நானம் செய்யலாகாதென்றும் உத்திரவா யிருந்தது. அங்கிருந்து ஒரு பர்லாங்குக்கப்பால் ரஸ்தா வோடு போனுல் அங்கு மற்றெரு சுனையிருந்தது. அதில் தான் தொண்டர்கள் போய் எல்லா ஜோலிகளையும் முடித்துக் கொண்டனர். இந்த வட்டகையில் சவுக்குக் காடுகளே பார்த்தவிடமெல்லாம் காணப்பட்டன. அங்கங்கே புங்கமரம் முதலான விருக்ஷ ஜாதிகளும் தென்பட்டன. சற்று நேரத்திற்குள் போஜனத்திற்காக மணியடிக்கப் பட்டது. இரண்டு பந்தியாய் அமர்ந்து எல்லாத் தொண்டர் களும் போஜனம் முடித்துக் கொள்ள மேற்கொண்டு ஒரு மணி நேரம் பிடித்திருக்கும். 11-30 மணிக்குள்ளாக எல்லோரும் தக்ளி நூற்பதும் இளைப்பாறுவதுமாயிருந் தனர்.

வெயில் ஏறஏற கால்கள் கீழே வைக்க முடியாமல் ஆகிவிட்டது. ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நிரம்பவும் அவசர அலுவல் இருந்தாலல்லாமல் எவரும் போகத் துணியவில்லை. பந்தலில் இருந்தோர் பந்தலிலும் வெளியே மரத்தடியிலிருந்தோர் மரத்தடியிலும் அப்படி யப்படியே இருந்தனர். மதுரை முதலான ஊர்களிலிருந்து உப்புச் சத்தியாக்கிரகத்தைப் பார்க்க அநேகம் பேர் வந் திருக்கிறுர்களென்று மதுரையிலிருந்து வந்திருந்த வாலிபர் கள் நாலைந்துபேர் அந்த இடத்திற்கு வந்து தகவல் சொன்னுர் கள். அவர்கள் திரும்பி வேதாரண்யத்திற்குப் போக முடியா தாகையால் வெயில் தணியுமட்டும் அங்கேயே தங்கியிருந் தனர்.

மாலை 4 மணிக்கெல்லாம் இரண்டாவது வேளை போஜனத்திற்கும் மணியடிக்கப்பட்டது. தொண்டர்கள் எழுந்துபோய் படைக்கப்பட்ட சிற்றுண்டியை வெகு சீக்கிரமாக உண்டு முடித்தனர். வேதாரண்யத்திற்குப் போய் இரவில் வேறு சாப்பிடவேண்டியிருந்தபடியால் இந்த இடத்தில் மாலை போஜனம் சிற்றுண்டியோடு முடிவடைந்திருந்தது. அரைமணி நேரத்திற்குள்ளாக எல்லோரும் பிரயாணத்திற்குத் தயாராயிருந்தனர். மாலை 5 மணிக்குப் படை வேதாரண்யத்திலிருந்து எதிர் சேவைக்காக வந்திருந்த தேசபக்தர்கள் புடைசூழ அங்கிருந்து புறப்பட்டது.

## வேதாரண்யம்

வேதாரண்யம் அந்த இடத்திலிருந்து சுமார் ஒன்றரை மைல் தான் இருக்கும். 5 மணிக்குப் புறப்பட்ட படை வேதாரண்யம் சமீபமாய் வந்த பொழுது மணி 6 தான் ஆகியிருந்தது. வழிநெடுக இரு புறங்களிலும் தாழைப்புதர்களே ஊரில் நுழையும்வரை தொடர்ச்சியாய் வந்து கொண்டிருந்தன. ஊர் எல்லையை அடைந்ததும் அண்டம் செவிடுபடும்படி 21 குண்டுகள் போடப்பட்டன.

இந்த ஊர் உருவத்தில் மிகச் சிறியதாயினும் பண்டைக் காலத்தில் சைவசமயாசாரியர்களால் பாடப்பெற்ற மகத்துவத்தால் இன்றுவரை தென்னாட்டில் சிறந்த க்ஷேத்திரமாய் யாத்திரை வாசிகள் அடிக்கடி வந்து போகக் கூடியதாயிருக்கிறது. திருமறைக்காடு என்று சமய நூல்களில் குறிப்பிட்டுள்ள ஸ்தலம் இதுவேயாகும். முன்னொரு சமயம் அடைபட்டுத் திறக்க முடியாமலிருந்த இங்குள்ள கோயில் கதவு ஞானசம்பந்தர், அப்பர் முதலியோர் பாடிய பாடலினால் படீரென்று திறக்கப்பட்டதெனத் தமிழின் பெருமையைக் காட்டி நிற்கும் கீழ்க்கண்ட பாடல் அறிவுறுத்தி நிற்கிறது:

**தொண்டர் நாதனைத் தூதிடைவிடுத்தது முதலே**
**உண்டபாலனை யழைத்ததும் எலும்பு பெண்ணுருவாக**
**கண்டதும் மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்**
**தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்**

மேலும் கடலோரமாயிருப்பதால் சேதுவைப் போன்ற பெருமையும் இது படைத்திருக்கிறது. புண்ணிய தினங்களில் ஜனங்கள் நிர்ப்பயமாய்க் கடல் நீர் ஆடுவதற்குகந்த ஆழமில்லாக் கடலும் இங்கு அமைந்திருக்கிறது. இரண்டு மைல் தூரத்திலுள்ள அகஸ்தியாம்பள்ளி மிகுதியாய்ப் படைத்த பிரதேசமாகையால் இந்த ஊர் உப்பு விளைவுக்குப் பேர்போன இடம் என்ற பெருமையும் பெற்றிருக்கிறது. இதனுல்தான் உப்புச் சத்தியாக்கிரகத்திற்காக இந்த இடமே தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறது. இந்த மணல் பிரதேசத்தில் முக்கிய விளைபொருள் புகையிலை. ஆகையால் இந்தப் பிரதேச வாசிகள் தங்கள் தொழில் பிரவிருத்திக்கு உப்பு விளைவு புகையிலைப் பயிர் செய்வது ஆகியவைகளே முக்கியமாகக் கொண்டிருக்கிறுர்கள்.

இந்த ஊரில் நடுவில் கோவிலும் அதைச் சுற்றிலும் நான்கு தெருக்களுந் தான் ஊரின் பிரதமபாகம். இவற்றின் புறம்பே சுற்றிலும் சில தெருக்கள் உள்ளன. எல்லாம் சேர்ந்து ஐயாயிரம் ஜனத்தொகைக்கு மேற்படாமல் பஞ்சாயத்துபோர்டு நிர்வாகத்தில் இது இருந்து வருகிறது. நான்கு வித வருணத்தாரும் தத்தமக்கு ஏற்பட்ட கடமைகளைச் செய்து கொண்டு இதில் வாசம் செய்து வருகிறுர்கள். அநேக வீடுகளில் புகையிலை பதனிடும் தொழில் நடைபெற்று வருகிறது. பச்சிலைகளாக அறுத்துக் கொணர்ந்த புகையிலை உபயோகிக்கும் நிலைமைக்குக் கொண்டு வருவதற்குச் சில வேலைகள் வீட்டிலேயே நடத்தப் படுகின்றன. வீடு பூராவும் இந்தப் புகையிலையே சிறு சிறு கத்தைகளாகக் கட்டி காய்வதற்காகத் தொங்கவிடப்பட்டிருந்தன.

நிற்க, ஊருக்குள் அழைத்து வரப்பட்ட தொண்டர் படை மேலத்தெருவில் நான்கு தெருக்கள் வந்து கூடுமிடத்தில் வந்து நின்றது. நடுத்தெருவிலேயே உபன்னியாசத்திற்காக மேடைப் போடப்பட்டிருந்தது. ஜனங்கள் உள்ளூர் வெளியூர் வாசிகள் நான்கு தெருக்களிலும் வெகு தூரம் வரை நீண்டு உட்கார்ந்திருந்தனர். பெண்மணிகளும் பெருந்திரளாய் ஒரு பக்கம் உட்கார்ந்திருந்தனர். அந்த ஊர் தேசபக்தர் ஸ்ரீமான் வேதரத்னம் பிள்ளை அவர்கள் இந்தக் கூட்டத்திற்கு அக்கிராசனம் வகித்திருந்தார். இவர் வயதில் இளைஞர். முப்பத்திரண்டு வயதுதான் இருக்கலாம். இதர செல்வாக்குள்ளவர்கள் பயந்தவர்களாயிருந்த அந்த ஊரில் இவர் ஒருவர் மட்டும் வீர தீரம் பொருந்திய இளஞ்சிங்கமாயிருந்தார். ஜாகை கொடுத்துதவிய புண்ணிய புருஷரும் இவரே. இந்தச் சுதந்திரப் போரில் இவர் செய்த தியாகத்திற்குப் பிரதியாக இவருக்கு சர்தார் என்னும் சிறப்புப் பட்டமும் பின்னால் வழங்கப்பட்டது.

அன்று கூட்டத்தில் ஸ்ரீமான்கள் நா. அண்ணாமலைப் பிள்ளை, சி. வி. ராஜகோபாலாச்சாரி, அ. வைத்தியநாத அய்யர், திருவையாறு சிதம்பரசுவாமிகள், சுப்பிரமணிய முதலியார் முதலியோர் இருந்தனர். தலைவர் ஆவலே வடிவாய் அமர்ந்திருந்த மஹா ஜனங்களையும், பிரமுகர்களையும் பார்த்து ஒரு மணி நேரம் வரை பேசி வந்தார். அதன் சாரம் பின்வருமாறு:

"நமது சாத்வீகப் போரில் யுத்தகளமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் இந்த ஊரில் நாம் அடி வைத்தவுடன் அண்டம் செவிடுபடும்படியாய் 21 குண்டுகளால் என்னையும் தொண்டர்களையும் வரவேற்ற உங்கள் வரவேற்புஏற்பாட்டின் பெருமைக்கு நாங்கள் என்றென்றும் கடமைப் பட்டவர்களாயிருக்கிறோம். உங்கள் பூரண ஆதரவு எங்களுக்கிருக்கிறது என்று நம்பியே உங்களுருக்கு நாங்கள் அதிதிகளாய் வந்திருக்கிறோம். அதிதிபூஜை என்பது நமது சநாதன தர்மத்

தின் அடிப்படையான அம்சம் என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். ஒரு சில பிரபுக்கள் சர்க்காருக்குப் பயந்து கொண்டு எங்களுக்கு ஜாகை கொடுக்க மறுத்துவிட்ட போதிலும் அவர்களுடைய மனதும் சர்க்கார் செயலைச் சிலாகிக்கும் என்று நம்ப இடமில்லை. ஆனால் இந்த அரிய சந்தர்ப்பத்தில் தாங்கள் அடைய வேண்டிய பெருமையை அடையாமல் தவற விட்டு விட்டார்களே என்று தான் எங்களுக்கு வருத்தமுண்டாகிறது. மஹாத்மா காந்தியடிகளால் இறுதிப்போர் என்று பெயரிடப்பட்டுள்ள இந்தச் சாத்வீக யுத்தத்தில் தத்தம் உயிர்களைக் கொடுக்கச் சித்தமாயிருக்கும் தொண்டர்கள் ஆயிரக்கணக்கில் தென்னாட்டிலுள்ள பலவூர்களிலும் தயாராயிருக்கிறார்கள். இப்பொழுது வந்திருப்பது அதில் ஒரு சிறு பகுதியே. சர்க்கார் எங்களைப் பட்டினிப் போட்டுக்கொல்ல வேண்டுமென்று மனப்பால் குடித்ததெல்லாம் வீண்பிரயத்தனமாய் முடிந்தது. இந்தப் பதினாறு நாட்களாக ஒவ்வொரு ஊரிலும் பலமான விருந்துகளே கிடைத்து வந்திருக்கின்றன. இதிலிருந்து மஹாத்மாவின் மனோசக்தி எவ்வளவு தூரம் வேலை செய்கிறது என்று நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டும். தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் ஏற்படும் சண்டையில், அதர்மம் முதலில் பிரபலமாகக் காணப்படலாம். ஆனால் கடைசியில் தர்மத்திற்கே ஜெயம் உண்டாகுமென்பது மட்டும் திண்ணம். அநீத சட்டங்களால் நமது நாட்டின் செல்வம் 150 வருஷகாலமாகச் சுரண்டப்பட்டுக் கொண்டே வருவதைக் கண்டறிந்த மஹாத்மா காந்தியடிகள் இதற்குப் பரிகாரம் தேடவேண்டுமென்றே முதலில் இந்த உப்புச்சட்டத்தை மீறுவதென்று முடிவு செய்து, தமது தொண்டர்களை அழைத்துக் கொண்டு தண்டிக்குச் சென்று உப்புச் சத்தியாக்கிரகம் நடத்திவருகிறார். அதை அனுசரித்துத் தென்னாட்டிலும் வேதாரண்ய யாத்திரை மேற்கொள்ளப்பட்டது. ஏழை, பணக்காரன் என்ற வித்தியாசமின்றி எல்லோரையும் சமமாகப் பாதிக்கும் இந்தச் சட்டத்தை மீறினால்தான் எல்லா ஜனங்களுடைய ஆதரவும் அனுதாபமும் இயக்கத்திற்கு ஏற்படுமென்று தீர்க்காலோ

சனையின் பேரில் மஹாத்மாஜி இதையே முதலில் எடுத்துக் கொண்டார். அதுபோலவே நாஷைவகுப்பாரிடமிருந்தும் இதற்குப் பூரண ஆதரவு கிடைத்து வருகிறது. ஆகையால் இதுகாறும் நீங்கள் ஆதரவளித்து வந்தது போலவே இனி மேலும் உங்கள் தனத்தாலும் தனுவாலும் மனத்தாலும் ஆதரவையளித்து வெற்றிகரமாக நடத்திக் கொண்டுபோக உறுதியும் உற்சாகமும் ஊக்கமும் எல்லாம் வல்ல சர்வேசுவரன் உங்களுக்கு அளிப்பாராக."

பிறகு அந்த ஊர் வாசிகள் தொண்டர்கள் ஊர்வலம் சுற்றிவர வேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். ஆனால் அங்கிருந்த கூட்ட மிகுதியைப் பார்த்துத் தலைவர் எல்லோரும் படையோடு வருவார்கள் என்ற காரணத்தால் முதலில் ஊர்வலம் செல்வதற்குச் சம்மதிக்கவில்லை. ஆனாலும் ஜனங்கள் ஒருவரும் படையைத் தொடர்ந்து போகக்கூடாதென்று கேட்டுக்கொண்டு எல்லோரும் சம்மதித்த பின்பு படை ஊர்வலம் புறப்பட்டு நான்கு பெரிய தெருக்களையும் சுற்றி வந்தது. வழியில் அநேக வீடுகளில் பூரண கும்பங்கள் வைக்கப்பட்டிருந்தன.

ஜாகை ஏற்படுத்தியிருந்த இடம் பொதுக்கூட்டம் கூடிய இடத்திற்குப் பக்கத்தில்தான் இருந்தது. அந்த ஊரில் வசதியான பெரிய சத்திரங்கள் இருந்தும் அதன் சுவான் தார்கள் சர்க்கார் பயமுறுத்துதலுக்குப் பயந்து இடங் கொடுக்க முடியாதென்று மறுத்திருந்தபடியால் வெளியாய்க் கிடந்த இடத்தில் கீற்றுக்கொட்டகை போட்டு ஜாகை தயாரிக்கப்பட்டிருந்தது. இந்த இடம் ஸ்ரீமான் வேதரத்தினம் பிள்ளையால் வாடகைக்கு வாங்கப்பட்டிருந்தது. ஊர்வலம் முடிந்தவுடன் தொண்டர்கள் இந்த ஜாகையிலேயே போய் இறங்கினர். ஒவ்வொரு தொண்டருக்கும் அங்கு ஒரு தாழம்பாய் கொடுக்கப்பட்டது. அதை விரித்துக் கொண்டு தொண்டர்கள் தத்தம் இருப்பிடங்களைத் தயாரித்துக் கொண்டனர். கூட்டங் கலைந்த பின் ஜனங்கள் தொண்டர்களின் ஜாகைக்கு வெளியே ரஸ்தாவில் கூட்டங் கூட்டமாய்

கின்று கொண்டிருந்தனர். ஜாகை ஏற்படுத்தியிருந்த இடத்திற்கு எதிர்வாடையில் மேலத்தெருவில் ஒரு ஜவுளிக்கடை இருந்தது. அது ஸ்ரீமான் வேதரத்தினம் பிள்ளையின் தமையனர் ஸ்ரீ சோமசுந்தரம் பிள்ளை அவர்களைச் சேர்ந்ததென்று சொல்லப்பட்டது. அந்தக் கடையை ஒட்டி நிறுத்தியிருந்த கம்பத்தில் பறக்கவிடப்பட்டிருந்த தேசீய ஜண்டா ஜயத்தைக் குறிப்பிட்டுக் கொண்டு வெகு உயரத்தில் பறந்த வண்ணமாயிருந்தது.

ஜாகை ஏற்படுத்தியிருந்த இடம் அந்த ஊர் மேலத்தெருவுக்கும் ஆயக்காரன்புலத்திலிருந்து கீழ்மேலாக வந்து போகும் ராஜபாட்டைக்கும் இடையில் வெளியாய்க்கிடந்த காலி மனையாகும். அந்த இடத்தில் இரண்டு தெருக்களின் வாட்டத்தை அனுசரித்துப் பெரிய கொட்டகை போடப்பட்டிருந்தது. ராஜபாட்டையை அனுசரித்திருந்த 60 அடி நீளமுள்ள பாகமும் மேலத்தெருவை அனுசரித்திருந்த 50 அடி நீளமுள்ள பாகத்தில் பாதியும் தொண்டர்களின் ஜாகைக்காக ஒதுக்கப்பட்டிருந்தது. மற்றப் பாதியில் மறைவுகள் போட்டுப் படையைச் சேர்ந்த காரியாலயமும், தலைவர் இருக்கையும் பிறவும் ஜோடிக்கப்பட்டிருந்தன.

கீழ் மேலாய் ராஜபாட்டையை அனுசரித்து நீண்டிருந்த இந்த இடம் சுமார் 125 அடி நீளமுள்ளதாயும், 50 அடி அகலமுள்ளதாயும் இருந்தது. அகலமுள்ள மேலைத் தெருப் பக்கத்திலேயே இதன் முகப்பு வாசலும், நீளமாயிருந்த பக்கத்தில் ராஜபாட்டையிலிருந்து போகவர ஒரு புழக்கடை வாசலும் அமைக்கப்பட்டிருந்தன. புழக்கடை வாசலுக்குச் சற்று வலதுபுறமாய், தெற்கு வடக்காகச் சுமார் 60 அடி நீளமும் 15, 20 அடி அகலமுள்ள மற்றொரு கீற்றுக்கொட்டகை சமையலுக்காகவும் தொண்டர்கள் உட்கார்ந்து சாப்பிடுவதற்காகவும் போடப்பட்டிருந்தது. இந்த கொட்டகைக்கு வலது பக்கமாய் சற்று தூரத்தில் ஒன்றுக்குப் போவதற்கு மட்டும் கீற்றுக்களால் மறைக்கப்பட்ட கக்கூஸும் தயாரிக்கப்பட்டிருந்தது. இதில் இரண்டடி அகலத்தில் நாலைந்தடி நீளத்தில்

குழி ஒன்று தோண்டப்பட்டிருந்தது. முற்றத்தில் ஒரு கிணறும் இருந்தது. இதன் தண்ணீர் அந்த நிலத்தின் தன்மையையனுசரித்து சற்று உப்பாகவே இருந்தது. இவைகள்தான் ஜாகையமைப்பின் வெவ்வேறு பாகங்களாகும்.

இரவு 8-30மணி சுமாருக்குத் தொண்டர்கள் சிற்றுண்டிக்காக அழைக்கப்பட்டு சமையல் கொட்டகைக்குச் சென்றனர். அங்கு ஒவவொரு தொண்டருக்கும் ஒவ்வொரு அலுமினியம் தட்டும் கிண்ணமும் வழங்கப்பட்டன. உப்புமாவும் பழமும் பாயசமும் படைக்கப்பட்டு வந்ததைத் தொண்டர்கள் உண்டானபின் தட்டுகளை எடுத்துக் கொண்டு சற்று தூரத்தில் ராஜபாட்டைக்குப் பக்கமாயிருந்த ஒரு சுனையில் போய் சமுவிச் சுத்தம் பண்ணிக்கொண்டு ஜாகைக்கு வந்து சேர்ந்தனர். மணி10 ஆனதும் எல்லோரும் நித்திரை செய்ய ஆரம்பித்தனர். கதவு முதலான பந்தோபஸ்துகளில்லாத இந்த இடத்தில் இரவில் பாரா காக்கவேண்டியது அவசியமாயிருந்தது. இதற்காக நான்குபேர் கொண்ட ஜதைகள் இரண்டு மணிக்கொருதரம் ஒவ்வொரு ஜதையாக இரவு முழுவதும் ஒன்று விட்டதும் மற்றென்ருகப் பாரா பார்த்து வருமாறு அன்று முதலே ஏற்பாடு செய்யப்பட்டது. முகப்புவாசலில் இருவரும் புழக்கடை வாசலில் இருவருமாக இருந்துகொண்டு ஹரிகேன் கைவிளக்குகளை வைத்துக் கொண்டு முறை உள்ளவர்கள் காவல் காத்து வர மற்றத் தொண்டர்கள் நிர்ப்பயமாய் நித்திரை செய்தனர்.

## சத்தியாக்கிரக ஆச்ரமம்

மறுநாள் அதிகாலை 4 மணிக்கு முன்னதாகவே மணி அடிக்கப்பட்டது. தொண்டர்கள் எழுந்து பாத்திரங்களையும் கரண்டிகளையும் ஏந்திக்கொண்டு ராஜபாட்டையோடு சற்று தூரம் சென்று பக்கங்களிலுள்ள வயற்காடுகளில் தேகபாதைகளைத் தீர்த்துக்கொண்டு தந்த சுத்தி செய்து திரும்பி வந்தனர். உடனே தலைவர் அந்நேரத்தில் தொண்டர்களையெல்லாம் அழைத்து சமுத்திர ஸ்நானத்திற்காக அழைத்துச்

சென்றார். நிசப்தமாகச் சென்ற படை மேலைத்தெரு, வடக்குத்தெரு, கீழத்தெரு வழியாய் மறைக்காட்டீசர் சந்நிதியில் விழுந்து நேராகக் கடற்கரைப் பக்கமாகச் சென்றது. ஊருக்கும் கடற்கரைக்கும் சுமார் அரை மைல் தூரந்தான் இருக்கும். புறப்பட்ட கால் நாழிகைக் கெல்லாம் படை கடற்கரையை அடைந்து விட்டது. அந் நேரத்திற்கு அந்த ஊர் வாசிகளும், வெளியூரிலிருந்து வந் திருந்த கனவான்களும் பெண்மணிகளும் படையோடு கூடவே ஸ்நானத்திற்காக கடற்கரைக்கு வந்திருந்தனர். படை கடற்கரை அடைந்த சமயம் பொழுது புலரும்' சமயமாக இருந்தது. தொண்டர்களும் தலைவரும் மேல் வேஷ்டிகளை இடுப்பில் இறுக்கிக் கட்டிக்கொண்டு தண்ணீரில் இறங்கினர். இந்த இடத்தில் கடல் வெகு தூரம் வரை இடுப்பளவே இருந்தபடியால் துணிவுள்ள தொண்டர்கள் அரை பர்லாங்குக்கப்பாலும் போய் விட்டனர். அலைகள் உயரமாக எழுந்து வந்த பொழுதெல்லாம் அலைகளின் வேகத்தை அனுசரித்து குதித்து மேலே எழுவாரும் அலைகள் வந்த சமயம் தண்ணீரில் முழுகி அலைகள் போன பின்பு மேலே எழுந்திருப்போருமாய் தங்களுக்குச் சௌகரியமாகத் தோன் றியபடி எல்லாம் தொண்டர்கள் ஸ்நானம் முடித்துக்கொண் டிருந்தனர். மற்ற ஜனங்களும் தொண்டர்களுடனேயே தண்ணீரிலறங்கி அவர்களும் ஸ்நானம் முடித்துக் கொண்டிருந் தனர். தலைவர் ஜாஸ்தி தூரம் போகாமல் சமீபத்திலேயே இருந்து கொண்டு ஸ்நானம் முடித்துக் கொண்டு வெகு சீக்கிரமாகக் கரைக்கு வந்து விட்டார். அவர் கரையிலிருந்து பார்த்தபொழுது சில தொண்டர்கள் வெகு தூரத்திற்கப்பால் போயிருந்ததைப் பார்த்து எங்கே அலைகளால் இழுத்துக் கொண்டு போகப்படுவார்களோ என்று சற்று பயந்தவராய் எல்லோரும் சீக்கிரமாய் கரை ஏறவேண்டுமென்றும், பிரார்த் தனைக்கு நேரமாய் விட்டதென்றும் சொல்லி நின்றார். கடைசியாகக் கரையேறும் பொழுது சில தொண்டர்கள் திருப்தியில்லாமலேயே கரையேறுவதாயிருந்தனர்.

அது சமயம் தலைவர் பிரார்த்தனைக்காக உட்கார்ந்திருந்தார். அவருக்குப் பக்கத்தில் ஸ்ரீமான்கள் சந்தானம், சி. வி. ராஜகோபாலாச்சாரியார், ந. அண்ணாமலைப்பிள்ளை, அ. வேதரத்னம் பிள்ளை முதலியோர் ஏற்கனவே வரிசையாக உட்கார்ந்திருந்தனர். ஸ்நானம் முடித்துக் கொண்டு வந்த மற்ற தொண்டர்களும் சிறுகச் சிறுகப் பிரார்த்தனை வரிசையில் வந்து உட்கார்ந்து வந்தனர். கோடு நேராகக் கீறினால் வெகு தூரம் வரை நீண்டு விடுமென்று வளைந்த கோடாக மணலில் கீறப்பட்டிருந்தது. பொது ஜனங்களும் பிரார்த்தனையில் கலந்திருந்தபடியால் ஒரு வரிசை நிறைந்து இரண்டாவது வரிசையிலும் உட்கார்ந்து கொண்டனர். அரை மணி நேரமட்டும் பிரார்த்தனை நடந்தேறியது. பிறகு படை அவ்விடம் விட்டுப் புறப்பட்டு பொது ஜனங்கள் புடை சூழ ஜாகை நோக்கிப் புறப்பட்டது. நேராகச் சந்நிதி வழியாகவே வந்து, தேரடித் தெருவாகிய கீழத் தெருவையடைந்ததும் இடதுபுறமாய்த் திரும்பி அந்த தெருவின் பாக்கிப் பாதியையும் கடந்து தெற்குத் தெரு வழியாய் மேல் நோக்கிச்சென்று பழையபடி மேலத் தெருவை அடைந்து ஜாகையை நோக்கிச் சென்றது. ஜாகையை அடைந்த சமயம் காலை மணி ஏழு. இனிமேல் ஜாகையிடத்தை சத்தியாக்கிரக ஆசிரமமென்று குறிப்பிடுவோம். ஏனென்றால் அதுவே அதற்கிடப்பட்டிருந்த பெயராகும்.

அன்று பொழுது பூராவும் உபவாசமிருக்க வேண்டுமென்று தலைவர் ஏற்படுத்தியிருந்தார். அதனால் சமையலுக்கான ஏற்பாடுகள் ஒன்றும் செய்யப்படவில்லை. பொழுது சாய்ந்து இரவு 8 மணிக்கு மேல்தான் போஜனம் கிடைக்கும் என்ற முறையில் அன்று ஏற்படுத்தப்பட்டிருந்த உபவாசம், பிரயாணத்தில் பலமான விருந்துகளுண்டு வந்திருந்த தொண்டர்களுக்குச் சற்றுப் பிரயாசையாகத் தோன்றினாலும் ஆரோக்கியத்திற்கு மிகவும் அனுகூலமாக இருந்தது. மறுநாள் முதல் தொடர்ச்சியாக நடத்தப் போகும் உப்புசத்தியாக்கிரகப் போராட்டம் கடவுளனுக்



வேதாரண்யம் மேலவீதியில் அமைந்திருந்த உப்புச்சத்தியாக்கிரக முகாம்

கிரகத்தால் ஜயத்துடன் முடிய வேண்டுமென்று பிரார்த்திப் பதற்காகவும் அன்று இரண்டு வேளை உண்டியைத் தியாகம் செய்தால் பிரார்த்தனை உறுதிப்படுமென்பதும் அன்றைய உபவாசத்தின் முக்கிய கருத்தாகும். ஏறக்குறைய எல்லாத் தொண்டர்களும் உபவாசத்தை நன்ருய் அனுஷ்டித்தனர். வீட்டில் தாய், தகப்பன்மார் திதி தினங்களிலும் தம்மால் தாங்க முடியாதென்று ஏதாவது ஆகாரம் பண்ணிக் கொண்டே சிராத்த ஜோலிகளைக் கவனிப்பவர்களும் கூட அன்று உபவாசத்தை திருப்திகரமாய் அனுஷ்டித்தது மிக வும் போற்றத்தக்கதாயிருந்தது. வயதில் குழந்தைகளாகக் காணப்பட்ட ஒரு சில தொண்டர்கள் தெரிந்தும் தெரியாம லும் வெளியே சென்று லேசாகச் சிற்றுண்டி பார்த்துக் கொள்வதாகக் காணப்பட்டாலும் பெரும்பாலோர் அன்றைய உபவாசம் வெகு வைராக்கியத்துடனிருந்து அனுஷ்டித்தனர்.

சாப்பாட்டு ஜோலி நீங்கலாக மற்ற அலுவல்களெல் லாம் அன்று அட்டவணைக் கிரமப்படி ஒழுங்காகவே நடை பெற்று வந்தன. பிற்பகல் 2 மணி சுமாருக்குத் தலைவர் தொண்டர்கள் குழுவில் வந்து உட்கார்ந்து கொண்டார். அவர் கையில் ஒரு தந்தியும் ஒரு கடிதமும் இருந்தன. அப்பொழுதுதான் மௌனகாலம் முடிவடைந்திருந்தது. தலைவர் தந்தியை எடுத்து வாசித்தார். அதில் கண்டிருந்த விஷயமாவது "ராமகிருஷ்ணனுடைய தாயார் அபாய நிலையிலிருக்கிருள். உடனே ராமகிருஷ்ணனை அனுப்பி வைக்கவேண்டியது" என்பதே.

ராமகிருஷ்ணன் என்பவன் மதுரையிலிருந்து முதற் படையில் வந்து சேர்ந்த 10 சௌராஷ்டிர தொண்டர்களில் ஒருவன். இவன் படையில் வந்து சேரும் பொழுதே தகப்பனர் அனுமதியின்றி வந்து சேர்ந்திருந்தான். இந்த விஷயங்களில் அனுமதி கிடைக்கக்கூடியது சகஜமாய் நிகழக் கூடிய விஷயமல்ல. ஆனல் வீட்டில் வேலைக்கு உதவிக் கொண்டிருந்த மகன் திடீரென்று படையில் போய்ச் சேர்ந்து விட்டானே என்ற ஏக்கம் தகப்பனருக்கு மனதைப்

பாதித்துக் கொண்டிருந்தது. பையனுக்கே அநேக காகிதங்கள் போட்டு நயமாக வீட்டுக்கு வரும்படி எழுதியிருந்தார். பையன் ஒன்றுக்கும் மசியவில்லை. கடைசியாகத் தலைவருக்குத் தந்தியடித்தால் அவசியம் அவர் அனுப்பிவிடுவார் என்று நம்பி தலைவருக்கே தந்தியடித்திருந்தார். தந்தியில் கண்டிருந்த 'தாயார் அபாய நிலைமையில் இருக்கிறாள்' என்ற விஷயமும் பூராவும் பொய்யான விஷயமல்ல. வாஸ்தவமாகவே ராமகிருஷ்ணன் தாயார் வெகு நாளாய், சுமார் 6, 7 வருஷங்களாய் பக்ஷவாத நோயால் பீடிக்கப்பட்டு வருந்திக்கொண்டிருந்தாள். இந்த நிலைமையில் மகன் வேதாரண்யத்திற்குப் போய்விட்டான் என்ற விஷயம் ஏற்கனவே வியாதியால் சஞ்சலப் பட்டுக்கொண்டிருந்த அவளுடைய மனதுக்கு மேற்கொண்டு சஞ்சலமும் கவலையும் உண்டாக்கியிருக்கு மென்பதும் அதன் காரணமாக தேக வியாதியும் ஜாஸ்தியாகியிருக்கும் என்பதும் நம்பக்கூடிய விஷயந்தான். இந்தத் தந்தியை எடுத்துத் தலைவர் ராமகிருஷ்ணன் என்ற தொண்டருக்கு வாசித்துக் காட்டி வீட்டிற்குப் போகிறாயா என்று கேட்டார். அதற்கு ராமகிருஷ்ணன் தன் தாயார் வியாதியாயிருப்பது புது சங்கதியல்லவென்றும் தகப்பனார் தன்னை வரவழைப்பதற்காகவே அந்த யுக்தி பண்ணியிருக்கிறார் என்றும் தான் போகத் தயாராய் இல்லை என்றும் உறுதியாக கூறிவிட்டான். தலைவர் சிறுவனுடைய மனவுறுதியைக் கண்டு மனதிற்குள்ளாகச் சிலாகித்துக் கொண்டவராய் அவன் விருப்பப்படி இருப்பதில் திருப்தியடைந்து விட்டார்.

அடுத்தாற்போல் கையிலிருந்த கடிதத்தையும் எடுத்துப் படித்தார். அதில் எழுதியிருந்ததாவது "என் மகன் முதற் படையில் வந்து சேர்ந்ததற்கு நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்..." என்பது முதலான விஷயங்களே. இந்தக் கடிதம் அடையாற்றிலிருந்து தொண்டர் படையில் வந்து சேர்ந்து பிரயாணத்தில் ஸ்டோர் கீப்பர் உத்தியோகம் பார்த்து வந்த சீனிவாசய்யர் விஷயமாகத் தலைவருக்கு எழுதப்பட்டிருந்தது. முதலில் வாசித்த தந்திக்கும்

இரண்டாவது வாசித்த கடிதத்திற்கும் உள்ள தாரதம்மி யதத்தைத் தலைவர் தொண்டர்களுக்கு எடுத்துக்காட்டினர். இரண்டு தந்தையரில் ஒருவருக்குத் தன் மகன் படையில் சேர்ந்த விஷயத்தில் விசனமும் மற்றவருக்கு மகிழ்ச்சியும் உண்டாவதற்கும் அவரவர் பரிபக்குவமே காரணமாகும் என்ருர்.

அதன் பிறகு தலைவர் பொதுவாக எல்லோரையும் பார்த்து வீட்டிற்குப் போக விருப்பமுள்ளவர்கள் தெரிவிக் கலாம் அன்று கேட்டார். எவரும் முன்வரவில்லை. வேதாரண்யம் வரை வந்துவிட்டு வெறுங்கையோடு வீட்டிற்குப் போவது யார் செய்யக்கூடிய வேலை என்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு எல்லோரும் ஏகோபித்து ஒருவரும் போகத் தயாராயில்லையென்று தெரிவித்தார்கள். இதே கேள்வியைத் தலைவர் ஒரு தடவை உப்பு அள்ளியான பிற்பாடு கேட்டிருந்தால், சிலர் தாங்கள் வந்ததற்கு உப்பை அள்ளி விட்டோம்: இனி ஊருக்குத்தான் போவோமே என்று நினைத்துமிருப்பார்கள். பின்னர் தலைவர் மறுநாள் உப்பு அள்ளச் செல்வதற்காகத் தம்முடன் அழைத்துக்கொண்டு போகக் கூடிய தொண்டர்களைத் தேர்ந்தெடுப்பதை அடுத்த வேலையாகக் கவனித்தார். அடி உதைகளுக்கெல்லாம் சளைக்காத கட்டு மஸ்தான சரீரம் படைத்த தொண்டர்களாகப் பார்த்து 10 பேர் தேர்ந் தெடுக்கப்பட்டனர். அதன் பின்பு தலைவர் தாம் கைது செய்யப்பட்டால் தமக்கு பின்னுல் தலைவராகவரப்போகிறவர் சொற்படி தவருமல் ஒவ்வொருவரும் நடந்து கொள்ள வேண்டு மென்ற முதலான முக்கிய விஷயங்களைப்பற்றிப் பேசியான பின் தமது இருக்கைக்குச் சென்ருர். தொண்டர்களும் எழுந்து தத்தம் ஜோலிகளைக் கவனித்திருந்தனர்.

முன்பின் உபவாசமிருந்தறியாத தொண்டர்களுக்கு என்றுமில்லாத படி அன்றைப் பொழுது நீண்டு கொண் டிருப்பது போல் தோன்றிக் கொண்டிருந்தது.

**மானம் குணம் கல்வி வண்மை அறிவுடமை**
**தானம் தவமுயற்சி தாளாண்மை—தேனின்**
**கசிவந்த சொல்லியர் மேல்காமுறுதல் பத்தும்**
**பசி வந்திடப் பறந்து போம்.**

ஆகையால் தொண்டர்கள் கையிலிருந்த தக்ளியும் பஞ்சும் பையில் போய் ஒளிந்து கொண்டன. புஸ்தகங்க ளெல்லாம் தேடுவாரற்று மூலையிற் பதுங்கிக் கிடந்தன. ஒருவருக்கொருவர் உரக்கப் பேசுவதும் ஓய்வடைந்திருந்தது. கைகாலெல்லாம் அசந்து போயிருந்தன. கண்கள் பஞ்சடைந்து போயின. வேலை மேலிருப்பவர்களைக் காட்டிலும் வேலையில்லாமல் சும்மா உட்கார்ந்திருந்தவர் களுக்கே பசி உபத்திரவம் பரம சங்கடத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தது.

ஆபீஸ் அறையிலிருந்த காரிய நிர்வாகிகள் ஓய்வென்பதே யில்லாமல் பசியோடு கடிதங்கள் டைப் அடிப்பதும், எழுதின கடிதங்களை மடித்து உறையில் போட்டு மேல் விலாச மெழுதி தபால் இலாகாவை ஒப்புக் கொண்டிருந்த தாணுவய்யரிடம் கொடுத்து தபால் பெட்டியில் கொண்டுபோய் போடச் செய்வது மாயிருந்தனர். படை வேதாரண்யத்திற்குச் சுகமாய் வந்து சேர்ந்ததென்ற விஷயமாய் அன்றுதான் எல்லா இடங்களுக்கும் தாக்கல் அனுப்பப்படுவதாயிருந்தது. மறுநாள் உப்புச் சட்டத்தை மீறப்போவதாகவும் போலீசுக்குத் தகவல் கொடுக்கப்பட்டது. சமையல் வேலைக்காக நியமிக்கப்பட்டிருந்த தொண்டர்கள் தங்கள் பொறுப்பில் விடப்பட்ட வேலையைப் பசி உபத்திரவத்தைப் பொறுத்துக் கொண்டு பார்த்துக்கொண்டிருந்தனர்.

மணி ஆறு ஆயிற்று. வேனிற்காலமாதலால் பகலில் அரைமணி நேரம் கூடுதலாயிருந்தது. ஆகையால் இருள் கவிய ஏறக்குறைய ஏழு மணி சமயமாகி விட்டது. அந்தச் சமயத்தில் பிரார்த்தனைக்காக மணியடிக்கப் பட்டது. தொண்டர்கள் எல்லோரும் வரிசையாய் வந்து உட்கார்ந் தனர். தலைவரும் வந்து முதல் வரிசையில் உட்கார்ந்து

கொண்டார். ஸ்ரீ சுப்பையா வழக்கம் போல் பிரார்த்தனை ஆரம்பித்து 'ரகுபதிராகவ ராஜாராம்' முதல் 'ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற' என்ற பாடல் ஈறாக வழக்கமாய்ப் பாடிவந்த பாடல்களை யெல்லாம் வரிசையாகப் பாடிவர தொண்டர்கள் அவரைப் பின்பற்றி ஒரே குரலாய்ப் பாடி வந்தனர். 20 நிமிஷத்திற்குள்ளாகப் பிரார்த்தனை முடிவடைந்து விட்டது. அதன் பிறகு 8 மணிக்குத் தொண்டர்கள் போஜனம் முடித்துக் கொண்டனர். சற்று நேரம் அப்படியே பேசிக்கொண்டிருந்து 10 மணி சுமாருக்கு நித்திரை போயினர். தலைவரோடு மறுநாள் உப்பு அள்ளச் செல்வதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த தொண்டர்கள் மட்டும் தனியிடத்தில் படுத்துக் கொள்ளுமாறு உத்தரவு இடப்பட்டனர். வழக்கம்போல் நான்குபேர் கொண்ட ஜதைகள் ஒன்றுவிட்டு ஒன்று இரவு முழுவதும் பாரா பார்த்திருந்தனர்.

## ராஜாஜி சத்தியாக்கிரகம்

நள்ளிரவு 3 மணிக்கெல்லாம் தலைவர் எழுந்து விட்டார். தம்மோடு வரும் தொண்டர்களை மட்டும் ஓசையில்லாமல் எழுப்பும்படி செய்தார். அவர்கள் எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டதும், லேசாகச் சிற்றுண்டி செய்து கொள்ளும்படி சொல்லப்பட்டனர். பத்து நிமிஷ நேரத்தில் சிற்றுண்டி முடிந்ததும் தொண்டர்களை அழைத்துக் கொண்டு அகஸ்தியம்பள்ளிப் பக்கமாகப் புறப்பட்டார்.

ஆசிரமத்தில் வழக்கம்போல் 4மணிக்கெல்லாம் மற்ற தொண்டர்கள் எழுப்பிவிடப் பட்டனர். உடனே வெளியிடங்களுக்குப் போய் தேகபாதைகளைத் தீர்த்துக்கொண்டு தந்த சுத்தி செய்து கொண்டவர்களாய் அரைமணி நேரத்திற்குள்ளாகவே எல்லாரும் திரும்பி வந்தனர். பிரார்த்தனைக்காக வரிசையில் வந்து உட்கார்ந்தனர். தலைவரும் அங்கு வந்து உட்கார்ந்து பிரார்த்தனை முடித்துக்கொண்டு அதன்

பின்பே சத்தியாக்கிரகஞ் செய்யப் புறப்படுவார் என்று எண்ணியிருந்தனர். அவர் அதற்கு முன்பே எழுந்துபோய் விட்ட விஷயம் அந்தச் சமயத்தில் விழித்திருந்த ஒரு சிலர் தவிர மற்ற பெரும்பாலோரான தொண்டர்களுக்குத் தெரியாமலே இருந்தது. தலைவர் வராமலேயே பிரார்த்தனை ஆரம்பிக்கப்படவும் தொண்டர்களுக்குச் சந்தேகம் தோன்றியது. ஆனாலும் பிரார்த்தனையின் போது ஒன்றும் பேச முடியாதாகையால் பிரார்த்தனையிலேயே கவனம் செலுத்தியிருந்து அது முடிந்தபின்பு ஒருவர்க்கொருவர் தலைவர் எங்கே என்று விசாரிக்கத் தலைப்பட்டனர். அது சமயம் 5மணிக்கு மேலாகியிருந்தது. இந்நேரம் உப்பளத்தில் போய் உப்பு அள்ளிக்கொண்டிருப்பார்கள் என்று சொல்லப் பட்ட பதிலைக்கேட்டு ஒவ்வொரு தொண்டரும் ஆச்சரியமே வடிவாய் அங்கலாய்த்தனர்.

பொழுது புலர்ந்தபின்பு சிற்றுண்டிக்குப்பின் ஆசிரமத்தில் ஒவ்வொரு நிமிஷமும் உப்பள்ளச்சென்ற தொண்டர்களின் வருகையையே எதிர்பார்க்கப்பட்டுக்கொண்டிருந்தது. அன்று புதன்கிழமை உதயமாயிருந்தது. அன்று முதல் பிரதி தினமும் தொண்டர்கள் அதிகாலையில் சிறு கோஷ்டிகளாகப் பிரிக்கப்பட்டு வெவ்வேறு திக்குகளில் பிரசாரத்திற்கு அனுப்பப்படலாயினர்.

முந்தியநாள் போலீசுக்குத் தாக்கல் எழுதியனுப்பிய கடிதத்தில் அன்று உப்பள்ளப் போவதாக மட்டும் எழுதப்பட்டிருந்ததேயன்றி இடம் குறிப்பிட்டு எழுதப்படவில்லை. ஆகையால் போலீசாருக்கும் எந்த இடத்திற்குப் போவது என்ற விஷயமாய் பெரிய சந்தேகம் ஏற்பட்டிருந்தது.

காலை 7மணிக்கு உப்பள்ளச் சென்ற தொண்டர்கள் அகஸ்தியம்பள்ளி பக்கத்திலிருந்து ஆசிரமத்தை நோக்கி வந்துகொண்டிருந்தனர். அவர்கள் கையில் உப்பு கொண்டு வந்திருந்தனர். உடம்பெல்லாம் சேரும் சகதியுமாயிருந்தன. இதுதான் உப்பளத்திலிருந்து உப்பெடுத்ததற்கு அடையா

ளம். ஆசிரமத்தை நெருங்கவும் அவர்கள் தலைவர் கைது செய்யப்பட்டார் என்று தெரிவித்துக் கொண்டே வந்தனர். அவர்கள் சொல்லுவதற்கு முன்பே தலைவர் அவர்களோடு வராததிலிருந்து கைது செய்யப்பட்டிருக்க வேண்டுமென்றே எல்லோரும் ஊகித்துக் கொண்டிருந்த விஷயம் அவர்கள் வாய்ப்பட வெளிப்பட்டதன் பேரில் ஊர்ஜிதமாயிற்று. தலைவர் தாம் கைது செய்யப்பட்டால் தம்முடைய ஸ்தானத்தில் ஸ்ரீ சந்தானம் அடுத்தபடியாய் தலைவராய் இருந்துவர வேண்டுமென்று ஏற்கனவே எழுதி வைத்து விட்டுப் போயிருந்தபடியால் அந்த நிமிஷம்முதல் அன்னவர் தலைவர் பதவியை ஏற்றுக்கொண்டார்.

அன்று உப்பள்ளச் சென்ற தொண்டர்கள் தலைவரோடு இருட்டில் போனபோது உள்ளூர்வாசி ஸ்ரீராஜகோபாலய்யர் அந்த இருட்டில் அவர்களுக்கு வழி காட்டி அழைத்துக் கொண்டு போயிருந்தார். அகஸ்தியம்பள்ளியைச் சேர்ந்த உப்பளத்திற்கே அவர்கள்போய் இருட்டோடேயே உப்பள்ளி வைத்துக்கொண்டு சற்று தாமதித்திருந்தனர். அதற்குள் பொழுது புலர்ந்திருந்தது. அந்தச் சமயத்தில் போலீசார் அந்த ஸ்தலத்திற்கு வந்து சேர்ந்தனர். உடனே தலைவர் மட்டும் கைது செய்யப்பட்டார். மற்ற தொண்டர்கள் விடப்பட்டதும் அங்கிருந்து புறப்பட்டு ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தனர். அந்த நிமிஷத்திலேயே மஹாத்மாஜீக்கும் மற்றுமுள்ள காங்கிரஸ் ஸ்தாபனங்களுக்கும் தலைவர் கைதியான விவரத்திற்குத் தந்தி பேசப்பட்டன,

(அன்றுதான் முதன்முதல் உப்புச் சத்தியாக்கிரகம் பண்ணி உப்பு அள்ளி வந்திருந்தபடியால் அந்த உப்பு புதையல் எடுத்த தனம் போன்ற பெருமை அடைந்திருந்தது. தொண்டர்களெல்லோரும் ஆளுக்கொவ்வொரு உப்புக்கல் எடுத்து வாயில் போட்டுக்கொண்டு வரி செலுத்தி வாங்கும் உப்புப்போல் இருக்கிறதா அல்லது வித்தியாசமாயிருக்கிறதா என்று பரீக்ஷை பார்த்தவராயிருந்தனர்.) உப்பு ஈரத்தோடிருந்தபடியால் உலர்த்துவதற்காக வெயிலில்

கொண்டு போய் வைக்கப்பட்டது. பிறகு தொண்டர்கள் ஸ்நானத்திற்காகப் புறப்பட்டனர். ஆசிரமத்திலிருந்து ஒரு பர்லாங்குத் தூரத்தில் வடபாரிசத்தில் ஊருக்கு வெளியே வேதநதி என்ற குளமிருக்கிறது. தொண்டர்களில் பெரும் பாலோர் இந்தக் குளத்திற்கே போய் ஸ்நானம் முடித்துக் கொண்டனர். இதுவே ஸ்நானத்திற்கு மிகவும் சௌகரிய மாயிருந்தபடியால் பிரதி தினமும் இங்குதான் தொண்டர் கள் ஸ்நானத்திற்காகப் போய்க் கொண்டிருந்தனர்.

அன்று காலை 10-30 மணிக்கு எல்லாம் காலை போஜனத் திற்கு மணியடிக்கப்பட்டது. தொண்டர்கள் தட்டுகளை ஏந்திக் கொண்டு போஜன சாலைக்குப்போயினர். நடுத்தர மான போஜனமாகவே தயாரிக்கப்பட்டிருந்தது. அன்னம் பரிமாறி நெய் போடப்பட்டதும் வழக்கம்போல் சிறிது பிரார்த்தனை நடந்தேறியது. இரண்டு கறிவகை, ஒரு சாம்பார், மோர், இவைகளே விருந்தின் முக்கிய அம்சங் களாக இருந்தன. சாப்பிட்ட இடத்தை சுத்தம் பண்ணு வதற்காக ஏற்பட்டிருந்த தொண்டர்கள் பெறுக்குமாறுகளை எடுத்துக்கொண்டு சாப்பிட்ட இடத்தைச் சுத்தம் பண்ணி யான பின்பு இரண்டாவது பந்தி உட்கார்ந்து மேற்கொண்டு கால் மணி நேரத்திற்குள்ளாக அதுவும் முடிவடைந்து விட்டது. பரிமாறிக் கொண்டிருந்த தொண்டர்களும் இரண்டாவது பந்தியிலேயே அமர்ந்து தங்கள் சாப்பாட்டு ஜோலிகளை முடித்துக் கொண்டனர். சாப்பிட்டு முடிந்த தொண்டர்கள் ஜாகையில் வந்து தட்டுகளையும் பாத்திரங் களையும் தலைமாட்டில் வைத்துவிட்டு இளைப்பாறுவாரும் தக்ளியில் நூல் நூற்பாரும் புஸ்தகங்களைப் படிப்பாருமா யிருந்தனர். ஒரு தொண்டர் பகவத்கீதை பாராயணம் பண்ணுவதும் ஒரு தொண்டர் வால்மீகி ராமாயணம் படிப் பதும் ஒரு தொண்டர் திருக்குறள் வாசிப்பதும் ஒரு தொண்டர் ஆங்கிலப் புஸ்தகத்தைப் புரட்டுவதுமாய்க் காலத்தை உபயோகமாய்க் கழித்துக்கொண்டிருந்தனர். தினமொன்றுக்கு 50 கஜ நூல் செலுத்தி வரவேண்டுமென்ற நிபந்தனை வந்து சேர்ந்ததன் பின்னிட்டுக் கண்டிப்பாக்கப்

பட்டபடியால் ஒவ்வொரு தொண்டரும் காலையிலோ மாலை யிலோ தன்னுடைய சந்தா நூல் நூற்றுகும் வரை நூற்பதா யிருந்தனர். சிலர் 50 கஜத்திற்கு 100 கஜம் 150 கஜம் கொடுத்துவர ஆரம்பித்ததில் பஞ்சு கொடுத்து நூல் வாங்கிக்கொள்ளும் பொறுப்பை ஏற்று வந்த ஸ்ரீமான் கிருஷ்ணமூர்த்தி ஐயருக்கு ஒரே நாளில் ஒரே தொண்டருக்கு இரண்டு மூன்று தடவை நூல் வாங்கிக் கொண்டு பஞ்சு கொடுக்க வேண்டியதாய் ஏற்படவே அவருடைய வேலை வளர ஆரம்பித்தது. ஒவ்வொரு தொண் டருக்கும் தக்ளி செய்து கொடுக்கும் பெரிய பொறுப்பை அவர் ஏற்கனவே வகித்து வந்ததனுல் இரண்டு வேலை சேர்ந்து அவருடைய வேலை இரட்டிப்பாகி விட்டது. போதாக் குறைக்குத் தொண்டர்கள் தக்ளியைப் போக்கடித்தோ, ஒடித்துவிட்டோ மீண்டும் மீண்டும் அவரிடம் புதுத் தக்ளிக்குத் தேவையுண்டாக்கிக் கொண்டிருந்தபடியால் அவர் உட்கார்ந்திருந்த இடம் பூராவும் சிறு தொழிற்சாலை போல் மூங்கில் சீவுவதும் தக்ளி செய்யப்படுவதுமாகவே இருந்தது. மூங்கில் பட்டையைப் பிளந்து லேசான குச்சி உருவத்திற்குச் சீவி அடிப் பாகம் சற்று தடிப்பாகவும் மேல்பாகம் லேசாகவும் செய்து காலணுத் தாமிர நாண யத்தை நடுவில் தொளைபோட்டு அதைக் குச்சியின் அடிப் பாகத்தில் கனத்திற்காக மாட்டி அவர் தக்ளிகள் செய்து கொண்டிருந்தார். சில தக்ளிகளுக்கு அடி கனத்திற்காக மாக்கல் துண்டுகளை உருண்டையாகத் தேய்த்து நடுவில் துவாரம் போட்டு மாட்டிக்கொண்டுமிருந்தார். இவை காலணுவைக் காட்டிலும் ஜாஸ்தி கனமாயிருந்தபடியால் பலப்பத்தால் செய்த தக்ளிகளே நன்ருய்ச் சுற்றுவதாயும், நூற்பதாயுமிருந்தபடியால் இதற்கே கிராக்கி ஜாஸ்தி ஏற்பட ஆரம்பித்துவிட்டது. விலை மதிப்பை எடுத்துக் கொண்டால் காலணு மாட்டிய தக்ளிகளின் குறைந்த விலை கூலியைத்தள்ளிக் கணக்கிட்டாலும் காலணு பெறுமென்று ஸ்பஷ்டமாய்ச் சொல்லக் கூடியதாயிருந்தது. ஆனுல் மாக் கல் தக்ளிக்கோ செய்யக் கூடிய சிரமம் தவிர வேறு விலை

பெறக் கூடிய வஸ்து ஒன்றுமில்லை. அப்படியிருந்தும் இந்தத் தக்ளிக்கே பிரியம் அதிகமாக இருந்தது. பத்து பேருக்கு ஒன்று வீதம் கொடுக்கவும் அவருக்குச் சாத்தியப் படவில்லை. காரணம் என்னவென்றால் காலணா நாணயங் கள் வேண்டிய மட்டும் இருப்பில் வைத்துக் கொள்ள முடியும். மாக்கல்லோ எங்கேனும் உடைந்த துண்டுகள் கிடைத்ததைக் கொண்டு ஒப்பேற்றிக்கொள்ள வேண்டியதா யிருந்தது. எல்லாம் கூடி அவருக்கு நிரம்பவும் சிரமமாய்த் தானிருந்து வந்தது. ஆனால் அவருடைய பொறுமை இவற்றையெல்லாம் சிரமமாய்ப் பாராட்டவில்லை.

ஹிந்தி உபாத்தியாயர் செம்மங்குடியில் ஜுரமாய்ப் படுத்தவர் வேதாரண்யத்திற்கே வந்து சேர்ந்திருந்தார். ஆகையால் ஹிந்தி வகுப்புகளும் அன்று நடந்தேறின. மௌன விரதமும் பத்திரிகை விஷயமும் வழக்கம் போல் நடந்தேறின. தலைவர் கைது செய்யப்பட்ட விஷயமாய் விவரம் கேட்டுத் தெரிந்து கொள்வதற்காக வெளி ஜனங்கள் ஆசிரமத்திற்கு வருவதும் போவதுமாயிருந்தனர். ஆசிரமத் திற்கு வெளியே ரகசியப் போலீஸ் இலாகாவைச் சேர்ந்த புண்ணிய மூர்த்திகள் தாங்கள் இன்னார் என்று தெரிந்து கொள்ள முடியாதபடி சாமானிய உடைகளைத் தரித்துக் கொண்டு வீட்டுத் திண்ணைகளில் உட்கார்ந்து கொண்டு ஆசிரமத்திற்கு யார் யார் வருகிறார்கள், போகிறார்கள் என்று கவனித்தவர்களாயிருந்தனர்.

## ராஜாஜிக்குத் தண்டனை

பகல் ஒரு மணிக்குக் கைது செய்யப்பட்ட தலைவர் அகஸ்தியம்பள்ளி சப்-மாஜிஸ்திரேட்டினால் விசாரணை செய்யப்பட்டு 6 மாத வெறுங்காவல் தண்டனை விதிக்கப் பட்டார். 'ஏ' வகுப்பாக நடத்தப்படுமாறு சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறார் என்ற விஷயத்தை விசாரணை நேரத் தில் கோர்ட்டுக்குப் போயிருந்த ஸ்ரீ சந்தானம் முதலியோர் வந்து தொண்டர்களுக்குத் தெரிவித்து மாலை 4 மணி சுமா

ருக்கு எல்லோரும் ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போய் அகஸ்தியம்பள்ளியிலிருந்து அன்று மாலை அழைத்து வரப் படும் தலைவருக்கு வழிசொல்லி அனுப்பவேண்டுமென்று சொன்னார்கள்.

மணி 4 அடித்ததும் தொண்டர்கள் எல்லோரும் ரெயில்வே ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப்படுவதற்காக அணிவகுக்கப்பட்டனர். ஆசிரமத்திற்கு வெளியே மேலத் தெருவில் வரிசையாய் நான்கு பேர் கொண்ட பத்தியாய் அணிவகுத்துக்கொண்டு மேலத்தெருவைத் தாண்டி வடக்கு வீதி வழியாய் தொண்டர்படை தேசீய கீதம் பாடிக் கொண்டு நடந்து போயிற்று. வெளியூர்களிலிருந்து உப்புச்சத்தியாக்கிரகம் பார்க்க வந்திருந்த ஜனங்களெல் லாம் படையுடனேயே தங்கள் சொந்த ஊருக்குப் போவ தற்காகப் பிரயாணப்பட்டு ரெயில்வே ஸ்டேஷனுக்கு வந்து கொண்டிருந்தனர். வடக்குத் தெருக்கோடியில் இடது பாரிசத்தில் இந்த ஊரைச் சேர்ந்த சப்-ஜெயில் இருக்கிறது. போலீஸ் ஜவான்கள் அங்கு பாராக் கொடுத்துக்கொண்டு நின்றனர். மாஜிஸ்திரேட், சப்-ரிஜிஸ்திரார் கச்சேரிகளும் இந்தக் கட்டிடத்தின் இடது பாரிசத்திலுள்ள ஒரு பாகத் தில் நடைபெற்றுக் கொண்டிருந்தன, சப்-ஜெயிலைத் தாண்டி யதும் படை சப்ஜெயில் மைதானத்து வழியாகவே இடது புறமாய்ச் செல்ல ஆரம்பித்தது. சப்-ஜெயிலுக்கும் ரயில்வே ஸ்டேஷனுக்கும் சுமார் ஒரு பர்லாங்கு தூரமிருக் கும். நேராக நடந்து போய் ரயில்வேஸ்டேஷனை அடைந்த தும் யாதொரு தடையுமின்றி பிளாட்பாரத்திற்கே விடப்பட் பட்டனர். அது சமயம் பந்தோபஸ்துக்காக வந்திருந்த போலீஸ் படை உருவிய கத்தி துப்பாக்கிகளுடனும் பாணத்தடிகளுடனும் தண்டவாளத்தின் இரு பக்கங்களி லும் நின்று கொண்டிருந்தனர். தலைவர் ஒருவேளை தொண்டர்களால் விடுவித்து அழைத்துப் போகப்படுவார் என்பதற்காகவோ அல்லது பொது ஜனங்கள் கோபத்தினால் கைது செய்து கொண்டு போகும் உத்தியோகஸ்தர்களை

அடித்து விடுவார்களென்ற பயத்தினாலோ எந்தக் காரணத் தினாலோ அன்று அவசியமில்லாத அத்தனை போலீஸ்காரர் கள் பாரா நிறுத்தப்பட்டிருந்தனர். ஆனால் தொண்டர்கள் போனதும் அவர்களுடைய வேலையைச் சுலபமாக்கி விட்ட னர். தண்டவாளத்தின் இரு பக்கங்களிலும் தொண்டர் கள் போய் நின்று பொது ஜனங்கள் மோதிக்கொண்டு தண்டவாளத்தருகில் நெருங்காமல் எட்டவே நிற்கும்படி பிளாட்பாரம் இருந்த நீளத்திற்கு ஒருவருக்கொருவர் கைகோத்துக்கொண்டு தண்டவாளத்திற்கு இரண்டடி தள்ளி நின்றுகொண்டனர்.

சரியாக 5 மணிக்கு வண்டி பிளாட்பாரத்தில் வந்து நின்றது. தலைவர் தாம் வழக்கமாய் அணிந்துவந்த வர்ணக் கண்ணாடி போட்ட மூக்குக் கண்ணாடி அணிந்துகொண்டு முதல் வகுப்பு வண்டியிலிருந்து மெதுவாகத் தலையை வெளியே நீட்டினார். உடனே பிளாட்பாரத்தில் நின்ற தொண்டர் களும் பொதுஜனங்களும் கலந்த கும்பலிலிருந்து ஒரேகுரலாய் 'மகாத்மா காந்திக்கு ஜே, ராஜகோபாலாச்சாரியாருக்கு ஜே' என்ற கோஷங்கள் அண்டம் செவிடுபடும்படி கிளம்பின. தலைவர் இருகைகளையும் குவித்த வண்ணமாய் வண்டி வாசலிலேயே நின்று கொண்டிருந்தார். எல்லா ஜனங்களும் பதில் நமஸ்காரம் செய்து நின்றனர். தலைவர் அருகிலேயே இன்ஸ்பெக்டர் நின்றுகொண்டு அவர் எங்கே வண்டியை விட்டுக் கீழே குதித்துத் தொண்டர்களோடு கலந்து தப்பித்துக் கொண்டு போய்விடுவாரோவென்று அஞ்சினவ ராய் கடுகடுத்த முகத்தோடு தாம் வெகு கண்டிப்புள்ளவ ரென்று ஜனங்களுக்குக் காண்பித்துக் கொண்டிருந்தார். தலைவரைக் கண்டு அவர் பிரிந்து போவதற்குள்ளாக நெருங்கி ஒரு வார்த்தையேனும் பேசிவிட வேண்டுமென்று ஒவ்வொரு வரும் தள்ளிக்கொண்டு முன்னால் வரமுயற்சி செய்து கொண் டிருந்தனர். தொண்டர்களுடைய பந்தோபஸ்தும் போலீஸா ருடைய பந்தோபஸ்தும் இருந்த இடம் தெரியாமல் அவர்களும் கும்பலோடு கும்பலாய் கலந்து விட்டனர். அந்தச் சமயத்தில் அங்கு கூட்டம் சற்று குழப்பமான நிலை

யிலேயே இருந்தது. தலைவர் மெதுவாகக் கையமர்த்திப் பேசுவதற்காக வாயெடுத்தார். ஆனால் கூட்டம் ஒருவரை யொருவர் தள்ளிக் கொள்வதில் கூச்சல் மிகுந்துவிட்டது. வண்டி அந்த இடத்தில் ஐந்து நிமிஷம் வரை நிற்பது தான் வழக்கமென்றாலும், கூட்டம் வண்டியைச் சூழ்ந்து கொண் டிருந்தபடியால் இஞ்சின் ஓட்டியால் வண்டி செலுத்த முடியாது மேற்கொண்டு சற்று நேரம் தாமதமாயிற்று. கூச்சலில்லாமலிருந்தால் ஐந்து நிமிஷமாவது அவர் பேச உத்தேசித்திருந்தாரென்று தோன்றியது கட்டுக் கடங்காத கூட்டத்தில் கூச்சலே மலிந்துவிட, தலைவர் பேசுவதற்கே முடியாமற் போய் விட்டது. இதற்குள் வண்டி புறப்படு வதற்கு நேரமாய் விட்டதென்று பின்னாலிருந்த கார்டு பச்சை ஜண்டாவை அசைக்க ஆரம்பித்தார். கூட்டமோ வண்டியைப் பற்றிக் கொண்டும் தொற்றிக் கொண்டும் நின்று கொண் டிருந்ததேயல்லாமல் அப்பால் நகர்வதாகக் காணப்படவில்லை. பச்சை ஜண்டாவைக் காட்டியதால் இஞ்சினோட்டி வண்டியின் விசையைத் திருப்பிவிட வேண்டியது அவசியமானாலும் இந்தச் சந்தர்ப்பத்தில் அவருக்கும் கை ஓடாமல் தயங்கிக் கொண்டிருந்தார். தலைவர் பார்த்தார். தம்மால் வண்டி புறப்படுவதும் தாமதமாகிறதென்று உடனே இரண்டொரு வார்த்தையில் "கவலைப் படவேண்டாம். எல்லோரையும் சிறையில் சந்திக்கிறேன்!" என்று சொல்லி முடித்துவிட்டார். இதற்குள் இன்ஸ்பெக்டரும் "இனிமேல் அரைக்கணமும் தாமதிக்க முடியாது போங்கள் உள்ளே" என்று அதிகாரத் தொனியோடு சொல்லி அவரை உள்ளே அழைத்துக் கொண்டு போய் விட்டார். ஜனங்களும் வண்டியை விட்டு மெதுவாக அப்பால் நகர்ந்தனர். எல்லா ஜனங்களும் வண்டியை விட்டு அப்பால் போய் விட்டார்களா என்று பார்த்துக்கொண்டு இன்ஜின் ஓட்டி விசையைத் திருப்பி விட்டார். வண்டி மெதுவாய் திருத்தருப்பூண்டி பக்கமாய் நகர ஆரம்பித்தது.

வண்டி கண்படு தூரத்தை விட்டு அப்பால் செல்லும் வரை தொண்டர்களும் ஜனங்களும் அங்கேயே நின்று

வண்டியைப் பார்த்துக் கொண்டிருந்தனர். பின்னுல் ஏக்கத்தோடு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டனர். சற்று முன்னும் பின்னுமாகப் பத்து நிமிஷ நேரத்திற்குள்ளாக எல்லோரும் ஜாகையை அடைந்தனர். அப்பொழுது மாலை 6 மணி சமயமாயிருந்தது. போஜனஞ் செய்யாமலேயே ரெயில்வே ஸ்டேஷனுக்கு அழைத்துக்கொண்டு போகப் பட்டிருந்தனராதலால் வந்ததும் போஜனத்திற்கு மணியடிக் கப்பட்டது. பெரும்பாலோர் தட்டுகளை ஏந்திக்கொண்டு முதல் பந்தியில் போய் உட்கார்ந்து கொண்டனர். சில தொண்டர்கள் மாலைக் கடன்களை முடித்துக் கொள்வதற்காக ராஜபாட்டையிலிருந்த குட்டைக்குச் சென்றனர். மாலை போஜனம் இரண்டு கறி, நெய். ரசம், மோர் இவற்றேடு தயாரிக்கப்பட்டிருந்தது. இந்த முறையிலேயே பிரதிதினமும் போஜனம் நடந்தேறிக் கொண்டு இருந்தது. காலையில் சாம்சார் செய்யப் பட்டிருந்தால் மாலையில் ரசமும் காலையில் ரசம் படைக்கப்பட்டிருந்தால் மாலையில் சாம்பாருமாய் போஜனம் நடந்தேறிக் கொண்டிருந்தது. ஊறுகாய்களில் இரண்டொரு தினுசு மாறி மாறித் தயாரிக்கப்பட்டு வந்தன. மாங்காயில் மிளகாயோடு வெல்லம் கலந்து இனிப்புள்ள ஊறுகாயாக ஒவ்வொரு சமயம் தயாரிக்கப்பட்டு வந்தது. ஆனுல் இது சிலருடைய வாய்க்கு அபூர்வமான ருசி படைத்ததாகவும் சிலருடைய வாய்க்கு ஊறுகாய் வர்க்கத்தில் சேர்க்கப்படாத ருசியாகவும் தோன்றியது.

மணி 8 அடித்ததும் மாலைப் பிரார்த்தனைக்காகத் தொண்டர்கள் அழைக்கப்பட்டனர். எல்லோரும் வெளியே மேலத் தெருவை ஒட்டியிருந்த ஆசிரமத்து வெளிப்பந்தலுக்குப் போய் வரிசையாய் உட்கார்ந்து கொண்டனர். வழக்கம் போல ஆஜர்ப்பட்டி அழைக்கப் பட்டது. தலைவர் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் பெயர் விடுதலையடைந்து விட்டதாகக் கணக்கிடப்பட்டார். இது போலவே பின்னுல் கைது செய்யப்பட்டுத் தண்டனையடைந்த தொண்டர்களெல்லோரும் விடுதலை யடைந்தவராகவே கணக்கிடப்பட்டு வந்தனர். ஆஜர்ப்பட்டி வேலை முடிந்ததும் பிரார்த்தனை

ஆரம்பமாகி சுமார் 15 நிமிஷம் வரை நடந்தேறியது. இது முடிந்ததும் தொண்டர்கள் எழுந்து தத்தம் ஸ்தானங்களுக்குப் போய்ச் சேர்ந்தனர். 10 மணிக்குள்ளாக எல்லோரும் நித்திரைக்குப் போயினர். பாரா ஏற்கப்பட்டிருந்தவர்கள் மட்டும் மாறி மாறி விழித்திருந்தனர்.

## இரண்டாம் கோஷ்டி தவிப்பு

மாறுநாள் மே 1௳ வியாழக்கிழமை இரவில் அறிவிக்கப் பட்ட ஏற்பாட்டின்படி தொண்டர்களின் கோஷ்டி ஒன்று ஸ்ரீ பி. கே. ராமாச்சாரி தலைமையில் இருட்டோடு உப்பளத் திற்குச் சென்றனர். ஆசிரமத்தில் இருந்த தொண்டர்கள் 5 மணிக்கெல்லாம் எழுப்பி விடப்பட்டனர். பிரார்த்தனை முடிந்து சிற்றுண்டியானபின் பஜனை கோஷ்டிகளாக அனுப் பப்படுவாரும் பிரசாரத்திற்கு அனுப்பப்படுவாருமா யிருந்தனர். வேதாரண்யத்திற்கு வடமேற்கில் தோப்புத் துறையென்ற ஓர் ஊர் இருக்கிறது. இங்கு முஸ்லீம் ஜனத் தொகையே மிகுதி. சில தொண்டர்கள் இங்கு போய்ப் பிரசாரஞ் செய்துவந்தனர். காலை 9 மணிக்குள்ளாக வெளியே போன தொண்டர்களெல்லோரும் திரும்பி வந்துவிட்டனர்.

பிறகு எல்லாத் தொண்டர்களும் மேலே ஒரு பாராவில் குறிக்கப்பட்டுள்ள குளத்திற்கே போயினர். இந்தக் குளத்திற் கெதிரில் நாட்டுக்கோட்டை செட்டியார் ஒருவர் கோவில் கட்டிக்கொண்டிருந்தார். மண்டபங்களுக்கு வேண்டிய பெரிய தூண்களுக்கெல்லாம் இந்தக் குளத்தின் கரையிலேயே சிற்ப வேலைகள் நடந்து கொண்டிருந்தன. மணற்பிரதேசத் தில் பாறைக்கற்கள் சமீபத்திலில்லாததால் தூரதேசத்திலி ருந்து பெரிய கற்களைக் கொண்டு வருவது வெகு சிரமத்தின் பேரில் வேலை நடந்து கொண்டிருந்தது. சிற்பவேலை முடிந்த தூண்களை அதற்கேற்பட்ட ஸ்தானங்களில் கொண்டுபோய்ச் சேர்க்க நூற்றுக் கணக்கான நிமிர்ந்த ஆட்கள் தேர்வடங் கள் போன்ற பெருத்த கயிறுகளைக் கொண்டு 'ஏலேய ஏஹோம்' என்ற சப்தத்தோடு வியர்வை நீர் சிந்த வெகு

கஷ்டத்தோடு கொண்டு போய்க் கொண்டிருந்தனர். ஸ்நானம் செய்யச் சென்ற தொண்டர்களுக்கு இது ஒரு சிறு தமாஷாயிருந்தபடியால் அப்படியே சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்து பிறகு தண்ணீரில் இறங்கி ஸ்நானம் செய்தனர். இந்தக் குளத்திற்குக் கட்டிடமாய்க் கொண்டிருந்த கோவிலுக்கு முன்னால் ஒரே ஒரு படித்துறைதான் சீராய் சமீபத்தில் கட்டப்பட்ட புதுப்படித்துறையாக இருந்தது. அதன் இடது பாரிசத்தில் வேறு இரண்டொரு படித்துறைகள் இருந்தனவென்றாலும் அவை பாழடைந்த படித்துறைகளாயிருந்தன. இது குளத்தின் கீழ் பாரிசம். மற்ற மூன்று பக்கங்களிலும் படித்துறைகளின்றி வெறுமையாய் விடப்பட்டிருந்தன. நூற்றுக் கணக்கான தொண்டர்கள் தண்ணீரில் குதிப்பதும், நீந்துவதும், ஆடுவதும், படிக்கட்டுகளில் சோப்பு போடுவதுமாயிருந்த படியால் தண்ணீர் சற்று நேரத்தில் அழுக்காகி விட்டது.

இதிலிருந்து ஸ்நானம் பண்ணுவது சுத்தமாகத் தோன்றாத ஒரு சிலர் அதன் வலது பாரிசத்தில் சற்றுத் தள்ளி படித்துறையின்றி வெறுமையாகக் கிடந்த இடத்தில் போய் ஸ்நானம் செய்து கொண்டிருந்தனர். தொண்டர்கள் ஈரவேஷ்டிகளையும் சொக்காய்களையும் ஆசிரம வெளி முற்றத்தில் கட்டப்பட்டிருந்த கயிறுகளில் காயப்போட்டு உலர்ந்த ஆடைகளை உடுத்திக்கொண்டு நெற்றியில் விபூதி, குங்குமம், திலகம், திருமண், கோபி முதலியன தத்தம் மதாசார விதிப்படி அணிந்துகொண்டு தக்ளி நூற்றுக்கொண்டும் புஸ்தகங்களைப் படித்துக்கொண்டும் தத்தம் படுக்கைகளிலிருந்தனர். சற்று நேரத்திற்கெல்லாம் காலை போஜனத்திற்கு மணியடிக்கப்பட்டது. உடனே தொண்டர்கள் தட்டுகளை ஏந்திக்கொண்டு போஜனசாலைக்குப்போய் அவ்வேலையை முடித்துக் கொண்டனர்.

பகல் 12மணி சமயத்திற்குக் காலையில் உப்பளஞ் சென்ற தொண்டர்கள் வந்து சேர்ந்தனர். கோடிக்கரைப்

பக்கமாய்ச் சென்று மாலையில்தான் திரும்பி வருவதாய் சிற்றுண்டி வகையறு தயாரித்துக் கொண்டுபோன இந்தக் கோஷ்டியார் அந்தக் கோடைக்காலத்துக் காய்ந்த மணலில் அந்நேரத்திற்குத் திரும்பி வந்தபொழுது ஒவ்வொருவருடைய முகத்தையும் பார்த்தால் வெகு பரிதாபமாயிருந்தது. இவ்வளவு அவசரமாய்த் திரும்பி வந்தது அவர்கள் அனாவசியமான கஷ்டத்தை வேண்டுமென்று விலைக்கு வாங்கிக் கொண்டது போலிருந்தது. வழி நன்றாய்த் தெரிந்து கொள்ளாத ஓர் ஆளைத் துணைகொண்டு போனதில் குறித்த இடமாகிய கோடிக்கரைப் போய்ச்சேர வெகுநேரம் பிடித்திருந்தது. வேதாரண்யத்திலிருந்து கோடிக்கரை 7மைல். இவர்கள் வழி தெரியாமல் சுற்றியலைந்தது சுமார் 3மைல். ஆக போய்ச் சேருவதற்குப் பத்து மைல் நடந்தவர்கள் கொஞ்சங்கூட இளைப்பாறாமல் உப்பள்ளியதும் வந்ததினால் ஒரே மூச்சில் 17மைல் நடந்தது போலாயிருந்தது. இந்த கோஷ்டிக்குக் காப்டனாய்ச் சென்றிருந்த ஸ்ரீ பி. கே. ராமாச்சாரியார் மற்ற தொண்டர்களிடம் அங்கு தங்கியிருந்து மாலை புறப்பட்டு போகலாமென்று எவ்வளவோ சொல்லியும் அதில் இரண்டொருபேர் அவசியம் சாப்பாட்டு வேளைக்கு ஆசிரமத்திற்குப் போய்ச் சேர்ந்துவிட வேண்டுமென்று முரண்டுபண்ணி அழைத்துக்கொண்டு வந்திருந்தார். வழியில் கீழும் மேலும் பொசுக்குண்டு தண்ணீர் கிடைக்காமல் மகா பரிதாபகரமான தோற்றத்தோடு அந்தச் சமயத்திற்கு ஆசிரமத்திற்கு வந்தவர்கள் ஆயாசமாய்ப் போய்ப் படுத்துக் கொண்டனர். களை தெளிய கால் மணி நேரம் வரை பேசாமல் படுத்திருந்தனர். இதற்கிடையில் மற்ற தொண்டர்கள் அவர்கள் கொண்டு வந்த உப்பையெடுத்து வெயிலில் காயவைத்தனர். பிறகு அவர்களை எழுப்பி போஜனமருந்தச் செய்தனர்.

மத்தியான்னம் வழக்கம்போல் அட்டவணை அலுவல்கள் மௌன விரதம், பத்திரிகை விஷயம் வாசித்தல் முதலியன ஒழுங்காக நடந்தேறின. இவை முடிந்ததும் தலைவர் ஸ்ரீ சந்தானம் தமது இருக்கையை விட்டு தொண்டர்

களிருந்த இடத்திற்கு வந்து சிறிதுநேரம் வரை மேற் கொண்டு நடைபெறவேண்டிய காரிய முறைகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். இது போலவே பிரதி தினமும் நடைபெற்று வந்தது. அன்று மாலை உப்பு அள்ளி வரு வதற்காக ஒரு கோஷ்டி அகஸ்தியாம்பள்ளிக்கு அனுப்பப் பட்டது. மாலையில் உப்பள்ளச் சென்றவர்கள் அகஸ்தியம் பள்ளிக்குப் போய் அங்குள்ள உப்பளங்களில் உப்பள்ளிக் கொண்டு வரும் வழியில் உப்பிலாகா ஜவான்களால் தடுக்கப் பட்டு பாதி பறிகொடுத்துக் கொஞ்சம் உப்போடு மாலை 6 மணிக்கு ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அந் நேரத்தில் ஆசிரமத்திற்கு எதிரில் பெருங்கூட்டமாக ஜனங்கள் காலையில் செய்யப்பட்ட விளம்பரப்படி வந்து கூடியிருந்தார்கள். மேலத்தெருவிலும் ராஜபாட்டையிலும் வெகுதூரம் வரை ஜனங்கள் திரண்டு உட்கார்ந்திருந்தனர். அன்று காலையில் அள்ளி வந்த உப்பு பொட்டலங்களாகக் கட்டப்பட்டு விற்பனைக்குத் தயாராக வெளியே வந்திருந்தது. தலைவர் சந்தானம் ஒருமணி நேரம் வரை அன்று உப்புச் சத்தியாக்கிரகம் நடந்த விவரத்தையெல்லாம் பொது ஜனங்களுக்கு எடுத்துச் சொல்லி முடிந்ததும் உப்புப் பொட்டலங்கள் ஏலம் போடப்பட்டன. அவை பிரியமாக விலை கேட்கப்பட்டு வெகு சீக்கிரம் விற்பனையாய் விட்டன. பிரதிதினமும் இந்நேரத்திற்குக் கூட்டம் கூடி அன்று நடை பெற்ற சத்தியாக்கிரக விவரங்களைக் குறித்துப் பொது ஜனங்களுக்கு அறிக்கை செய்யப்பட்டு வந்தது. கூட்டங் களில் ஒருநாள் அண்ணாமலை பிள்ளை பேசுவதும், ஒருநாள் சி. வி. ராஜகோபாலாச்சாரியார் பேசுவதுமாயிருந்து வந்தது. அண்ணாமலை பிள்ளை வேதாரண்யக் கூட்டங்களில் வெகு குதூகலமாகப் பொது ஜனங்களால் கொண்டாடப்பட்டு வந்தார்.

அன்று கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருக்கையில் மணி 8 ஆகவும் மணியடித்து வந்த ஸ்ரீ மணி பிரார்த்தனை சமயம் வந்து விட்டது என்பதைத் தெரிவிக்க வழக்கம்

போல் சேமக்கலத்தில் மணி அடித்து விட்டார். கூட்டத்தின் போது தொண்டர்களும் வரிசையாய் அங்கு வந்து உட்கார்ந்திருக்க வேண்டுமென்ற ஏற்பாட்டின்படி தொண்டர்களெல்லோரும் அந்த இடத்திலேயே ஆஜரிலிருந் தனர். கூட்டம் நடைபெறுவது சற்று நேரத்திற்கு நிறுத்தப் பட்டு பிரார்த்தனை ஆரம்பமாயிற்று. ஹரிஹரசர்மா அன்று பிரார்த்தனை கீதங்களைப் பாடி வந்தார். அவரைத் தொடர்ந்து தொண்டர்களெல்லோரும் ஒரே குரலாய்ப் பாடி வந்தனர். 15 நிமிஷம் வரை பிரார்த்தனை நடந்தேறிய பின் பழையபடி கூட்டம் ஆரம்பமாயிற்று. உபன்னியாசம் பாதியில் நிறுத்தி யிருந்தவர் விட்ட இடத்திலிருந்து பேச ஆரம்பித்தார். இவ்வாறு தினந்தினம் 10 மணி வரை பொதுக் கூட்டம் நடப்பதும் முடியும்வரை கூட்டம் கலையா மலிருப்பதும் நாளுக்கு நாள் கூட்டத்திற்கு வருவோரின் தொகை அதிகப்படுவதுமாயிருந்து வந்தது.

மறுநாள் மேமீ 2-ந் தேதி காலையில் உப்பள்ளச் சென்ற தொண்டர்கள் திரும்பி வருகையில் வழிமறிக்கப் பட்டு கைது செய்யப்பட்டதாக அறிவிக்கப்பட்டு உப்புப் பிடுங்கிக்கொண்டு விட்டு விடப்படவே வெறுங்கையாய்த் திரும்பி வந்தனர். மற்ற அலுவல்களெல்லாம் வழக்கப்படி நடந்தேறி அன்றைப்பொழுதும் கழிந்தது.

## உப்புக்கோட்டை முற்றுகை

அதற்கு மறுநாள் மேமீ 3உ சனிக்கிழமை சித்திரை மீ 21உ யன்று அதிகாலை இருட்டோடு எழுந்து ஒரு கோஷ்டி சுப்பிரமணியம் தலைமையில் அகஸ்தியம்பள்ளிக்கு உப்பள்ளச் சென்றது. சூரியோதயத்திற்கு முன் உப்பளங்களில் தொடை யளவு, இடுப்பளவு, முழங்கால் அளவு ஜலத்தில் இறங்கி உப்பள்ளி ஒவ்வொரு தொண்டரும் உப்பைப் பெரிய பெரிய மூட்டைகளாகக் கட்டிக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டு விட்டனர். சற்று தூரம் வந்ததும், உப்பிலாகா ஜவான்கள் பத்துபேர் பாணத்தடிகளை ஏந்திக்கொண்டு வந்து விட்டார்

கள். அவர்கள் பின்னல் உப்பிலாகா உயர்தர உத்தியோகஸ்தர் ஒரு வெள்ளைக்கார துரையும் வந்து கொண்டிருந்தார். தொண்டர்களின் தொகை குறைவாயிருக்கும் என்று நினைத்து வந்த ஜவான்களுக்குத் தொகை ஜாஸ்தியாயிருப்பதைக் காணவே ஒன்றுஞ் செய்ய முடியாமற் போய் விட்டது. அவர்கள் வழிமறிப்பதற்கு முன்னதாகவே படை தானகவே நின்றிருந்தபடியால் வழிமறிக்கும் ஜோலியுமில்லாமல் அவர்கள் அப்படியே துரை வருமட்டும் நின்றிருந்தனர். இரண்டு நிமிஷங்களில் துரையும் வந்து சேர்ந்தார். அவர் படைத் தலைவரைப் பார்த்து உப்பைக் கொடுக்கும்படி கேட்டார். அவர் முடியாது என்று பதில் சொல்லி விட்டார். துரை பார்த்தார்; தொண்டர்களின் தொகை மிகவும் ஜாஸ்தியாயிருந்ததால் ஒன்றுஞ் செய்ய முடியவில்லை. உடனே ஒருவித தடையுமின்றி போய் வரலாமென்று விட்டுவிட்டார். இங்கு நின்றதெல்லாம் 5 நிமிஷ நேரங்கூட இருக்காது. இதற்குள் இவ்வளவு சுலபமாக விடப்படபோகிறோமென்று ஒருவராவது நினைக்கவில்லை. போகலாம் என்று அனுமதி கொடுக்கவும் படை வேகமாய் நடக்க ஆரம்பித்தது. அகஸ்தியம்பள்ளி உப்பளங்கள் ஆசிரமத்திலிருந்து ஒன்றரை மைல் தூரத்திற்குள்ளாகவே இருக்கும். அரை மணி நேரத்திற்குள்ளாகப் படை ஆசிரமத்தை அடைந்து விட்டது.

முற்றத்தில் மூன்று நான்கு பாய்களை விரித்து ஈர உப்பையெல்லாம் காயவைத்தனர். தொண்டர்களுடைய கை கால்களெல்லாம் சேறும் சகதியுமாயிருந்தன. சூரிய வெப்பத்தால் சரியாகக் காய்ந்த உப்பளங்களானல் கெட்டித் தரையில் மேலாகக் கிடக்கும் உப்பை அள்ளுவது வெகு சுலபம். சரியான பருவத்திற்குச் சற்று முன்னதாகவே உப்புச்சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்பட்டு விட்டபடியால் உப்பளக்குழிகள் அநேகம் பாதியளவுக்குக் காய்ந்து கனத்த உப்புநீர் மேலாக இருந்துகொண்டு அடையடையாய்க் கீழே தங்கி நின்ற உப்பையெல்லாம் மூடிக்கொண்டிருந்தது. அதோடு சர்க்காருடைய முன்னெச்சரிக்கையால் மண் வேறு கொட்டப்பட்டிருந்தது. சில குழிகளில்

சப்பாத்தி முட்கள் போட்டு இறங்கமுடியாதபடி ஏற்பாடு களும் நடந்திருந்தன. தொண்டர்கள் சரீரக் கஷ்டங்களை ஒரு சிறிதும் லக்ஷ்யம் பண்ணுமல் கருமத்திலேயே கண்ணுகத் தண்ணீரில் இறங்கி இடுப்பளவுக்கு மேலும் இருந்த தண்ணீரில் மூழ்கி உப்பள்ளினர். இதனால் தொண்டர்களுடைய வேஷ்டியும் சொக்காயும் உடம்பும் ஒரே சகதியாயிருந்தன. ஆகையால் ஆசிரமத்திற்கு வந்ததும் உப்பைக் காயவைத்து விட்டு நீராடுவதற்காகக் குளத் திற்குப் போயினர். சற்று முன்னும் பின்னுமாக 10-30 மணிக்குள்ளாக எல்லோரும் ஸ்நானத்தை முடித்துக் கொண்டு ஆசிரமத்திற்குத் திரும்பி வந்துவிட்டனர். பின் னும் சற்று நேரத்தில் போஜனத்திற்கு மணியடிக்கப்பட்டது. தொண்டர்களெல்லோரும் தட்டுகளை ஏந்திக்கொண்டு போஜன சாலைக்குப் போயினர். தட்டுகளில் சாதம் பரிமாறப்பட்டு பிரார்த்தனை முடிந்ததும் எல்லோரும் சாப்பிட ஆரம்பித்தனர். நெய்ச்சாதம் பிசைந்து நாலைந்து கவளம் போட்டுக் கொண்டிருந்த சமயத்தில் தலைவர் சந்தானம் சீக்கிரமாகச் சாப்பிட்டு முடிக்கும்படி செய்தி அனுப்பினுர். தொண்டர்களுக்குக் காரணம் ஒன்றும் விளங்கவில்லை. ஐந்து நிமிஷம் முன் பின் சாப்பிட்டு எழுந் திருப்பதாயிருக்கும் பொழுது இந்தமாதிரி அவசரமாய்ச் சாப்பிடச் சொன்னதிலிருந்து ஏதோ விஷயமிருக்கிறது என்று தொண்டர்கள் நினைத்துக்கொண்டனர். இந்த விஷயம் மெதுவாகச் சொல்லப்பட்டதிலிருந்து தொண்டர் களுக்கு மேலும் கவலை அதிகரித்துவிட்டது. போஜனவேளை யில் இதென்ன அபசகுனமான தடங்கல் ஏற்படுகிறதே என்று தொண்டர்கள் நினைத்தவர்களாய் அவசரமாய் சாப்பிட்டதில் தொண்டையில் விக்கிக்கொள்வதும், அரை குறையாய் மென்று உள்ளே தள்ளுவதும், சிலர் இனிமேல் தம்மால் சாப்பிட முடியாது வெளியே சென்று விஷயம் தெரிந்து கொண்டால்தான் மனசு ஆறும் என்று சொல்லிக் கொண்டு பாதி சாப்பிட்டான தட்டுகளை எடுத்துக்கொண்டு புறப்படுவதுமாயிருந்தனர். இந்த விதமாக ஐந்து நிமிஷ

நேரத்தில் முதல் பந்தி முடிந்து இடம் சுத்தி செய்யப்பட்டு இரண்டாவது பந்தியும் 10 நிமிஷ நேரத்தில் முடிந்து எல்லாத் தொண்டர்களும் ஜாகைக்கு வந்தனர்.

அது சமயம் ஆசிரமத்திற்கு வெளியே சுற்றிலும் தெருவில் போலீஸ் ஜவான்கள் ஆசிரமத்தை முற்றுகை போட்டு நின்றுகொண்டிருந்தனர். ஜவான்கள் நாற்பது ஐம்பது பேர் ஆசிரமத்திலிருந்து ஒரு சாமானும் வெளியே போகாதபடி காபந்து பார்த்துக் கொண்டிருந்தனர். அப்பொழுதுதான் தொண்டர்களுக்கு விஷயம் தெரிந்தது. ஆசிரமத்தைச் சோதனை போட்டுச் சுலபமாய் உப்பைக் கைப்பற்றிக் கொள்ளலாமென்ற எண்ணத்தோடேயே அன்று காலையில் யாதொரு தடையுமின்றி தொண்டர்கள் விடப்பட்டார்கள் என்பது விளங்கியது. போலீஸ் டிபுடி சூப்ரின்டெண்டு தலைவர் க. சந்தானம் அவர்களோடு பேசிக் கொண்டிருந்தார். முதல் பந்தி சாப்பிட உட்கார்ந்திருந்த பொழுது வந்த அவரிடம் தலைவர் அப்பொழுது தொண்டர்களின் சாப்பாட்டு நேரமாகையால் எல்லோரும் சாப்பிட்டு முடிந்த பின்பு சோதனை போடலாம் என்று சொன்னார். அவரும் அதற்கு சம்மதித்து சாப்பிட்டு முடியும் வரை சோதனையை நிறுத்தி வைத்திருந்தார். எல்லோரும் சாப்பிட்டு முடிந்ததென்று தெரியவும் அவர் தலைவரிடம் "சோதனை போடலாமல்லவா?" என்று கேட்டார். இதற்கிடையில் தொண்டர்கள் என்ன செய்ய வேண்டும் என்பது குறித்து அந்த சமயத்திற்குத் தோன்றிய யுக்தமான யோசனையொன்றை முடிவு செய்துகொண்டு தலைவர் அதைக் காப்டனுக்கு அறிவித்திருந்தார். அதன்படி எல்லாஉப்பும் ஒரு கூடையில் போட்டுத் தொண்டர்களிருந்த ஜாகையின் நடுவில் வைக்கப்பட்டிருந்தது.

அதைச் சுற்றிலும் தொண்டர்கள் வட்டமாகக்கவிழ்ந்து கொண்டு ஐந்தாறு வரிசையாகக் கையோடு கைகளைச் சங்கிலிக்கோர்வையாகக் கோத்துக்கொண்டு உட்கார்ந்து கொண்டார்கள். இதைக்கண்டதும் போலீஸ் உத்தியோக

ஸ்தருக்குத் திகிலாய் விட்டது. அவர் தலைவரைப் பார்த்து "நீங்கள் இவ்வாறு செய்வது நியாயமல்ல. உங்களுக்கு அவகாசம் கொடுத்ததே பிசகு என்று இப்பொழுது தோன்று கிறது. வந்ததும் சோதனை போடாமல் சாப்பிடும் வரை காத்திருந்ததற்குப் பலன் இதுதானே?" என்றவாறெல்லாம் சொல்லி தொண்டர்களை உப்பை விட்டு விலகும்படி சொல்லச் சொன்னார். அவர்கள் முடியாதென்று பதில் சொல்லி விட்டார்கள். உடனே அவர் நல்லது ஆகட்டும்; நாமும் சத்தியாக்கிரகம் நடத்த வேண்டியதுதான் என்று சொல்லிக் கொண்டே உப்பிருந்த இடத்திற்குப் போக முயன்றார். ஒரு தொண்டராவது சிறிதும் வழிவிடுவதாயில்லை. ஒரு குண்டுப் பாறையை உருட்டி வைத்ததுபோல் தொண்டர்களெல் லோரும் ஒரே கட்டாய்க் கட்டிக்கொண்டு சிறிதும் இடை வெளியில்லாமல் உட்கார்ந்திருந்தனர். இவர்களைத்தாண்டி உப்பிருந்த இடத்திற்குப்போவது அசாத்தியமாய்த் தோன்றவே அவர் ஜவான்களைப் பார்த்து "டே ஜவான்களா, ஒவ்வொரு தொண்டராய் இழுத்துப் பிரித்து மெதுவாய்த் தூக்கிக்கொண்டு வெளியே கொண்டு போய் விடுங்கள்", என்றார். அவரருகில் நின்ற சர்க்கிள் இன்ஸ்பெக்டரும் சப் இன்ஸ்பெக்டர்களும் அதே உத்தரவைக் கொடுத்துக் கொண் டிருந்தார்கள். அன்று ஆசிரமத்திற்கு மதுரையிலிருந்து அ. வைத்தியநாதய்யரும், டாக்டர் தாயம்மாளும் வந்திருந் தனர். சென்னை ஸ்ரீமதி ருக்மிணி லக்ஷ்மீபதி அம்மாளும் தொண்டராகச் சேர்ந்து ஆசிரமத்திலேயே ஜாகையும் சாப்பாடும் வைத்துக்கொண்டு மூன்று நாள் முன்பிருந்தே ஆசிரமவாசியாகவே இருந்துவந்தார். இந்தச் சமயத்தில் போலீஸ் உத்தியோகஸ்தரின் உத்தரவுக்கிணங்கி ஜவான்கள் தொண்டர்களை ஒவ்வொருவராக இழுத்துப் பிரிக்க ஆரம்பித் தார்கள். முதல் வரிசையில் உட்கார்ந்திருந்த அ. வைத்தியநாதய்யர் முதலியோரை வெகு சீக்கிரம் வெளியே கொண்டு போய்ச் சேர்த்து விட்டனர். ஒரு தடவை வெளியே கொண்டு விடப்பட்டு விட்டால் மீண்டும் திரும்பி வருவதில்லை என்ற தர்மநியாயத்திற்குக் கட்டுப்

பட்டவராய் வெளியே போனவர்கள் வெளியிலேயே நின்று கொண்டு போலீஸ்காரர்கள் செய்யும் அட்டூழியங்களை எல்லாம் பேசாமல் பார்த்துக் கொண்டிருக்க வேண்டிய நிலையில் இருந்தனர். அடித்தாலும் உதைத்தாலும், கையை ஒடித்தாலும், காலைப்பிடித்து இழுத்தாலும், அத்தனையும் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டியதே சத்தியாக்கிரகத்தில் மூலதத்துவமாய் விட்டபின் யார் என்ன செய்யமுடியும்? ஒருவரோடு ஒருவர் பின்னிப் பிடித்திருந்த கைகளை விலக்கி ஒவ்வொருவராய் வேருக இழுத்து இரண்டிரண்டு ஜவான்கள் கூடி தூக்கி வெளியே கொண்டுபோய்ச் சேர்த்துக் கொண்டிருந்தனர். இரக்கமில்லாத இரண்டொருவர் தொண்டர்களின் கால்களைப்பற்றி இழுத்து வெளியே கொண்டுபோயினர். தொண்டர்கள் எல்லாவற்றையும் சகித்து கொண்டனர். சுற்றிலும் வட்டமாய் கவிந்திருந்த தொண்டர்களின் தொகை சிறுகச் சிறுகக் குறையவும் பாக்கியிருந்த தொண்டர்கள் தங்கள் முழு வல்லமையுங் காட்டி உயிரினும் பெரிதாய் உப்பைக் காத்துவரத் தொடங்கினர். வெளி வரிசையிலிருந்தவர்கள் எழுந்து நின்று உப்பிருந்த பக்கமாய் முன்னல் சாய்ந்து கொண்டு அடிவரிசையில் உப்பையடுத்து உட்கார்ந்திருந்த நாலைந்து தொண்டர்களுக்குக் காற்ருேட்டமில்லாமற் செய்து விட்டனர். இது தொண்டர்கள் வேண்டுமென்று செய்த காரியமல்ல. உள் வரிசையிலிருந்த தொண்டர்களும் தங்களுடைய கவனம் பூராவும் உப்பிலேயே செலுத்தியவர்களாய் உப்பை அணைத்துப் பிடித்துக்கொண்டு அப்படியே மூச்சுத்திணறிக் கிடந்தனர். உப்பைக்காப்பாற்ற வேண்டுமென்ற அதிதீவிர உணர்ச்சியில் ஊறிக்கிடந்த அவர்களுக்குச் சிறுகச் சிறுகப் பிரக்ஞையற்றுப் போவது தெரியாமலுமாகிவிட்டது. ஒவ்வொரு தொண்டரைப் பிடித்துக்கொண்டு வெளியே செல்லும் பொழுது 'மாஹத்மா காந்திக்கு ஜே' என்று எல்லோரும் சேர்ந்து கோஷம் செய்த வண்ணமாகவே இருந்தபடியால் உள்ளேயிருந்து மூச்சுத் திணறியிருந்த தொண்டர்கள் கூவியிருந்தாலும் அது கேட்கக் கூடியதாகவும் இருக்கவில்லை. இந்த நிலையில் தொண்டர்கள்

ஒவ்வொருவராய் பிரிக்கப்பட்டு அப்புறப்படுத்தப் பட்டுக் கொண்டிருந்தனர். இனி உள்வரிசை ஒன்றுதான் பாக்கியி ருந்தது. ஆனால் அவர்களை அப்புறப்படுத்துவது சிரமமாக யிராதபடி எல்லோரும் மூர்ச்சையாகி இருந்தனர். இவர்கள் தான் அன்றையநாடகத்தில் தங்கள் பங்கைசரிவரச்செலுத்திக் காண்பித்த உண்மைவீரர்கள். இவர்களில் முக்கியமாய்க் குறிக்கப்பட வேண்டியவர்கள் மதுரைத் தொண்டர்கள் கே.எ. கிருஷ்ணமாச்சாரியும், வீராசாமியும், கோயம்புத்தூர் தொண்டர் ராஜுவும் ஆவர். இவர்கள் உள்ளங்கையில் உப்பைக் கௌவிக்கொண்டு அப்படியே மூர்ச்சை போயி ருந்தனர். மூவரும் இருபது வயதிற்கு மேற்படாத இளம் வாலிபர்கள். அவர்களுடைய மெல்லிய தேகம் அப்படியே துவண்டு போய் மூடிய கண் திறவாமல் மூர்ச்சையாய்க் கிடந்தனர். அவர்கள் அப்புறமாய் கொண்டு போகப்பட்டு மூர்ச்சை தெளிய சிகிச்சை செய்யப்படலாயினர். ராஜுவுக்கு விலாவில் நன்றாய் இடியும் உதையும் பட்டிருந்தபடியால் சற்று மூர்ச்சை தெளியவும் அவர் வலி பொறுக்க முடியாமல் வீறிட்டு அலற ஆரம்பித்தார். அவருக்காக வெளியிலிருந்து வைத்தியரை அழைத்து வந்து சிகிச்சை செய்யப்பட வேண்டியிருந்தது. மதுரை பிச்சைக் கோனார் என்ற தொண்டரும் சிறிது மூர்ச்சையாயிருந்தாரென்றாலும் சிறிது நேரத்தில் தெளிவடைந்து விட்டார்.

இத்தகைய அலங்கோலக் காட்சிகளை யெல்லாம் உண்டாக்கி விட்டு போலீஸார் அன்று உப்பைக் கைப்பற்றிக் கொண்டு போயினர். தொண்டர்கள் மூர்ச்சையாய்க் கிடக்கிறார்கள் என்ற செய்தியைக் கேள்விப்பட்டு டிபுடிகலெக்டர் வி. பொன்னுசாமி பிள்ளையும், சப்மாஜிஸ் டிரேட்டு ஐயங்காரும் விசாரிப்பதற்காக ஆசிரமத்திற்குப் பிற்பாடு வந்தனர். நிலைமையைப் பார்த்து வைத்திய சிகிச்சை அவசியம் இல்லை எனச்சொல்லியும் டாக்டரை வரவழைத்துத் தங்கள் பேரில் பழியேற்படாதபடி பார்த்துக் கொண்டனர். இதற்கிடையில் வெளியே கூடியிருந்த ஜனங் கள் தொண்டர்களைப் போலீஸார் அடிக்கிறார்களென்று

விசனத்தோடு ஒன்றுஞ்செய்ய முடியாதவர்களாய்த் தவித்துக் கொண்டிருந்தனர். எல்லாம்முடிந்து ஆசிரமத்தில் சமாதானம் நிலவ ஒருமணி நேரத்திற்குமேல் ஆகிவிட்டது. மூன்று வாலிபர்களில் ராஜு வலியினால் முனகிக்கொண்டே இருந்தார். வீராச்சாமி வலிபொறுக்க முடியாமல் அலறிக் கொண்டிருந்தார். கிருஷ்ணமாச்சாரி மூர்ச்சை தெளிந்து சற்று எழுந்திருக்கும் நிலைக்கு வந்தார். உயிருக்கே மோசம் வந்துவிடப் போகிறதோ என்று பயந்ததற்கு அந்த மட்டில் தலைக்கு வந்த விபத்து தலைப்பாகையோடு போயிற்று.

தலைவர் சந்தானம் அவர்கள் அன்று நடந்த சத்தியாக்கிரகத்தில் தொண்டர்கள் தாம் எதிர்பார்த்ததை விட எவ்வளவோ மடங்கு சிலாக்கியமாக நடந்து கொண்டார்களென்றும், மூர்ச்சையடைந்த தொண்டர்கள் மேலும் ஆசிரமத்தில் வைத்துக்கொண்டு இன்னல்களுக்காளாக்காமல் அவரவர் ஊருக்கே அனுப்பிவிட உத்தேசித்திருப்பதாயும் தெரிவித்தார். ஆனால் அந்தத் தொண்டர்கள் வீட்டிற்குப் போக மறுத்து விட்டனர். மறுநாள் ராஜு மட்டும் திருச்சி டாக்டர் ராஜன் வைத்தியசாலைக்கு சிகிச்சைக்காக அனுப்பப்பட்டார். கிருஷ்ணமாச்சாரியும் வீராச்சாமியும் ஆசிரமத்திலேயே இருந்து கொண்டு ஒவ்வொரு சோதனை காலத்திலும் முன்னணியிலேயே இருந்து தமக்கு இயற்கையில் அமைந்துள்ள வீரத்தைக் காண்பித்து அடிக்கும் உதைக்கும் சிறிதும் அஞ்சாத தீரராகவே இருந்து வந்தார்கள்.

## ஸ்ரீ சந்தானத்திற்குச் சிறை

மறுநாள் மேமீ 4வ வழக்கம்போல் அதிகாலையில் உப்பள்ளுவதற்காகத் தொண்டர்கள் வெளிச்சென்று உப்பள்ளி வந்தனர். அன்று பகலில் மதுரையிலிருந்து 2வது படை தொண்டர்கள் வந்து சேர்ந்தனர். கூட மதுரை ஏ. எஸ். எல். பி. டி. ஆர். வந்திருந்தார். அன்று பகலில், க. சந்தானம் அவர்களுக்கு சப்மாஜிஸ்திரேட்டு முன்பாக

மறுநாள் ஆஜராகும்படி நோட்டீஸ் வந்து விட்டது. அன்று மாலை வழக்கம்போல் கூட்டம் கூடி அன்று நடந்த சத்தியாக்கிரகத்தின் விவரங்கள் பொது ஜனங்களுக்கு எடுத்துச் சொல்லப்பட்டன.

அதற்கு மறுநாள் ஆசிரமத்து அலுவல்களெல்லாம் வழக்கம்போல் நடைபெற்றன. பதினொரு மணிக்குப் போஜனம் முடித்துக்கொண்டதும் தலைவர் சந்தானம் அகஸ்தியம்பள்ளிக்கு வாய்தாவுக்காக ஆஜராகச் சென்றார். அன்றே விசாரணை நடந்து மாஜிதலைவர் ஸ்ரீராஜகோபாலாச்சாரியாருக்கு விதித்த தண்டனை போலவே அவருக்கும் 6மாதம் தண்டனை விதிக்கப்பட்டு 'ஏ' வகுப்பில் வைக்கும்படி சிபார்சு செய்யப் பட்டார். அன்று மாலை வண்டிக்கு வேதாரண்யத்திற்கு அழைத்து வரப்பட்டு மறுநாள் பகல் வண்டிக்கே திருச்சி சிறைக்கு அழைத்துச் செல்லப் பட்டார். அன்று மாலையும் பொது ஜனக்கூட்டம் கூடி தலைவர் சிறை பண்ணப்பட்ட விவரமும் சத்தியாக்கிரகம் நடை பெற்ற விவரமும் சொல்லப்பட்டன. க. சந்தானம் மட்டப்பாரை வெங்கடராமய்யர் அவர்களை அடுத்த தலைவராக நியமனக் கடிதம் எழுதி வைத்திருந்தது போல், ஷ வெங்கடராமய்யர் அவர்களே தற்சமயம் தலைவராய் வீற்றிருந்து அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருந்தார். அன்றைய கூட்டம் அவர் தலைமையிலேயே நடைபெற்றது. திருவண்ணாமலை ந. அண்ணாமலை பிள்ளை முதலானோர் நீண்ட பிரசங்கங்கள் நிகழ்த்தினர். ஸ்ரீமதி ருக்மிணி லக்ஷ்மீபதியம்மாளும் ஆங்கிலத்தில் உபன்னியாசம் நிகழ்த்தினர்.

மறுநாள் மேமீ 6உ வழக்கம்போல் மட்டப்பாரை வெங்கடராமய்யர் அவர்கள் தலைமையில் அலுவல்களெல்லாம் முறைப்படி நடந்தேறி வந்தன. பகல் வண்டிக்கு மாஜித் தலைவர் சந்தானம் திருச்சிக்கு அழைத்துச் செல்லப் பட்டார்.

நிற்க முதல் தலைவர் சி. ராஜகோபாலாச்சாரியார் கைது செய்யப்பட்டதன் பின்னிட்டு தொண்டர்களில் ஒரு

சிலர் சொந்த ஊருக்குப் போகும் இச்சை கொண்டார்கள். மே மீ 2-ஆம் தேதி சென்னையில் நடந்த தடியடியின் காரணமாகப் பொதுவாகத் தென்னாட்டு ஜனங்கள் கிலி பிடித்துப்போயிருந்தனர். தங்கள் தங்கள் வாலிபர்களை முதற் படையில் அனுப்பியிருந்த தாய் தகப்பன்மார்கள் தம் குழந்தைகளின் உயிருக்கு எங்கே மோசம் வந்து விடுகிறதோ என்று பயந்து அவசரத் தந்திகளில் பேச ஆரம்பித்தனர் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரின் காரியதரிசி ஸ்ரீ சுப்பையா தலைவர் கைது செய்யப்பட்டதும் அவருக்கு வேண்டிய சாமான்களையெல்லாம் தயார் செய்து கொடுத்து அவரைத் திருச்சி சிறைக்கு அனுப்பிவிட்டு, தமக்கு ஏதோ அவசர ஜோலிகள் இருப்பதாகச் சொல்லி ஊருக்குப் புறப்பட்டார். இவர் பிள்ளையார் சுழி போட்டு வழி காண்பித்து விடவே, மற்ற தொண்டர்களும் தாங்களும் தங்களுக்கு வந்த தந்திகளை அனுசரித்தும் வீட்டில் தங்களுக்குள்ள அவசர வேலைகளைக் குறித்தும் போய் ஒரு வாரத்தில் மீண்டும் திரும்பி வந்துவிடுவதாக ரஜா வாங்கிச் செல்ல ஆரம்பித்தனர். பின்னால் வந்த தலைவர்களுக்கு இது ஒரு தொந்தரவாகவே இருந்தது. ஆனாலும் அவர்கள் நோக்கம் பார்த்துக் கொண்டு ஜாஸ்தி அறிமுகமானவர்கள் செல்வாக்குள்ளவர்கள் தாக்ஷிண்யத்திற்குள்ளவர்கள் ஆகிய சிலருக்கு மட்டும் அனுமதி கொடுத்து விட்டு மற்றவர்களுக்குப் பலவித காரணஞ் சொல்லி திருப்தி பண்ணி, இந்தத் தொந்தரவை ஒரு விதமாய்ச் சமாளித்துக் கொண்டனர். யாரையுமே அனுப்பப் போவதில்லையென்று ஒரு வார்த்தையாக முதலிலேயே சொல்லியிருந்தார்களேயானால் தொந்தரவை இன்னும் மட்டுப் படுத்திக் கொண்டிருக்கலாம்.

## காந்திஜி கைது

நிற்க மே மீ 6வ யாகிய அன்று பகலில் அட்டவணைக் கிரமப்படி மௌன விரதமும், பத்திரிகை விஷயமும் நிறைவேறின. அன்றைப் பத்திரிகையில் சென்ற ஒரு மாதத்திற்கு

மேலாக ஒவ்வொரு நாளும் எதிர்பார்க்கப்பட்ட ஒரு முக்கிய விஷயம் வந்திருந்தது.

பாரத நாட்டின் ஜீவரத்தினமாயிருந்து வந்த மஹாத்மா காந்தி அடிகள் மே மீ 4உ நள்ளிரவில் கைது செய்யப்பட்டிருந்தார். அந்த விஷயம் 5உ பத்திரிகையில் பிரசுரமாகி 6உ யன்று ஆசிரமத்திற்கு விஷயம் தெரிந்ததும் 24 மணி நேரம் உபவாசம் அனுஷ்டிக்கப்படுவதென்று முடிவு கட்டப்பட்டது.

மறுநாள் மே மீ 7உ அதிகாலையில் வழக்கம் போல் ஒரு கோஷ்டி தொண்டர்கள் எழுந்து உப்பள்ளச் சென்றனர். மற்ற அலுவல்களெல்லாம் என்றைக்கும் போல் தவருமல் நடந்து வந்தன.

மணி 10-30 ஆயிற்று. தொண்டர்களெல்லோரும் தட்டுகளோடு போஜனசாலைக்குப் புறப்பட்டனர். முதல் நாள் ஆரம்பித்த உபவாசம் அதோடு 24 மணி நேரம் பூர்த்தியாயிற்று. முக்கால் மணி நேரத்திற்குள்ளாக எல்லோரும் இரண்டு பந்திகளாயிருந்து போஜனம் முடித்துக் கொண்டு ஜாகையில் வந்து உட்கார்ந்து கொண்டனர்.

தபால் இலாகாவைக் கவனித்திருந்த ஸ்ரீ தாணுவையர் அன்று வந்த தபால்களை யெல்லாம் தொண்டர்களுக்குப் பட்டுவாடா செய்து கொண்டிருந்தார். பதில் எழுத விரும்பினோர்க்குக் கார்டும் உறையும் கொடுக்கப்பட்டுக் கொண்டிருந்தன. வேண்டியமட்டும் கிடைக்கக் கூடியதாயிருந்ததைப் பார்த்தத் தொண்டர்கள் தங்களுடைய க்ஷேம லாபங்களையும் ஆசிரம வாழ்க்கையையும், சத்தியாக்கிரகம் நடைபெறும் முறையையும், தாங்கள் போய் உப்பள்ளிவந்த விருத்தாந்தங்களையும், சாங்கோ பாங்கமாய் எழுதிப் பெற்றோருக்கும் பந்துக்களுக்கும், நண்பர்களுக்கும் எழுதித் தபால் பெட்டியில் சேர்ப்பதற்காகத் தாணுவையரிடம் கொண்டு வந்து குவித்துக்கொண்டிருந்தனர். அன்று பிற்

பகலில் வழக்கம்போல் மௌனவிரதமும், பத்திரிகை விஷயங்களும் நடந்தேறின.

அன்று காலை முதற்கொண்டு மப்பும் மந்தாரமுமாயிருந்த வானம் மாலை 4 மணி சமயத்தில் அடித்த ஒரு குளிர்ந்த காற்றின் உதவியால் மழை கொட்ட ஆரம்பித்தது. இது சாமானிய மழையல்ல. அன்று முதல் சரியாக மூன்று நாட்கள் வரை வானம் விடா மழை பெய்து கொண்டே யிருந்தது. ஆசிரமத்து வெளிவேலைகள், சத்தியாக்கிரகம் ஒன்றும் நடத்த முடியாதபடி முற்றுப்புள்ளி போடப்பட்டது. இந்த மூன்று நாட்கள் வரை காற்றும் மழையும் கலந்தடித் தன. ஆசிரமத்தையே அடியோடு பெயர்த்துக்கொண்டு போய்விடுவதாகப் பயமுறுத்திக்கொண்டு இருந்தன. தொண்டர்களுக்குச் சாப்பிடுவதும் ஒண்டிக்கிடப்பதும் தவிர வேறு எவ்வித வேலையும் செய்ய முடியாமற் போய் விட்டது. வெளிக்குப் போக வேண்டுமானாலும் வெகு சிரம மாய் விட்டது. இரண்டொரு குடைகள் ஆசிரமத்திலிருந்தன. அவற்றைக் காத்திருந்து எடுத்துக் கொண்டு வெளியே போய் வருவதில் மல ஜல பாதைகளை அடக்கிக் கொள்ளும் கஷ்டமொன்று சம்பவித்து விட்டது. சிலர் ஸ்நானம் பண்ணும் ஜோலிக்கும் மழை முடியுமட்டும் முற்றுப்புள்ளி போட்டு விட்டனர்.

ஆசிரமத்தின் பாதியளவு கொட்டகையல்லாமல் வெறும் பந்தல் போடப்பட்டிருந்தது. அந்த இடம் பூராவும் மழை ஆரம்பித்த பத்து நிமிஷத்திலிருந்து ஒழுக ஆரம்பித்து விட் டது. அங்கிருந்த தொண்டர்களெல்லாம் ஆரம்பத்தில் அதுதான் வசதியான இடமென்று முன்கூட்டியே உஷார்ப் பட்டு அந்த இடத்தில் படுக்கைகள் விரித்திருந்தனர். மழை யில்லாத மட்டிலும் அவர்களுக்குக் காற்றோட்டம், வெளியே எட்டிப் பார்ப்பது முதலிய எல்லா வசதிகளும் இருந்தன. சற்று நேரம் வரை படுக்கையை அப்புறமும் இப்புறமுமாகத் தள்ளிப்போட்டுச் சமாளிக்கப் பார்த்தனர். ஓயாது ஒழுகும் தூவானமும் கூடி அந்த இடத்தில் கால்மணி

நேரத்தில் வெள்ளம் பெருகி விட்டது. இதனால் அங்கிருந்த தொண்டர்கள் படுக்கைகளைச் சுருட்டிக்கொண்டு, வேறிடங்களைத் தேட ஆரம்பித்தனர். கொட்டகை போட்டிருந்த இடந்தான் ஒழுகாமல் இருந்தது. அந்த இடத்திலேயே எல்லாத் தொண்டர்களும் நெருக்கமாய்ப் பாய்களை விரிக்க வேண்டியதாயிற்று. வெள்ளம் மிதமிஞ்சிப் போய்விட்டதால் நனையாமலிருந்த அந்த இடத்திற்கும் தண்ணீர் ஓடிவர ஆரம்பித்தது. இதைத் தடுப்பதற்காக நெடுக மேடொன்று போட்டு வைத்தனர். அந்த மூன்று நாட்களும் இடம் படுக்கை நனையாமல் பார்த்துக் கொள்வதே பெரிய கவலையாய் விட்டது. கடலையடுத்த மணல் தரையாயிருந்தபடியால் எவ்வளவு தண்ணீர் ஒழுகினாலும் ஓடிப்போனது போகப் பாக்கித் தண்ணீரைத் தரையேற்றுக்கொள்ளத் தயாராயிருந்தது. மண் தரையாகமாத்திரம் இருந்திருந்தால் இன்னும் நரகபாதையை அனுபவிப்பது போன்ற சங்கடங்களைத் தொண்டர்கள் அனுபவித்திருப்பர். உப்பளங்களில் மழைத்தண்ணீர் நிறைந்து போயிருக்குமாதலால் சில நாட்கள்வரை உப்பள்ளும் அலுவல் பூராவும் ஒத்திப்போட வேண்டியதாயிற்று.

இதற்கிடையில் மே மீ 9-ஆம் தேதியன்று காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நடைபெறவேண்டிய நாள் வந்து சேர்ந்தது. ஸ்ரீமான்கள் டி. எஸ். எஸ். ராஜன், ஏ. வைத்தியநாதய்யர், என். எஸ். வரதாச்சாரியார் முதலியோர் ஷெ கூட்டத்திற்காக வேதாரண்யம் வந்திருந்தனர். அன்று வழக்கம்போல் எல்லா அலுவல்களும் ஆசிரமத்திற்குள்ளிருந்து நடைபெற வேண்டியவை மட்டில் ஒழுங்காக நடந்தன. அன்று சற்று மழை நின்றிருந்தபடியால் மாலையில் ஆசிரமத்திற்கு முன்னால் பொதுக்கூட்டம் கூடுமென்று பகலில் சில தொண்டர்கள் டங்கா அடித்துக்கொண்டு ஊர் பூராவுஞ் சுற்றி விளம்பரஞ் செய்து வந்தனர். உடனே யாதொரு கூட்டமும் கூடக் கூடாதென்று 144-வது தடையுத்தரவு தலைவருக்கு சதாரா செய்யப்பட்டது. எனவே அன்று முதற்கொண்டு தடையுத்தரவை மீறுவதான அலுவல்

வந்து சேர்ந்தது. வெறும் வாயை மெல்லுவதற்குக் கூட சிறிது அவல் கிடைத்தது போல் வந்து சேர்ந்த இந்தச் சம்பவத்தை முழுவதும் பயன்படுத்திக் கொள்வதென்று தலைவர் மட்டப்பாரை வேங்கடராமய்யர் முடிவு கட்டினர். அதுபோலவே அன்று மாலை கூட்டம் கூடியது. கூட்டத்தைத் தடை செய்வதற்காக டெபுடி கலெக்டர் சப் மாஜிஸ்திரேட்டு போலீஸ் சூப்ரின்டெண்டு, ஜவான்கள் சகிதம் அங்கு வந்து தயாராயிருந்தனர். மேலத்தெருவின் வலது கோடியில் ரீசர்வ் போலீஸ் படையொன்று துப்பாக்கிகளோடு, நிறுத்தி வைக்கப்பட்டு இருந்தது. ஜவான்கள் ஜனங்களை அடித்துவிரட்டிக் கொண்டிருந்தனர். தைரியமாய் வந்து உட்கார்ந்தவர்களைப் பார்த்து, "மரியாதையாய் எழுந்து போய் விடுங்கள். இல்லையென்றால் கைது செய்வோம்" என்று பயமுறுத்திக் கொண்டு இருந்தனர். பயந்தவர்களெல்லாம் தூரமாய் சென்று விட்டனர். ஒரு சிலர் தைரியமாய் உட்கார்ந்து கைது செய்வதை வெகு ஆவலுடன் வரவேற்றனர். இவர்களில் முக்கியமானவர்கள் அன்று கமிட்டிக் கூட்டத்திற்கு வந்திருந்த மதுரை வைத்தியநாதய்யரும், என். எஸ். வரதாச்சாரியாரும், ஆசிரமத்தைச் சும்மா பார்த்து விட்டு போக வந்திருந்த மதுரை ஸ்ரீ பஞ்சரத்தினம் என்ற வாலிபருந்தான். தலைவர் சர்க்கார் முறைகளைக் கண்டித்து உபன்னியாசம் பண்ணிக்கொண்டிருந்தார். மேற்சொன்ன மூன்றுபேரும் மற்றையோரும் உட்கார்ந்து கேட்டுக்கொண்டிருந்தனர். மற்றவர்கள் அந்த ஊர்வாசிகளும் தோப்புத்துறை வாசிகளுமாவர். இவர்கள் உடனே டெபுடி கலெக்டரால் கைது செய்யப்பட்டு, லாக்கப்பில் கொண்டு போய் அடைக்கப்பட்டனர். இவர்கள் அழைத்துக்கொண்டு போகப்பட்ட பின் மேலும் சிறிதுவரை கூட்டம் நடைபெற்றுக்கொண்டிருந்து, பிறகு சமாப்தியாயிற்று. பிறகு நடக்கவேண்டிய அலுவல்கள் பிரார்த்தனை முதலியன கிரமப்படி நடந்தேறிய பின் இரவு 10 மணிக்குமேல் எல்லோரும் நித்திரை போயினர்.

மறுநாள் மேமீ 10-ஆம் தேதி வழக்கம்போல் அதி காலையில் தொண்டர்கள் எழுப்பி விடப்பட்டுப் பிரார்த்தனை நடந்தேறியது. சிற்றுண்டியானபின் தொண்டர்கள் சிறுசிறு கோஷ்டிகளாகப் பிரிந்து பஜனை புறப்படுவதும் பிரசாரத் திற்குப் போவதுமாயிருந்தனர். சென்ற மூன்று தினங்க ளாக அடித்த காற்று மழையினால் பந்தல் கால்களெல்லாம் சாய்ந்திருந்தன. கால்களை நேராக நிறுத்தி, பெரிய கால் களை முட்டுக் கொடுத்து, பந்தல்களைச் சீர்படுத்த வேண்டிய வேலையைப் பந்தல் கொத்தன்மார் வந்து பார்த்துக் கொண்டிருந்தனர். தலைவரும் தொண்டர்களும் இவர்களுக்கு ஒத்தாசை புரிந்து கொண்டிருந்தனர். அன்று பகலில் தலைவர் ஸ்ரீ வேங்கடராமய்யருக்கும் மறுநாள் கோர்ட்டில் ஆஜராகும்படி சம்மன் வந்துவிட்டது. அன்று மாலையும் சிறிது நேரம் கூட்டம் கூடியது. ஆனால் அடிக்குப் பயந்து ஜனங்கள் கூட்டமாய் வந்து உட்காராமல் சிறிது தூரமாய்ப் போய், வீட்டுத் திண்ணைகளில் குந்திக் கொண்டிருந்தனர். போலீஸ்காரர்கள் முந்தின நாள் போலவே ஒவ்வொரு தெருக்கோடியிலும் நின்று வந்த ஜனங்களை அப்படி அப்ப டியே விரட்டிக் கொண்டிருந்தனர். சிறிது நேரம் வரை அன்று கூட்டம் நடைபெற்றபின் சமாப்தியாயிற்று. முந்தின நாள் கைது செய்யப்பட்ட அ. வைத்தியநாதய்யர், என். எஸ். வரதாச்சாரியார், பஞ்சரத்தினம் இவர்களுடைய கேள்வி விசாரணை நடந்து தலா 6 மாத தண்டனை விதிக்கப் பட்டு, பஞ்சரத்தினம் ஸி வகுப்பாகவும் மற்ற இருவரும் பீ வகுப்பாகவும் சிபாரிசு செய்யப் பட்டனர். அன்று மாலை வண்டிக்கு அவர்களைத் திருச்சி சிறைக்குக் கொண்டு போயினர்.

மறுநாள் வழக்கம்போல் அதிகாலையில் தொண்டர்கள் எழுப்பிவிடப்பட்டனர். காலைக் குளிர்வாடை மிகுந்த படியால் இருட்டோடு எழுப்பப்படாமல் சற்றுத் தாமத மாகவே எழுப்பிவிடப்பட்டிருந்தனர். காலைக் கடன்களை முடித்துப் பிரார்த்தனை நடந்தேறி சிற்றுண்டி ஜோலி முடிந்த வுடன் தொண்டர்கள் வழக்கம்போல் பஜனைக்கும் பிரசாரத்

திற்குமாக அனுப்பப்பட்டனர். மற்ற அலுவல்களெல்லாம் கிரமப்படி நடந்து கொண்டு வந்தன. சாப்பாடு ஜோலி முடிந்தவுடன் தலைவர் அகஸ்தியம்பள்ளிக் கோர்ட்டுக்குப் புறப்பட்டுச் சென்றார். அன்று அவருடைய கேள்வி விசாரணை நடந்து 6 மாதம் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டு பி வகுப்புக் கைதியாக நடத்தும்படி சிபாரிசு செய்யப்பட்டிருந்தார். இவர் தமக்கு அடுத்தபடியாகத் தலைவர் ஸ்தானத்தில் ஸ்ரீமான் கே. எஸ். சுப்பிரமண்யம் அவர்கள் இருந்து நடத்தி வரும்படி நியமனக் கடிதம் எழுதி வைத்திருந்தார். அது போல் அவர் உத்தியோகத்தை ஒப்புக்கொண்டு அந்த நிமிஷத்தில் தலைவரானார். அன்று மாலை வண்டிக்கு ஸ்ரீ வேங்கடராமய்யர் திருச்சி சிறைக்கு கொண்டு போகப் பட்டார்.

## சித்ரவதைப் படலம்

சர்க்காருடைய கொள்கை அதுவரை சற்றுத் தளர்வாக இருந்து வந்தது. மேலே போகப் போகக் கொடுமையாய்க் கொண்டே தடியடிவரை வந்திருந்தது. பிரசாரத்திற்காகப் போகும் தொண்டர்களைக் கண்டபடி அடிப்பதும் உதைப் பதுமாயிருந்தனர். ஸ்ரீ சுப்பிரமணியம் தலைவராயிருந்து நடத்தியது நான்கே நாட்கள் தானென்றாலும் அவை நான்கு யுகம் போலிருந்தன. பொதுக் கூட்டம் கூடக்கூடாதென்று ஏற்கனவே 144 தடை உத்தரவு போடப்பட்டிருந்தது. அதற்குமேல் மற்றொரு புது உத்தரவு பிறந்தது. ஐந்துபேர் சேர்ந்து போகக் கூடாதென்ற அநியாய உத்தரவு. ஆசிர மத்திற்கு முன்னால் கூட்டம் கூட்டினாலும் ஜனங்கள் வருவது நின்று போய் விட்டபடியால் அன்றாடம் நடந்த சத்தியாக்கிரகத்தையும் போலீஸ் அநியாயங்களையும் பொது ஜனங்களுக்கு எடுத்துச் சொல்ல முடியாமல் போய்விட்டது. மழையெல்லாம் நின்று வெயிலும் காய ஆரம்பித்து விட்டது. ஆசிரமத்தில் மதுரையிலிருந்து இரண்டாவது படை வந்து சேர்ந்ததன் பின்பு தொண்டர்களின் தொகை அளவுக்கு மிஞ்சிப்போய் விட்டது. அதோடு மழையும் மூன்று நாள்

வரை பண்ணிவிட்ட உபத்திரவத்தால் ஆசிரமத்தில் அத்தனைத் தொண்டர்களை ஒரே இடத்தில் வைத்துக் கொண்டு ஒழுங்காக நடத்திக் கொண்டு போவது நிரம்பவும் சிரமமான காரியம் என்ற எண்ணமும் அப்பொழுது நிர்வாகிகள் மனதில் உதயமாகியது. இந்தச் சிரமத்தைச் சற்று தளர்த்திக் கொள்வதற்காகவேனும் தொண்டர்களைப் பிரித்து அங்கங்கே அனுப்பவேண்டியது அவசியமென்று தோன்றிவிட்டது. ஆகவே வண்டல் கிளை ஆசிரமத்திற்கு ஸ்ரீ சிதம்பரய்யர் தலைமையில் ஒரு கோஷ்டியும், அகஸ்தியம்பள்ளிக் கிளை ஆசிரமத்திற்கு ஸ்ரீதாணுவய்யர் தலைமையில் ஒருகோஷ்டியும், ஆயக்காரன்புலம் கிளை ஆசிரமத்திற்கு ஸ்ரீ பாலகிருஷ்ணன் தலைமையில் ஒரு கோஷ்டியும் அனுப்பப்பட்டன. அவர்கள் அங்கிருந்து கொண்டு சமய சந்தர்ப்பங்களை நோக்கி, உப்புச் சத்தியாக்கிரகம் நடத்திக் கொண்டு இருந்தனர். இவர்களுக்கு வேண்டிய போஜன பதார்த்தங்களும் பாத்திரங்களும் கையோடு கொண்டுபோய் சொந்தத்தில் சமையல் செய்து உண்ண வேண்டியதான ஏற்பாட்டுடனேயே அனுப்பப்பட்டிருந்தனர்.

ஐந்துபேருக்குமேல் போகக்கூடாது என்ற உத்தரவு பிறந்ததன் முன்னிட்டு ஒரு யுக்தி செய்து ஆசிரமத்திலிருந்து இரண்டிரண்டு பேராகச் சேர்ந்து பஜனைக் கோஷ்டிகளாய் அனுப்பப்படலாயினர். இந்த உத்தரவால் பஜனைக் கோஷ்டிகள் நின்றுவிடுமென்று சர்க்கார் நினைத்ததற்குப் பதிலாக தொகை குறைத்து அனுப்பும் வழக்கம் ஆசிரமத்தார் கையாண்டது அவர்களுக்கு ஏமாற்றமாய் முடிந்தது. டெபுடி கலெக்டரும் மற்றசர்க்கார் அதிகாரிகளும் கூடிய மட்டில் உபாயங்கள் அனுசரிப்பதும் உபாயமொன்றும் தோன்றாத சமயங்களில் தங்களுக்கு இயற்கையாக அமைந்துள்ள தடியடி உபாயத்தைக் கையாளுவது மாயிருந்தனர். ஆரம்பத்தில் பஜனை சற்று தூரம் போகவிட்டு வழி மறிக்கப்பட்டு வந்தது. தொண்டர் பிடிவாதமாய் மேலேதான் செல்லுவோமென்று போனால் போலீஸார் போகக்கூடாதென்று தடுப்பதும் தொண்டர் அந்த இடத்திலேயே அப்

படியே உட்கார்ந்துகொள்வதும் போலீஸார் கால் ஓயுமட்டும் அவர்களுக்குக் காவலாய் நிற்பதும் பிறகு அவர்கள் ஆளுக்கு இரண்டு பேராய் இழுத்துக்கொண்டும் தள்ளிக்கொண்டும் ஆசிரமத்திற்கு கொண்டு வந்து சேர்ப்பதுமாயிருந்தனர். ஆசிரமத்திற்கு வந்த தொண்டர்கள் மீண்டும் அதேநிமிஷத்தில் புறப்படத் தயாராயிருப்பார்கள். இவர்களை வராமல் தடுப்பதற்காகச் சில ஜவான்கள் ஆசிரமத்து வாசலிலேயே காவல் காத்திருப்பதுமாய் இந்த விதம் இரண்டொரு நாட்கள் நடந்தது. வெகு தூரம் போனபின்பு இழுத்து வருவதால் சிரமமும் அலுப்பு மடைந்த போலீஸார் அதன் பிறகு புறப்படும்போதே தடுக்க முற்பட்டனர். இதனல் தொண்டர்கள் ஆசிரமத்தை விட்டு வெளியே போக முடியாமல் போக முயல்வதும் தடுக்கப்படுவதும் போலீஸாருடன் மல்லாடிக் கொண்டிருந்தனர்.

இது ஒரு நாள் மாலை நடந்த காட்சியாகும். ஐந்துபேர் சேர்ந்து போகக் கூடாதென்ற உத்தரவு பிறப்பதற்கு முந்தினநாளும் அதற்கு முன்தினமும் தொண்டர்படை பூராவையும் தலைவர் கே. எஸ். சுப்பிரமணியமும் ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மீபதி அம்மாளும் ஊர்வலமாக நடத்திக்கொண்டு போயினர். அன்ருடம் மாலை நேரங்களில் ஊர்வலமாகச் சென்று ஒவ்வொரு தெரு மூலையிலும் நின்று உபன்னியாசம் செய்து வரும்முறை அனுஷ்டிக்கப் பட்டது. 144 தடை உத்தரவை மீறி இந்தக் காரியத்தைச் செய்தாலும் சர்க்கார் தொண்டர்களைக் கைது செய்ய விரும்பாமலேயே மௌனம் சாதித்து, ஜனங்களை அடித்து விரட்டுவதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்தனர். பொதுஜனங்களைப் பயமுறுத்தி கூட்டத்திற்கு வராமல் தடுத்து விட்டால் தொண்டர்கள் சும்மா இருந்து விடுவார்களென்று அவர்கள் நினைத்ததற்கு மாருகத் தெருத் தெருவாய்ச் சென்று உபன்னியாசம் செய்யும் உபாயத்தை ஆசிரமத்தார் கடைப்பிடிக்கவே அதற்குமேல் தான் 5 பேருக்கு மேல் போகக்கூடாதென்ற உத்தரவு பிறந்திருந்தது. அதற்கேற்ற யுக்தியை அனுசரித்து ஆசிரமத்தார் இரண்டிரண்டு பேராய் அனுப்ப ஆரம்பிக்கவும் தடிப்பிர

யோகத்தால் தொண்டர்களைப் பயமுறுத்தி விடலாம் என்று யோசித்தனர். சர்க்காருடைய அடக்குமுறைகள் வளர்வதை யனுசரித்துத் தொண்டர்களின் வீராவேசம் வரவர மூர்த்தண்ணியமாக மேலே கிளம்ப ஆரம்பித்தது. அடி உதைகளுக்கெல்லாம் சிறிதும் தயங்காமல் தொண்டர்கள் பஜனை செய்து போய்க்கொண்டும் போலீஸாரால் தடியடியுண்டும் இழுக்கப்பட்டும் ஆசிரமத்திற்குக் கொண்டுவரப்பட்டுக் கொண்டுமிருந்தனர். கூட்டம் கூடுவது தடைப்பட்டபோதிலும் பொது ஜனங்களுக்கு விஷயங்களை அறிவிப்பதற்கு ஆசிரமத்தார் இன்னொரு யுக்தியைக் கண்டுபிடித்தனர். ஆசிரமத்தில் மிஷின் ஒன்று தயாராயிருந்தது. அதன் உதவியால் அன்றாடம் நடைபெற்ற முக்கிய விஷயங்களை எல்லாம் சுருக்கமாக எழுதி 200, 300 பிரதிகள் பிரதிதினமும் தயாரித்துத் தொண்டர்கள் மூலமாய் ஒவ்வொரு வீட்டிற்கும் கொண்டு போய்க் கொடுத்து அதன்மூலமாய் கூட்டத்தில் சொல்லப் படவேண்டிய விஷயங்கள் குறைவின்றி அறிக்கைசெய்யப் பட்டுக்கொண்டேயிருந்தன.

## தோப்புத்துறைச் சம்பவம்

மற்றொரு கோஷ்டி மே மீ 12உ ஸ்ரீரங்கம் தினகரன் தலைமையில் தோப்புத்துறைப் பக்கமாய்ச் சென்றிருந்தது. அங்கு ஸ்ரீ தினகரன் உபன்னியாசம் செய்ய ஆரம்பிக்கவும் முஸ்லிம் மகாஜனங்களெல்லாம் ஒன்றுய்த் திரண்டிருந்தனர். போலீஸார் தங்களுக்கு ஏற்பட்ட மூர்க்கத் தனத்தை அந்த ஜனங்களிடையே காண்பிக்கவே அவர்கள் தெருவில் கொட்டியிருந்த செங்கல் துண்டுகளை எடுத்துக்கொண்டு போலீஸார் மேல் விட்டெறிய ஆரம்பித்தனர். இதனுல் சில ஜவான்களுக்கு நல்ல காயமே உண்டாயிருந்தது. இரவு 7-30 மணி சுமாருக்குத் தோப்புத் துறையில் பெரிய கலகம் நடக்கிறது என்று வேதாரண்யத்திற்குச் சமாச்சாரம் எட்டியது. மேலத் தெருக்கோடியில் நிறுத்தப்பட்டிருந்த ரிசர்வ் போலீசார் உடனே தோப்புத்துறைக்கு ஓடினர். அவர்கள் போய் ஜனங்களை அடக்கிவிட்டுப் பத்து மணிக்கு

மேல் திரும்பி வந்தனர். தினகரன் அன்று கைது செய்யப் பட்டார். அச்சுதநாயர், திண்டுக்கல் டி. ஆர். மகாதேவய்யர், வெங்கட்ராமய்யரும் அன்று கைது செய்யப்பட்டிருந்தனர். பொது ஜனங்களிலிருந்து கலகஞ் செய்த குற்றத்திற்காக சிலர் கைது செய்யப்பட்டிருந்தனர். எல்லோரும் வேதாரண்யம் சப்ஜெயிலுக்குக் கொண்டு வரப்பட்டு லாக்கப்பில் வைக்கப்பட்டனர்.

மே 13வ அன்று அகஸ்தியம்பள்ளிக்கிளை ஆசிரமத்தலைவர் தாணுவய்யர் கைதியாகி பின்னால் 6 மாதம் வெறுங் காவல் தண்டனை விதிக்கப்பட்டுத் திருச்சி சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அன்று மாலை ஹிந்தி உபாத்தியாயர் கிருஷ்ணசாமி கோனார் தலைமையில் ஒரு பஜனை கோஷ்டி புறப்பட்டு போயிற்று. ஒரு தெரு மூலையில் நின்று கிருஷ்ணசாமி கோனார் பிரசங்கம் செய்த போது அவரைப் பிடித்துக் கைது செய்தார்கள். அவரைப் பின்பற்றி பி. கே. நாராயண ஐயங்கார் உபன்னியாசம் ஆரம்பித்த தில் அவரும் பிடிபட்டார். இந்த இரண்டுபேர் போகப் பாக்கிப் பேர்கள் போலீசாரால் பலவந்தமாக ஆசிரமத் திற்குக் கொண்டுவந்து விடப்பட்டனர்.

மறுநாள் மேமீ 14வ வழக்கம்போல் தொண்டர்கள் எழுப்பி விடப்பட்டுப் பிரார்த்தனை முடிந்தவுடன் லேசாகச் சிற்றுண்டி முடிந்ததும், பஜனை கோஷ்டிகளாகப் புறப் பட்டனர். அன்றையத்தினம் வைகாசி மீ 1-ஆம் தேதி. தொண்டர் கிருஷ்ணமாச்சாரியும் இன்னும் இரண்டொரு வரும் சாணம் தெளித்துக்கொண்டிருந்தனர். மற்றத் தொண்டர்கள் ஸ்நானத்திற்குப் போவதும் வருவதுமாயிருந் தனர். பஜனைக்காகப் போன தொண்டர்கள் வடவண்டை ரஸ்தாவில் போலீசாரால் மடக்கப்பட்டு வெகு நேரம்வரை அங்கேயே உட்கார்ந்து சத்தியாக்கிரகம் பண்ணிக் கொண் டிருந்தனர். காலை 9 மணி சமயத்திற்கு அவர்கள் போலீஸா ரால் மூர்க்கமாய் இழுக்கப்பட்டும், தள்ளப்பட்டும், சுமக்கப் பட்டும் ஆசிரமத்திற்குக் கொண்டுவந்து சேர்க்கப்பட்டனர்.

தொண்டர்கள் மீண்டும் எழுந்து வெளியே போகப் பிரயத்தனஞ் செய்யவும் போலீசார் அவர்களை உள்ளே தள்ளித் தடிகளால் கண்டபடி அடிக்கத் தலைப்பட்டனர். ஓர் இரக்கமற்ற சப்-இன்ஸ்பெக்டர் தம் கைப்பிரம்பால் கை ஓயுமட்டும் அடித்துக் கொண்டிருந்தார். இந்தச் சமயத்தில் ஆசிரமத்தில் சாணம் தெளித்துக் கொண்டிருந்த கிருஷ்ணமாச்சாரியும் அந்த கும்பலில் கலந்து போய் போலீசார் அடித்த அடிகள் அவர் கழுத்திலும் கையிலும் பலமாக விழுந்து மூர்ச்சையாகிக் கீழே விழுந்துவிட்டார். உடனே போலீசார் தங்கள் மூடத்தனத்தை உணர்ந்து அடிப்பதை நிறுத்திச் சும்மாவிருந்தனர். பிறகு மூர்ச்சையாகக்கிடந்த தொண்டருக்கு அடிப்பட்ட இடங்களில் ஒற்றடம் கொடுக்கப்பட்டது. வலி தாங்கமுடியாமல் அப்படியே பிரக்ஞையற்று இருந்த அவருக்கு அன்று மூர்ச்சை தெளிய வெகு நேரமாயிற்று. முந்தின நாள் கைது செய்யப்பட்ட கிருஷ்ணசாமி, பி. கே. நாராயண ஐயங்கார் இருவரும் 6 மாதம் கடுங்காவல் தண்டனையடைந்தனர். தினகரனுக்கு ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

அன்றுமாலை தலைவர் கே. எஸ். சுப்பிரமணியம் தம்மோடு 19 தொண்டர்களை அழைத்துக்கொண்டு பஜனையாக புறப்பட்டார். வடவண்டை ரஸ்தாவில் பாதியளவுக்குச் சென்றதும் போலீசார் வந்து வழிமறித்துக் கொண்டு தலைவரையும் அவருக்கு அடுத்தாற்போல் நின்ற பிச்சைக்கோனர் என்ற தொண்டரையும் கைது செய்தார்கள். உடனே பின்வரிசையில் நின்ற தொண்டர் டி. ஆர். பத்பனையர் அணியைவிட்டு வெளியே வந்து உபன்னியாசம் செய்ய ஆரம்பித்தார். உடனே அவரும் கைது செய்யப்பட்டார். மற்ற தொண்டர்கள் எல்லோரும் இழுக்கப்பட்டும், அடிக்கப்பட்டும் தள்ளப்பட்டும் போலீஸாரால் ஆசிரமத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டனர். கே. எஸ். சுப்பிரமணியம் தமக்குப் பின் ஜி. ராமச்சந்திரன் அவர்களை அடுத்தத் தலைவராக இருக்க நியமனக் கடிதம் எழுதியிருந்தார். அது

போல் அந்த நிமிஷம் முதல் அவர் தலைவர் பதவியை ஏற்றுக்கொண்டு ஆசிரமத்தை நடத்தலானார்.

நிற்க. அன்று பகலில் ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதி அவர்களும், அண்ணாமலைப்பிள்ளையவர்களும் ஆசிரமத்திலேயே கைது செய்யப்பட்டிருந்தனர். ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதி அன்றைத் தினமே விசாரிக்கப்பட்டு ஒரு வருஷம் தண்டனை விதிக்கப்பட்டு வேலூர் சிறைக்குக் கொண்டுபோகப்பட்டார். அண்ணாமலைப் பிள்ளை ரிமாண்டில் வைக்கப்பட்டிருந்தார். எனவே அன்று வேதாரண்யம் சப் ஜெயில் லாக்கப்பில் தலைவர் கே. எஸ். சுப்பிரமண்யமும், டி. ஆர். மகாதேவய்யரும், திருச்செங்கோடு ஆசிரமத்தைச் சேர்ந்த வெங்கடராமய்யரும், பிச்சைக்கோனாரும், ஆர். டி. பத்மனாபய்யரும், அண்ணாமலைப்பிள்ளையும், அச்சுத நாயரும் இருந்தனர். இவர்களில் முந்தின நாள் கைது செய்யப்பட்ட டி. ஆர். மகாதேவய்யர், வெங்கடராமய்யர், அச்சுத நாயர் இவர்களுடைய வழக்கு அன்று விசாரணை நடந்தது.

லாக்கப் ஆனபிற்பாடு டெபுடி கலெக்டர் பொன்னுச்சாமிப் பிள்ளை அவர்கள் சப்ஜெயிலுக்கு 6 மணி சுமாருக்கு வந்து அந்த மூவருக்கும் ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருப்பதாயும் அச்சுத நாயர் பி வகுப்பு என்றும், கடலூர் சிறைக்கு அழைத்துச் செல்லப்படுவாரெனறும், மற்ற இருவரும் சி வகுப்பென்றும், திருச்சி சிறைக்கு அழைத்துச் செல்லப்படுவார்களென்றும் தெரிவித்துச் சென்றார். அதுபோல் மறுநாள் பகல் வண்டிக்கு அவர்கள் அழைத்துச் செல்லப்பட்டனர். டெபுடி கலெக்டர் பொன்னுச்சாமிப் பிள்ளை மறுநாள் வியாழக்கிழமை மன்னார்குடிக்குப் புறப்பட்டுச் சென்றார். ஆகையால் பாக்கி நாலு பேருடைய வழக்கு மறுநாள் விசாரணை நடக்கவில்லை. இதற்கிடையில் ஆசிரமத்தில் சத்தியாக்கிரகம் நடைபெற்றுக் கொண்டேயிருந்தது. தொண்டர்கள் பஜனை புறப்பட்டுப்

போய்க்கொண்டே யிருந்தனர்; போலீஸார் வழி மறித்துக் கொண்டே யிருந்தனர். மறிக்கப்பட்ட இடத்திலேயே தொண்டர்கள் உட்கார்ந்து எழுந்திராமல் பொழுது பூராவும் சத்தியாக்கிரகம் பண்ண ஆரம்பிக்கவே, போலீசார் ஒரு யுக்தி அனுசரித்தனர். எல்லோரையும் கைது செய்திருக்கிறோமென்று சொல்வது; உடனே தொண்டர்கள் மறு பேச்சின்றி எழுந்து அவர்களைத் தொடர்ந்து செல்வார்கள். போலீஸ் ஸ்டேஷன் வரை இட்டுக்கொண்டு போவது; வெகுநேரம் வரை உட்கார்த்திக் கொண்டு கடைசியாகப் போய்வாருங்கள் என்று வழியைக் காண்பித்து விடுவது. முதல் தடவை இவ்வாறு செய்யப்பட்டபோது தொண்டர்கள் ஏமாற்றமடைந்து திரும்பி வந்து விட்டனர். பின்னுல் போலீஸ் ஸ்டேஷனிலேயே உட்கார்ந்து சத்தியாக்கிரகம் பண்ண ஆரம்பித்துவிட்டனர். இது போலீஸாருக்கு ஏமாற்றத்தை விளைவிக்கக் கூடியதாய் இருந்தது. அதற்கு மேல் அவர்கள் அழைத்துவந்த தொண்டர்களில், தங்கள் புத்திக்கு அபாயகரமாகத் தோன்றிய பேர்வழிகளை மட்டும் பொறுக்கி எடுத்துக்கொண்டு பாக்கிப் பேரை அடித்துப் பலவந்தப்படுத்தி ஓட்டிகொண்டும் தள்ளிக்கொண்டும் தூக்கிக்கொண்டும் ஆசிரமத்திற்குக் கொண்டுபோய் விட்டுக் கொண்டு மிருந்தனர். சில தொண்டர்கள் இரவு நேரங்களிலும் ரஸ்தாவில் நடந்தபடியே வெகுநேரம் வரை 'மகாத்மா காந்திக்கு ஜே' என்று சொல்லிக்கொண்டும், தேசீய கீதங்களைப் பாடிக் கொண்டும், சத்தியாக்கிரகம் பண்ணிக்கொண்டும் இருந்தனர். இவர்களில் இரண்டொருவரைப் போலீஸார் மூர்க்கமாய் அடித்து அரையிலும் விரையிலும் காயமுண்டாகும்படி செய்து பரபரவென்று ஆடுமாடுகளைப் போலிழுத்து ஆசிரமத்தில் கொண்டுபோய்ப் போட்டுக்கொண்டிருந்தனர். அதனுல் அவர்கள் ஆசிரமத்திலேயே படுத்த படுக்கையாய்ச் சிலநாள் வரை கிடக்க வேண்டியிருந்தது. ஆனுலும் சத்தியாக்கிரகத்தை மட்டும் நிறுத்தாமல் நடத்திக்கொண்டு போயினர். தொண்டர்கள் ஒரு கோஷ்டி விட்டால் மற்ருெரு கோஷ்டியாகப் புறப்பட்டு

ஓய்வில்லாமல் சத்தியாக்கிரகம் பண்ண ஆரம்பிக்கவே போலீசாருக்குப் பெரிய கலவரமாய் போய் விட்டது. என்ன செய்வதென்று தெரியாமல் இரண்டொரு நாட்கள் தயங்கிக் கொண்டிருந்தனர். மே மீ 15வ ஸ்ரீ ரங்கசாமி ராஜா முதலியோர் லாக்கப்பில் வந்து சேர்ந்தனர்.

மறுநாள் மே மீ 16-ஆம் தேதி வெள்ளிக்கிழமையன்று சென்ற 14வ கைது செய்யப்பட்டு லாக்கப்பிலிருந்த நான்கு பேர்களுடைய வழக்கும் பொன்னுசாமிப் பிள்ளை முன்பாக விசாரணை நடந்து தலா ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. சுப்பிரமணியத்திற்கு மட்டும் பி வகுப்பும், மற்ற மூன்று பேருக்கும் ஸி வகுப்பும் செய் திருந்தார். மறுநாள் பகல் வண்டிக்கு சி வகுப்புள்ள மூன்று பேர் திருச்சிக்கும் பி வகுப்புள்ள ஒருவர் மட்டும் கடலூருக்கும் அழைத்துச் செல்லப்பட்டனர்.

## கடைசி சர்வாதிகாரி

வரவரப் போலீசாரின் கொடுமை வளர்ந்து கொண்டே போயிற்று. ஆசிரமத்தாரும் ஜி. ராமச்சந்திரன் தலைமையில் ஒவ்வொரு புது யுக்தியை கண்டுபிடித்துப் பிடி கொடுக்காமல் சமாளித்துக் கொண்டிருந்தனர். ஒருநாள் இருந்தாற் போலிருந்து போலீசார் ஆசிரமத்தை முற்றுகை போட்டு விட்டனர். யாரும் வெளியே போகக் கூடாதென்றும் அவசர நிமித்தமாக யாரேனும் வெளியே போவதாயிருந்தால் தலைவர் கையெழுத்திட்ட சீட்டைக் காட்டிவிட்டு இன்ன காரியத்திற்காக வெளியே போகிறோம் என்று சொல்லி விட்டுப் போகவேண்டு மென்றும் ஒருவித ஏற்பாடு செய் திருந்தனர். ஆசிரமத்தாருக்கு இந்த ஏற்பாட்டினால் மிகவும் அசௌகரிய மேற்படுவதா யிருந்தபடியால் கொஞ்ச நேர அனுபவத்தில் இதற்கு இணங்கி நடக்க முடியாதென்றும் பட்டினி கிடந்து சாவோமே தவிர, போலீசாருடைய தய வில் இருந்துகொண்டு ஒவ்வொரு தடவை வெளியே போகும் போது சீட்டைப் பெற்றுக்கொண்டு போய்க் கொண்டிருக்க முடியாதென்றும், போலீசாருக்குப் பதில்

தெரிவித்து விட்டனர். பட்டினியென்ற சொல்லைக் கேட்ட வுடன் போலீசாருக்குக் கலவர மேற்பட்டு விட்டது. சற்று நேரம் முற்றுகை அமுல் நடத்தி விட்டு பிறகு தளர்த்திக் கொண்டனர். அதன்மேல் தொண்டர்கள் அவரவர் இஷ்டம் போலப் போவதும் வருவதுமாயிருந்தனர். சத்தியாக் கிரகமும் நடைபெற்றுக் கொண்டே யிருந்தது.

இதுவரை பஜனையாகப் போன தொண்டர்கள் போலீசாரால் மறிக்கப்பட்டு ஆசிரமத்திற்குக் கொண்டு வரப்பட்டால் மீண்டும் வெளியே போகப் பிரியப்பட்டாலும் ஆசிரம வாசற்படி யென்று ஏற்படுத்தப் பட்டிருந்த வழியாக மட்டும் போகவேண்டிய ஏற்பாட்டுக்கு அடங்கி அந்த வழியை மட்டும் உபயோகித்து வந்தனர். பூராவும் தென்னோலைத் தடுக்குகளாலேயே மறைக்கப்பட்ட ஆசிரமத்தில் எந்த இடத்திலும் வழிசெய்ய இசைவு இருந்தும் ஒரு முறை, ஒழுங்கு, கட்டுப்பாட்டிற்கு அடங்கித் தலைவாசலை மட்டுமே போக்கு வரத்துக்குற்ற வழியாகக் கொண்டிருந்தனர். இதனால் போலீசாருக்கும் அந்த ஓர் இடத்திலேயே பந்தோபஸ்து பார்த்தால் போதுமானதாகவுமிருந்தது. ஆனால் போலீசார் அடாவடியாய் அமுல் நடத்துவதைப் பார்க்கவும் ஆசிரமத்தார் தங்கள் ஒழுங்கு முறைகளை யெல்லாம் சிறிது தளர்த்திக் கொண்டு தங்கள் சாத்வீக அடாவடியில் இறங்குவதே சமயத்திற்குத் தகுந்த ஔஷத மென்று முடிவு கட்டினர். அதுமுதல் உள்ளே கொண்டு வரப்பட்ட தொண்டர்கள் கீற்று மறைவுகளையெல்லாம் பிய்த்து எறிந்துவிட்டு வழியுண்டாக்கிக்கொண்டு வெளியே செல்லத் தலைப்பட்டனர். இதனால் ஒன்றுக்குப் பத்தாகப் போலீசாரின் தொகையை ஜாஸ்தியாக்கிப் பந்தோபஸ்து செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது.

இடையில் மதுரையிலிருந்து மே மீ 18உ ஆம் தேதியன்று மூன்ருவது படையும், மேமீ 26-ஆம் தேதியன்று நான்காவது படையும் வந்து சேர்ந்தன. மன்னார்குடியிலிருந்தும் மற்றும் பிற இடங்களிலிருந்தும் தொண்டர்கள் வந்து குவிந்து

கொண்டேயிருந்தனர். தொண்டர்களின் தொகை ஏராள மாய்ச் சேர்ந்துவிடவே இவர்களை எல்லாம் வேலை வாங்கு வதற்குப் பல விதங்களில் சத்தியாக்கிரகம் நடத்தும் அவசியம் ஆசிரமத்தாருக்கு ஏற்பட்டது. இதனால் போலீசாருக்குத் தாங்கமுடியாத தொல்லையும், சங்கடமும், கவலையும் நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டேயிருந்தன. இதன் மேல் அவர்கள் ஆசிரமத்தாருக்குப் புதிய தொல்லைகளை உண்டாக்கித் திணறவைக்க வேண்டுமென்று கங்கணம் கட்டினர். கிளை ஆசிரமங்கள் நடந்துவந்த இடங்களுக்குப் போலீசார் சென்று அங்கே ஆசிரமங்கள் அமைக்க இடங்கொடுத்தத் தயாள புருஷர்யாரென்று கேட்டறிந்து அவர்களைப் பயமுறுத்த ஆரம்பித்தனர். ஆசிரமத்தைக் காலிசெய்யும்படி நடவடிக்கை எடுக்கும்படிக்கும், அவ்வாறு செய்யாவிட்டால் அவர்கள் கைதுசெய்யப்படுவார்கள் என்றும் அவர்களிடம் போலீசார் மிரட்டினர். எல்லோரும் இவர்களுடைய பூச்சாண்டிக்குப் பயந்து விடவில்லை. கோடியக்கரையில் இடம் கொடுத்தவர் மட்டும் ஆசிரமத்தைக் காலி செய்து விடவேண்டுமென்று தலைவர் ஜி. ராமச்சந்திரனுக்குக் கடிதம் எழுதிவிட்டார். அதன்மேல் தலைவர் ஒருநாள் பிரயாணப்பட்டு கோடியக்கரைக் குப்போய் அந்த விஷயத்தை ஒரு விதமாய் ஒழுங்குபண்ணி விட்டு வந்தார்.

சர்க்கார் தரப்பில் என்னென்ன தாக்குதல் முறைகள் அனுஷ்டிக்கப்பட்டனவோ அவை ஒவ்வொன்றுக்கும் சகித்தல் முறையில் ஒவ்வொரு உபாயம் ஆசிரமத்தாரால் கண்டு பிடிக்கப்பட்டுக்கொண்டே வந்தது. இருதரப்பாரும் நசுக்கும் சாமர்த்தியமும், தடுக்கும் சாமர்த்தியமும் நவநவமான முறையில் காட்டிக் கொண்டேயிருந்தனர். எனவே முதல் யோசனை சர்க்காருடையதாகவும், அதை அனுசரித்து இரண்டாவது யுக்தி ஆசிரமத்தாருடையதாகவும் மாறி மாறி வந்து கொண்டிருந்ததைப் பார்க்க வெளியுலகத்தாருக்கு வெகு ருசிகரமாகத் தோன்றிக் கொண்டேயிருந்ததால், ஒவ் வொருவரும் இனி, சர்க்கார் என்ன யுக்திசெய்யப்போகிறார் கள் பார்க்கலாம் என்று சொல்லிக் கொண்டும், சர்க்கார்

யுக்தி வெளிப்பட்டதும் இனி ஆசிரமத்தார் என்ன யுக்தி செய்யப்போகிறுர்கள் பார்ப்போமென்றும் வெகு நுட்பமாய்க் கவனித்துக்கொண்டு இருந்தனர். அதற்குள் அதிகாரிகள் யோசனை செய்து அலுத்துப்போயினர். தங்களிடம் சகல அதிகாரங்களை வைத்துக்கொண்டு நிராதரவாய் இருப்பவர்கள் போல் ஏன் இருக்கவேண்டுமென்று அவர்களுக்குத் தோன்றிவிட்டது. சட்டுப்புட்டென்று முடித்தால்தான் காரியம் முடியுமென்று மேமீ 29-ஆம் தேதியன்று ஆசிரமம் பூராவையும் ஒரே மொத்தமாய்க் கைது செய்து ஆசிரமத்திலிருந்த எல்லாப் பொருள்களையும் பறிமுதல் செய்து கொண்டு ஆசிரமத்தையும் குருவிக் கூட்டைப் பிய்த்து எறிந்த குரங்கைப் போலப் பிடுங்கி எறிந்து தங்கள் வர்மத்தையெல்லாம் தீர்த்துக்கொண்டார்கள். அன்று டாக்டர் ராஜன் அவர்களும் அங்கு வந்திருந்தார். அவரும் சேர்ந்து கைது செய்யப்பட்டார். எல்லோரையும் 30, 31-ஆம் தேதிகளில் விசாரணை செய்து டாக்டர் ராஜன் ஒரு வருஷம் வெறுங்காவல் தண்டனையடைந்து ஏ வகுப்பில் சிபாரிசு செய்யப்பட்டார். தலைவர் ஜி. ராமச்சந்திரனும், ஹரிஹரசர்மாவும், ஆனந்ததீர்த்தாவும் ஒவ்வொரு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டு பி வகுப்பில் சிபாரிசு செய்யப்பட்டனர். மற்றத் தொண்டர்களெல்லோருக்கும் ஒவ்வொரு வருஷம் கடுங்காவல் விதிக்கப்பட்டு ஸி வகுப்பில் சிபாரிசு செய்யப்பட்டனர் ஸி வகுப்புக் கைதிகளெல்லோரும் திருச்சிக்கும் பி வகுப்புக் கைதிகள் கடலூருக்கும் அனுப்பப்பட்டனர். ஏ வகுப்புக் கைதி ஒருவர் மட்டும் சென்னைக்கு அனுப்பப்பட்டார். இந்த விதமாக வேதாரண்ய யாத்திரையும், உப்புச் சத்தியாக்கிரகமும் ஒன்றரை மாதகாலம் வரை நீடித்து நடைபெற்றது. பின்னைலும் ஆசிரமமின்றித் தொண்டர்கள் அங்கங்கே வீடுகளில் தங்கிச் சத்தியாக்கிரகம் நடத்திக்கொண்டு தானிருந்தார்கள். ஆனால் அதற்கென்று ஓர் ஆசிரமம் இல்லாத குறையால் தாயில்லாப் பிள்ளையைப் போலப் பலவித சங்கடங்களுக்கு ஆளாகி அவ்வளவு சோபிதமாய்ச் சத்தியாக்கிரகம் நடைபெறுவதற்கு இல்லாமற் போயிற்று. என்றாலும் நாட்டில்

ஒருவித உணர்ச்சியை இந்தச் சத்தியாக்கிரகம் ஏற்படுத்தி விட்டபடியால் அங்கங்கே மதுரை, கடலூர், சென்னை, தஞ்சை, திருச்சி முதலிய இடங்களில் சட்டமறுப்பு நடந்து கொண்டேயிருந்தது.

# சில நினைவுகள்:



காந்தியடிகள் தண்டியில் உப்புச் சட்டத்தை மீற முடிவு செய்த போது தென்னாட்டிலும் உப்புச் சட்டத்தை மீற வேண்டும் என்கின்ற எழுச்சி மிகுதியாக இருந்தது. தென்னாட்டில் உப்பு உற்பத்தியில் தூத்துக்குடியும், வேதாரண்யமுமே முன்னணியில் இருந்து வந்திருக்கின்றது.

இது பற்றி முடிவு செய்ய தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி வேலூரில் ஒரு கூட்டம் நடத்தியது. அக்கூட்டத்தில் ராஜாஜி அவர்கள் தலைமையில் உப்புச் சத்தியாக்கிரக இயக்கத்தை வேதாரண்யத்தில் நடத்துவது என்று தீர்மானிக்கப்பட்டது.

இதற்கு முக்கிய காரணம் சர்தார் வேதரத்னம் பிள்ளை அவர்கள் உப்புச் சத்தியாக்கிரகத்தை திறம்பட நடத்திக் கொடுக்க மிகவும் ஊக்கமுடன் முன் வந்ததே. இதற்கு அடிப்புலனாக 1929ல் சர்தார் வல்லபாய் பட்டேல் அவர்கள் தலைமையில் மகாதேவதேசாய் போன்ற பெரிய தலைவர்களைக் கொண்டு தமிழ் மாகாண மகாநாடு வெற்றியுடன் நடத்தி ஒரு தக்க மனோபாவத்தை வேதாரண்யம் பகுதியில் ஏற்படுத்தியிருந்தார்கள். மேலும் 1927ல் காலம் சென்ற திரு. சீனிவாச ஐயங்கார், ஹிந்து பத்திரிகை ஆசிரியர் திரு. ரெங்கசாமி ஐயங்கார், திரு. ராஜாஜி, திரு. எஸ். முத்தையா முதலியார் போன்ற பெரிய தலைவர்கள் கூடி இந்திய அரசியலில் காங்கிரஸ் மகாசபையின் புதிய திட்டத்தை இங்கு உருவாக்கினார்கள். இப்படி தேசிய போராட்டத்தின் நிலைக்களனாக விளங்கக்கூடிய காரியங்களை சர்தார் அவர்கள் வேதாரண்யத்தில் செய்திருந்ததால் உப்புச் சத்தியாக்கிரகத்தை வேதாரண்யத்தில் தான் வெற்றிகரமாக நிறைவேற்ற முடியும் என்று சர்தார்

வேதரத்னம் அவர்கள் அழைப்பை ஏற்று வேலூர் மகாநாடு தீர்மானம் நிறைவேற்றியது.

1930ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 30ம் தேதி விடியற்காலையில் திரு. ராஜாஜி அவர்கள் உப்புச் சட்டத்தை மீறப் போவதாக அரசாங்கத்திற்கு சத்தியாக்கிரக விதிமுறைகளின் படி அறிவிப்பு கொடுத்திருந்தார். வெள்ளை அரசாங்கம் திரு. ராஜாஜி அவர்கள் உப்புச் சட்டத்தை மீற புறப்படும்போது கைது செய்து சட்டத்தை மீற முடியாமல் செய்து விட வேண்டுமென்று திட்டமிட்டிருந்தது. உப்பளங்கள் இருக்கும் அகஸ்தியாம்பள்ளி கிராமத்திற்கு செல்லும் எல்லா சாலைகளிலும் போலீஸாரை சுவர் போல வரிசையாக நிறுத்திக் கண்காணித்து வந்தது. எப்படியும் சட்டத்தை மீறி விடுவது என்று திரு. சர்தார் வேதரத்னம் அவர்களும் திரு. ராஜாஜியும் கலந்து திட்டமிட்டு வேறு ஒரு வழி வகுத்துக் கொண்டார்கள். வேதாரண்யம் அந்தக் காலத்தில் நிறைய மரம் செடி கொடிகளும் சப்பாத்திக் கள்ளி, தாழை முதலியவைகளும் நிறைந்த பகுதியாக இருந்தது. கிராமாந்திர பகுதிகளுக்குள் அனுபவப்பட்டவர்கள் மட்டும்தான் குறுக்குப் பாதைகளில் செல்ல முடியும். சர்தார் வேதரத்னம் அவர்கள் தனது உப்புத் தொழிலில் அப்போது வேலை பார்த்து வந்த திரு. நாகநாத தேசிகர் அவர்களையும், திரு. மாரிமுத்து தேவர் அவர்களையும் உப்புச் சட்டத்தை மீற வேண்டிய இடத்திற்கு குறுக்குப் பாதை வழியாக அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்திருந்தார்கள். விடியற்காலை 3மணிக்கெல்லாம் இருட்டு நேரத்தில் திரு. ராஜாஜி அவர்களை அழைத்துக் கொண்டு திரு. நாகநாத தேசிகர் அவர்களும், திரு மாரிமுத்து தேவர் அவர்களும் ஊரின் கிழக்குப் பக்கமாக உள்ள கானலாற்றங்கரை சென்று தாழங்காடுகள் நிறைந்த ஒற்றையடிப்பாதை வழியாக உப்புச் சட்டத்தை மீற வேண்டிய இடத்திற்கு விடியற்காலை 5மணி சுமாருக்குச் சென்று விட்டார்கள். காலை 6மணிக்குத்தான் உப்புச் சட்டத்தை மீறப்

போவதாக அரசுக்கு அறிவித்திருந்ததால் 6மேணி வரையில் அங்கேயே தாழங்காட்டு மறைவில் காத்திருந்தார்கள்.

அப்போது உப்புக்கு கடுமையான அரசாங்க வரி யிருந்தது. உப்பளத்தைச் சுற்றிலும் ஆயுதம் தாங்கிய காவல்-காரர்கள் காவல் நிலையம் அமைத்து இரவு பகல் இடைவிடாது ஒருவர் மாறி ஒருவர் காவலில் இருப்பார் கள். அன்று அந்தப் பகுதியின் காவல் நிலையத்தில் ஒரே ஒரு ஆயுதம் தாங்கிய காவல்காரர் நின்றுக் கொண்டிருந் தார். மற்ற உயர் அதிகாரிகள் அனைவரும் அகஸ்தியம்பள்ளி உப்பள இலாகா அலுவலகத்தில் திரு. ராஜாஜியைக் கைது செய்வதற்காக காத்திருந்தார்கள்.

காலை 6 மணி ஆனதும் திரு. ராஜாஜி இயற்கையாக உப்புப்பட்டிருந்த அந்த உப்பளத்தில் கையில் உப்பை எடுத்துக் கொண்டு "வந்தே மாதரம்" என்று கோஷித் தார். உடனே அங்கே காவலில் இருந்த ஆயுதம் தாங்கிய காவல்காரருக்கு நடுக்கம் எடுத்துவிட்டது. அந்த ஆள் திரு. ராஜாஜியை நோக்கி ஓடி வந்தார். திரு. ராஜாஜி அந்தக் காவல்காரரை பயப்படாதே என்று அமைதிப் படுத்தி உனது மேலதிகாரிகளிடத்தில் சென்று தகவல் கொடுத்துவர எவ்வளவு நேரம் ஆகும் என்று கேட்டார். காவல்காரர் 15 நிமிடம் ஆகும் என்று சொன்னார். திரு. ராஜாஜி அந்தக் காவல்காரரிடம் "நீ பயப்படாமல் உன் மேலதிகாரிகளிடம் சென்று விபரங்கள் தெரியப் படுத்திவிட்டு வா" நான் இன்னும் ½ மணி நேரம் வரை இங்கிருந்து எங்கும் போகாமல் இங்கேயே இருக்கிறேன்" என்று சொல்லி அனுப்பி வைத்தார். அந்தக் காவல்காரர் மூச்சிறைக்க ஓடிச் சென்று மேலதிகாரிகளை அழைத்துக் கொண்டு வந்து பின்னர் ராஜாஜி கைது செய்யப்பட்டார்.

இரண்டாம் நாள் :

வேதாரண்யத்தில் சத்தியாக்கிரக இயக்கத்திற்கு சர்தார் தான் அடித்தளமாக இருக்கிறார் என்பதைக் கருதி அவரையும் கைது செய்துவிட்டார்கள். சர்தார் அவர்களின் உப்பளம் முதலிய சொத்துக்களை அரசு பறிமுதல் செய்துவிட்டது.

அந்த சமயம் டிப்டி கலெக்டராக இருந்த திரு. பொன்னுசாமி பிள்ளை என்பவர் சர்தாரின் 90 வயது நிரம்பிய தந்தை திரு. அப்பாக்குட்டி பிள்ளை அவர்களிடம் அணுகி "நீங்கள் உங்கள் பையனை மன்னிப்பு கேட்டுக் கொள்ளச் செய்யுங்கள். பறிமுதல் செய்த சொத்துக்கள் அனைத்தையும் திரும்பக் கொடுப்பதுடன் மேலும் பல சலுகைகளை அரசிடமிருந்து வாங்கித் தருவதாகவும் சொன்னார்கள்." சர்தார் அவர்களின் வயதான தந்தையோ "அவன் மன்னிப்பு கேட்டுக் கொண்டு வெளியே வருவதைக் காட்டிலும் சிறைக்கேச் செல்லட்டும்" என்று தனது பாசம் மிகுந்த மகனை சிறைக்கு அனுப்பி வைத்தார்கள்.

# திரு. காங்கிரஸ் சுப்பையன் அவர்களின் தொண்டு.



சர்தார் வேதரத்னம் அவர்களின் கூடவே அவர்களின் நிழல் போலவே எப்போதும் உடனிருந்து தேச சேவை யில் சிறு வயதிலேயே ஈடுபட்ட இவரின் தொண்டும் மிகவும் நினைவு கூறத்தக்கது. சத்தியாக்கிரக இயக்கம் தொடங்கியதும் அரசின் கெடுபிடி, அடக்குமுறை மிகவும் கடுமையாகியது. சத்தியாக்கிரக தொண்டர்களுக்கு உணவு முதலியன கொடுப்பதோ மற்ற எந்த வகையான உதவி கள் செய்வதுமோ கடுங்குற்றமாக அறிவிக்கப்பட்டு இத் தடையை மீறுபவர்கள் கடும் தண்டனைக்குள்ளானர்கள். இந்த நிலையில் அந்தத் தொண்டர்களுக்கு மக்களால் மறைமுகமாக அளிக்கப்படும் உணவு வசதிகளைப் பற்றி தெரிவிப்பதும் வெளியில் போலீஸ் இலாக்காவில் செய்து வரும் ஏற்பாடுகள் பற்றி சத்தியாகிரகிகளுக்கு தெரியப் படுத்துவதும் ஒரு முக்கியமான பணியாக இருந்தது. இப்பணியை மிகத் திறம்படச் செய்து வந்தார் திரு. சுப்பையா. தொண்டர்கள் இருக்குமிடத்தின் அருகே நடந்து சென்று கொண்டிருக்கையில் சாலையிலுள்ள மரங்க ளின் எண்ணிக்கையை குறிப்பாக வைத்துப் போகும் போதே 12 செ. மரம் என்று சொல்லிப் போவார். அல்லது தேர்முட்டி என்று சொல்லிச் செல்வார். தொண்டர் கள் அங்கெல்லாம் சென்று பொது மக்கள் தொண்டர்களுக் காக வைத்திருக்கும் உணவுப் பொருட்களை எடுத்துக் கொள்வார்கள். அதேபோன்று இவர் அப்போது மிகவும் சிறுவராக இருந்த காரணத்தினல் போலீஸார் செய்து வரும் அடக்கு முறை திட்டங்களை அறிந்து சத்தியாக்கிரகி களுக்கும் தெரிவிப்பார். சிறியவரானபடியால் போலீஸார் இவரை சந்தேகிக்கவில்லை. விபரம் தெரிந்திருக்குமேயானல் இவருக்கும் செம்மையான புளியம் விளாரடி கிடைத்திருக் கும். எவ்வளவு சாமார்த்தியமாக நடந்தும் சில தினங்க

ளில் போலீஸாருக்கு இவரது குட்டு வெளிப்பட்டு இவரைப் பிடித்துப் போய் செம்மையான புளியம்விளாரு அடி கொடுத்து விரட்டி விட்டார்கள். அன்று முதலே சர்தார் அவர்களுடன் எல்லா போராட்டங்களிலும் ஈடுபட்டு பின்னர் 1932 ல் நடந்த திருநெல்வேலி மகாநாட்டில் திரு. வேதரத்னம் பிள்ளை அவர்களுக்கு சர்தார் பட்டம் கொடுத்த கூட்டத்தில் அரசுக்கு விரோதமாகப் பேசிய காரணத்திற்காக சர்தார் அவர்களுடன் சேர்த்து 124- சட்டத்தின் கீழ் இவரும் கைது செய்யப்பட்டார்.

# மேட்டுப்பாளையம் திரு. ராஜு அவர்கள்.



உப்புச்சத்தியாக்கிரக தொண்டர்கள் திருச்சியிலிருந்து கால் நடையாக வந்தபோது அவர்களோடு வந்த 16 வயது சிறுவன் திரு. ராஜு. இவர் கோவை மாவட்டம் மேட்டுப்பாளையத்தைச் சேர்ந்தவர். மிகவும் ஊக்கமுள்ள வர். உப்புச்சத்தியாக்கிரக முகாமை நிறைய போலீஸ் காரர்கள் சுற்றி வளைத்து அங்கு சட்டத்தை மீறி, கொண்டு வரப்பட்டிருக்கும் உப்பை பறிமுதல் செய்ய முயன்றது. அப்போது தொண்டர்கள் உப்பை நடுவில் வைத்து சுற்றி லும் வட்டமாக கைகோர்த்துக் கொண்டு சக்ரவியூகம் போல் உட்கார்ந்து கொண்டார்கள். போலீஸார் எவ்வளவோ முயற்சித்தும் அவர்கள் வியூகத்தைப் பிரித்து நடுவில் சென்று உப்பை எடுக்க முடியவில்லை. நடுவில் உப்பின் மேல் உட்கார்ந்திருந்த திரு. ராஜு தனது இரண்டு கையி லும் உப்பை வைத்துக்கொண்டு வாயிலும் உப்பை அடக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். போலீஸார் எவ்வளவு கடுமையாக மணிக்கட்டில் அடித்தும், தொண்டையை நெறித்தும் கூட அவரிடமிருந்து, உப்பை பறிக்க முடியவில்லை. போலீஸாரின் அடக்குமுறை தாங்காமல் மூர்ச்சித்து விழுந்துவிட்டார். உயிருக்கே ஆபத்தான நிலைமை வந்து விட்டது. போலீஸாரும் திகைத்து சிந்தித்திருக்கின்ற நிலையில் அனைவரையும் போலீசார் கைதுசெய்துவிட்டார்கள். அப்போது அந்த அணிக்குத் தலைவராக இருந்த டாக்டர் ருக்மணிலக்ஷ்மிபதி அவர்கள் கட்டளையிட்டதின் பேரில் மயக்க நிலையில் தன் கையில் இருந்த உப்பை கையை விரித்துவிட்டார். அப்போது பெற்ற அடியின் காரணமாக கடைசிவரை அவருடைய கை சிறிதும் ஊனமாகவே இருந் தது. அண்மையில் இவர் காலமாகிவிட்டார்.

# தியாகி திரு. வைரப்பன் அவர்கள்.



திரு. வைரப்பன் அவர்கள் அக்காலத்தில் 15, 16 வயதுச் சிறுவன். தனது குடும்பத்தொழிலாகிய நாவிதர் வேலையைச் செய்து வந்தார்.

வேதாரண்யத்தில் அரசு உப்புச் சத்தியாக்கிரக தொண்டர்களுக்கு எந்த உதவியும் செய்யக் கூடாதென்று அடக்குமுறை சட்டம் விதித்திருந்தது. நேர்மாருக மக்கள் அரசாங்க அதிகாரிகள் ஒருவருக்குமே எந்தவிதமான உதவியும் செய்வதில்லை என்று கட்டுப்பாடக ஊர்க்கட்டுப்பாடு செய்து வைத்திருந்தார்கள். இந்த நிலையில் கிராமத் தொழிலாளர் எவரும் அரசு அதிகாரிகளுக்கு சலவை செய்து கொடுப்பதோ, முடி வெட்டுவது போன்றவைகளோ செய்வதில்லை என்று கட்டுப்பாட்டுடன் இருந்தார்கள்.

ஒருநாள் காவல்துறையைச் சேர்ந்த ஒரு போலீஸ்காரர் சாதாரண கிராம மக்கள் போன்று உடையணிந்துக்கொண்டு இந்த திரு. வைரப்பன் அவர்களிடம் முகக் க்ஷவரம் செய்து கொள்ளவந்தார். யார் என்று தெரியாமல் திரு. வைரப்பனும் வேலையைத் தொடங்கிவிட்டார். சற்று நேரத்திற்கெல்லாம் அவ்வழியாக வந்தவர் மூலம் இவர் போலீஸ்காரர் என்று தெரிந்ததும் பாதி க்ஷவரத்திலேயே கத்தியை மடக்கி வைத்து விட்டு மேற்கொண்டு செய்ய மறுத்துவிட்டார். உடனே போலீஸ்காரர் அவரை பிடித்துச் சென்று அடித்து இம்சை படுத்தி க்ஷவரத்தை பூர்த்தி செய்யச் சொல்லி எவ்வளவோ துன்புறுத்தியும் "என் உயிர் போனலும் செய்ய மாட்டேன்" என்று மறுத்துவிட்டார். பின்னர் இவருக்கு ஆறு மாத கடுங்காவல் சிறைத்தண்டனை வழங்கப்பட்டது. இவர் இன்னும் அந்த நல்ல நினைவோடு இருந்து வருகிருர்.

உப்புச் சத்தியாக்கிரக காலங்களில் பல இளைஞர்கள் மிகவும் ஊக்கமுடன் தொண்டர்களுக்கு ஒத்துழைப்புக் கொடுத்து வந்தார்கள். அரசு பிறப்பித்திருந்த 144 தடை யுத்தரவை மீறி அடிபட்டுக் கிடக்கும் தொண்டர்களுக்கு தண்ணீர் முதலியன கொடுத்து முதலுதவி செய்தும் மிகவும் மோசமாக நடந்துக் கொண்ட போலீஸாரை எதிர்த்தும் பல இளைஞர்கள் போராடியிருக்கின்றார்கள். அவர்களில் குறிப்பாக இன்னும் நினைவு கூறத்தக்கவர்கள் திரு. பஞ்சனதம் பிள்ளை, வேதாரண்யம் திரு. சங்கரமூர்த்திப் பிள்ளை ஆகியோர் நினைவுகூறத் தக்கவர்கள். ஒரு சமயத்தில் ரோட்டில் இம்மாதிரியான தொண்டர்களோடு தொடர்புக் கொண்டதற்காக ரோட்டில் சென்றுக் கொண்டிருந்த திரு. திருக்குவளை அருணசல தேசிகர் அவர்கள் கைது செய்யப் பட்டார். சிறையில் கைதிகளுக்கு பல விதமான வேலைகள் கொடுப்பார்கள். செடிகளுக்கு தண்ணீர் பாய்ச்சுதல் போன்ற வேலைகளை செய்யச் சொல்லும்போது தொண்டர்கள் வேருக்கு தண்ணீர் ஊற்றுகிறேன் என்று வேரைப் பறித்தும் இன்னும் பல விதமாகவும் அதிகாரிகளுக்குத் தொல்லை கொடுத்து வந்தார்கள். இதைச் சமாளிக்க ஜெயில் சூப்ரிண்டென்டெண்ட் அணிவகுப்பு ஒன்று நடத்தி அவர்களுக்குத் தெரிந்த வேலையைக் கொடுக்கலாம் என்பதற்காக ஒவ்வொரு தொண்டராக உங்களுக்கு என்ன வேலை தெரியும் என்று கேட்டுக் கொண்டு வந்தார். சூபரின்டெண்டெண்ட் ஒரு ஆங்கிலேயர். திரு. அருணசல தேசிகர் முறை வந்தது. அருணசல தேசிகர் வைதீக காரியங்கள் செய்து கொடுக்கும் குடும்பத்திலிருந்து வந்தவர். அவரை சூபரிண்டெண்டெண்ட் என்ன வேலை செய்வாய் என்று கேட்டபோது உங்களுக்கு கருமாதி செய்ய வந்திருக்கிறேன் என்று சொன்னர். ஆங்கிலேயர் முகம் கருத்துவிட்டது.

உப்புச் சத்தியாக்கிரக முகாம் நடத்தியதற்கு சர்தாரின் குடும்பத்திலிருந்து பாத்திர பண்டங்கள் கொடுத்ததோடு கூட அப்போது வேதாரண்யம் கோவிலின் தர்மகர்த்தாவாக

இருந்த ஸ்ரீலஸ்ரீ குமாரசாமி பண்டாரசன்னிதி அவர்கள் நிறைய பாத்திரங்களை கொடுத்து உதவி செய்தார் கடைசியாக முகாமை வளை[illegible]து அனைவரையும் கைது [illegible] சென்ற சமயத்தில் முகாமிலிருந்த அனைத்துப் பாத்திரங்கள் இதர பொருள்களும் அரசால் ஏலம் விடப்பட்டது. உள்ளூ ஒருவருமே முதல் நாள் ஏலம் கேட்கவில்லை. மறு [illegible] அரசு அதிகாரிகளை வைத்தே அவர்களை சாதாரண உடை நிற்கவைத்து ஏதோ பெயருக்கு ஏலம் போட்டதாகப் பூர் செய்தார்கள். இதில் ஸ்ரீலஸ்ரீ குமாரசாமி பண்டாரசன்னி அவர்களுக்கும் பெரும் இழப்பு ஏற்பட்டது.